

# மர்மக் குளம்

வெகு காலத்திற்கு முன் அமராவதி நகர மன்னனின் தர்பாரில் குலசேகரன் என்பவன் பணிபுரிந்து வந்தான். அவனது ஒரே மகன் ஜெயசீலன். சிறு வயதிலேயே தாயை இழந்து விட்ட அவனை குலசேகரன் செல்லம் கொடுத்து வளர்த்து வந்தான். ஜெயசீலனும் நன்கு கற்று போர்க் கலையிலும் நல்ல தேர்ச்சி பெற்று இருபதாவது வயதை அடைந்து விட்டான். அப்போது குலசேகரன் தன் மகனை அரசாங்க வேலையில் சேர்க்க எண்ணினான். மன்னனிடம் அதுபற்றி சரியான சமயத்தில் பேசலாம் என்று எண்ணிக் கொண்டு இருக்கையிலேயே திடீரென அவன் மாரடைப்பால் இறந்துவிட்டான்.

ஜெயசீலன் யாரும் அற்றவனாக ஆகிவிட்டான். அவனுக்கு அறிவுரை கூறுவோர் யாருமே இல்லை. அதனால் அவன் கெட்டவர்களோடு சேர்ந்து தன் தந்தை விட்டுச் சென்ற சொத்தை அழிக்கலானான். சூதாட்டத்தில் அவன் முழுக்கமுழுக்க ஈடுபட்டு விட்டான். அதனால் நான்கே மாதங்களில் அவனது தகப்பனார் விட்டுப் போன சொத்து முழுவதும் கரைந்து விட்டது. முடிவில் அவன் சாப்பாட்டிற்குக் கூட வழி இல்லாமல் திண்டாடலானான். அழுக்கடைந்த ஆடைகளுடன் அவன் ஊருக்குள் நடமாட் வெட்கப்பட்டு சூதாட்ட வீட்டினுள்ளேயே அடைந்து கிடந்தான்.

இதைக் கண்ட தேவசர்மா என்ற அவனது நண்பன் ''நண்பா! இப்படியே வருத்தப்பட்டுக் கொண்டிருந்தால் எவ்விதப் பலனும் ஏற்பட்டு விட முடியாது. சூதாட்டம் ஒருவனை பாழாக்கிவிடும் என்பதை நீ இன்னமும் அறிந்து கொள்ளவில்லை போலிருக்கிறது. நீ நன்கு படித்தவன். போர்க் கலைகளில் தேர்ந்தவன்.



எனவே, நீ ஏன் வீணாகக் கவலைப் பட்டுக் கொண்டிருக்க வேண்டும்?'' என்று கூறினான்.

ஜெயசீலனும் கொஞ்ச நேரம் யோசித்துவிட்டு, ''நண்பா! நீ தான் உண்மையான நண்பன். மனம் உடைந்து நிற்கும் நிலையில் நீ எனக்குச் சரியான வழிகாட்டியாக இருக்கிறாய்!'' என்று உள்ளம் நெகிழக் கூறினான். தேவசர்மா அதற்கு பதிலளிக்க ஆரம்பிக்கையில் வெளியே பெருத்த சத்தமும் கூச்சலும் கேட்டது. திடீரென கிருபாணஜித்தன் என்ற படைத் தலைவன் நாலைந்து வீரர்களுடன் அந்த சூதாட்ட வீட்டிற்குள் புகுந்து அங்கிருந்தவர்களைக் கண்மூடித் தனமாகச் சவுக்கால் அடிக்கலானான்.

அதைக் கண்ட ஜெயசீலன், ''ஐயா! இதென்ன அநியாயம்? நீங்கள் இப்படிச் செய்வது சரியா?'' என்று கேட்டான். அதைக் கேட்ட கிருபாணஜித்தன் கடும் குரலில் ''நான் சூதாடிகளிடமிருந்து அறிவுரைகள் பெறத் தேவையில்லை'' எனக் கூறியவாறே ஜெயசீலனையும் சவுக்கால் அடிக்கத் தொடங்கினான். ஜெயசீலனோ முதலாவது சவுக்கடி பட்டதும் தாவிக் குதித்து அருகிலிருந்த ஒரு மூங்கில் கழியை எடுத்து கிருபாணஜித்தனின் தலை மீது பலமாக அடித்தான். அடிபட்ட கிருபாணஜித்தன் 'ஐயோ!' என்று அலறினான். மறுகணம் அவன் தன் வாளை உருவி எடுத்து ஓங்கவே, ஜெயசீலன் அவனது இடுப்பில் பலமாக உதைத்தான்.

கீழே சுருண்டு விழுந்த கிருபாணஜித்தன் வாரி சுருட்டி எழுந்து தன் குதிரையின் மீதேறி அங்கிருந்து தப்பி ஓட முயன்றான். ஆனால் ஜெயசீலன் சட்டெனத் தாவி அதே குதிரை மீது கிருபாணஜித்தனின் பின்னால் உட்கார்ந்து குதிரையின் கடிவாளத்தைப் பற்றிக் கொண்டான்.

பிறகு அவன் கிருபாணஜித்தனைக் குத்திக் கொண்டே இருக்க, குதிரை வேகமாக ஓடி அரண்மனை வாசலில் நின்றது. அப்போது அரண்மனை உப்பரிகையில் மன்னன் தன் அமைச்சருடன் ஏதோ ஒரு விஷயமாக ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தான். அரண்மனை வாசலில் இருவர் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு கோபம் கொண்டு அங்கே நின்ற ஒரு வீரனிடம், ''நடுத் தெருவில் சண்டை போடும் அந்தக் குடிகாரர்கள் இருவரையும் பிடித்து

இழுத்து வா!'' என்று கட்டளை இட்டான்.

அந்த வீரனும் கிருபாணஜித்தனையும் ஜெயசீலனையும் பிடித்துத் தள்ளிக் கொண்டு போய் மன்னன் முன் நிறுத்தினான். மன்னன் தன் குதிரைப் படைத் தலைவனான கிருபாணஜித்தனை அடையாளம் கண்டு கொண்டான். அதனால், ''கிருபாணா! படைத் தலைவனான நீயா நடுத் தெருவில் இந்தக் குடிகாரனுடன் சண்டை போடுகிறாய்? வெட்கமாக இல்லை உனக்கு?'' என்று கேட்டான். கிருபாணஜித்தனும் எதையும் மறைக்காமல் நடந்ததை எல்லாம் கூறினான். அதைக் கேட்ட மன்னன் மேலும் கோபம் கொண்டு ''கிருபாணா! நீ இப்படிப்பட்ட தொடை நடுங்கியா? இதனால் உன்னால் நம் ராணுவத்திற்கே கெட்ட பெரும் அவமானமும் ஏற்பட்டுவிட்டது. எனவே, உன்னை நாடு கடத்த உத்தரவிடுகிறேன். உன் இடை வாளைக் கீழே வைத்துவிட்டுப்போய்விடு!'' என்று உறுமினான்.

கிருபாணஜித்தன் மறுபேச்சு பேசாமல் தன் வாளைக் கீழே வைத்து விட்டு அங்கிருந்து சென்றான். அப்போது மன்னன் பற்களை 'நறநற' வென்று கடித்தவாறே ஜெயசீலனைப் பார்த்து, ''அடே, சூதாடியே! உன் தலையை வெட்டி எறியும்படி தண்டனை விதிக்கிறேன். நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?'' என்று கேட்டான். அதைக் கேட்ட ஜெயசீலன் சற்றும் பயப்படாமல், ''அரசே!



நீங்கள் என் தலையை வெட்டி எறியும்படிக் கட்டளை இட்டிருக்கிறீர்கள். இதனால் நான் எதைக் கேட்டாலும் எனக்கு எவ்விதப் பயனும் இல்லையே!'' என்று கூறினான்.

அதைக் கேட்ட மன்னன், ''உனக்கு உன் உயிர் போய்விடுமே என்ற அச்சம் இல்லையா?'' எனக் கேட்டான். அவனும், ''நான் பணமில்லாது எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். அதனால் என் உயிர் போவது பற்றி நான் கொஞ்சமும் கவலைப்படவில்லை'' என்றான். மன்னனும் ''சூதாட்டம் ஒருவனை இந்த நிலைக்குத் தான் கொண்டு வந்து விட்டு விடும்'' என்றான். அப்போது அமைச்சர், ''அரசே! இந்த இளைஞன் நமது முன்னாள் ஊழியன் குலசேகரனின் ஒரே மகன். குலசேகரன் இப்போது



உயிருடன் இல்லை. எனவே இவனுக்குக் கொஞ்சம் இரக்கம் காட்டுங்கள்'' என வேண்டினார். மன்னனும், ''சரி, இவனைக் கொல்ல வேண்டாம். இவனை நாடு கடத்தும் படி தண்டனை அளிக்கிறேன்'' என்றான். ஜெயசீலனும் மன்னனை வணங்கி அங்கிருந்து செல்லும்போது மன்னன் ''இதோ பார். கிருபாணஜித்தன் விட்டுப்போன வாளை எடுத்துக் கொள். இன்னும் ஒரு வாரத்துள் நீ என் நாட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டும்,'' என்று கடுமையாகக் கூறி எச்சரித்தான்.

ஜெயசீலனும் உடனேயே நகரை விட்டு வெளியேறினான். காட்டு வழியே அவன் ஒரு வார காலம் சென்று வேறொரு நாட்டு தலைநகரின் எல்லையை அடைந்தான். அப்போது மாலைப் பொழுது முடிந்து இரவாகிவிட்டது. அந்த இரவை ஒரு மரத்தடியில் கழிப்பது என எண்ணி சுற்றிலும் பார்த்தான். ஒரு பெரிய ஆலமரம் தென்படவே, அதனடியில் படுத்து அவன் தூங்கலானான். திடீரென்று, ''காப்பாற்றுங்கள்! என்னைக் காப்பாற்றுங்கள்!! மகாகாலன் என்னை விழுங்கப் பார்க்கிறான்'' என்ற உரத்த குரலில் யாரோ கத்தும் சத்தம் கேட்டது.

ஜெயசீலன் வாளை எடுத்துக் கொண்டு எழுந்து, அந்தக் குரல் எழுந்த இடத்தை நோக்கி ஓடினான். அந்த இடம் மயானம். இரண்டு மூன்று பிணங்கள் எரிந்து கொண்டிருந்தன. அந்த வெளிச்சத்தில் தலைவிரி கோலத்துடன் கறுப்பான ஆடைகளை அணிந்த ஒருவன் அங்குமிங்கும் ஓடி பயந்து கத்திக் கொண்டிருப்பதைக் கண்டான். அவ்வுருவத்தை வெள்ளை ஆடை அணிந்த மற்றொரு உருவம் துரத்திக் கொண்டிருந்தது. அது ''அடே, நில்! மகாகாலனின் ஊழியனான காலகாலனாகிய என்னைக் கண்டு பயப்படும் நீ ஏன் மகாகாலனை ஆராதிக்கிறாய்?'' என்று கேட்டது.

ஜெயசீலன் அப்போது காலகாலன் என்று தன்னைக் கூறிக்கொண்ட அந்த உருவத்தின் முன் போய் நின்று, ''அடே! நீயார்? பயந்து ஓடும் ஒருவனை நீ ஏன் துரத்துகிறாய்? அவனை விழுங்கவா போகிறாய்? அதை நான் செய்ய விடமாட்டேன்'' என்றான். அதைக் கேட்ட காலகாலன் பலமாகச் சிரித்து, ''நான் யார் என்றா

கேட்கிறாய்? உண்மையில் நான் யார் என்பதைப் பார்!'' என்று கூறி அது தான் போர்த்தியிருந்த வெள்ளைத் துணியைத் தூக்கி தூர எறிந்தது. அப்போது காலகாலன் பயங்கர உருவில் தென்பட்டான். கறுப்பான உடல். நெருப்புத் தணல் போன்ற கண்கள். வாயிலிருந்து அக்கினி ஜ்வாலை கிளம்பிக் கொண்டிருந்தது. அவனது குரலோ சிம்ம கர்ஜனை போல இருந்தது.

ஜெயசீலன் அந்த பயங்கர உருவத் தைக் கண்டு பயப்படவில்லை. அவன் தன் வாளை காலகாலனின் மார்பிற்கு நேராக நீட்டி, ''அடே! உன் னைப் பார்த்து நான் பயந்து போய் விடுவேன் என்றா நினைத்தாய்? பயந்து நடுங்கும் ஒருவனைக் கொல்ல முயலும் நீ எப்படிப்பட்ட சூரப்புலி என்பது தெரிகிறது,'' என்றான்.

ஜெயசீலன் வாளைக் கால காலனுக்கு நேராகப் பிடித்தவாறே அங்கே இன்னும் வேறு யாராவது இருக்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தான். அப்போது காலகாலன் அந்த வாளை ஒரு பக்கமாகத் தள்ளியவாறே துள்ளிக் குதித்தான். ஜெயசீலன் அவனது கழுத்திற்குக் குறிவைத்து வாளை வீசினான். அந்த வாள் காலகாலனின் தலையை வெட்டி உடலிலிருந்து சற்று தூரத்தில் விழ வைத்தது. ஆனால் தரையில் விழுந்த தலை பந்து போல எம்பி 'கடகட'வென்ற சிரித்து, ''ஜெயசீலா! உண்மையிலேயே நீமாவீரன் தான். உன் வாளில் என் ரத்தம் பட்டு



விட்டது. அதனால் அதற்கு அபூர்வ சக்தி கிடைத்து விட்டது. அதை எடுத்துக் கொண்டு போ! அதன் உதவியால் நீ எதை விரும்பினாலும் முயன்று அதனை அடைந்துவிடு வாய்!'' என்றது.

ஜெயசீலன் அதைக் கேட்டு தன் வாளை உறைக்குள் போட்டுக் கொண்டு தான் படுத்திருந்த ஆல மரத்தடிக்கே சென்றான்.

அந்த மரத்தின் மீதிருந்த ஆந்தை கள் அலறின. சற்று தூரத்தில் நரிகள் ஊளையிட்டுக் கொண்டிருந்தன. இத னால் ஜெயசீலனால் தூங்க முடிய வில்லை. மேலும் அவனுக்குத் தாகம் எடுத்தது. இரவு வெகுநேரமாகிவிட் டது. எங்காவது குளம் இருக்கிறதா என்று தேடிப் பார்க்க வேண்டும். அது கிடைத்ததும் முதலில் தாகத்தைத் தீர்த்துக் கொண்டு பிறகு விடிந்ததும்



அதில் குளித்துவிட்டு நகருக்குள் செல்ல வேண்டுமென்று எண்ணிக் கொண்டான்.

இப்படி நினைத்தவாறே அவன் அங்கிருந்து கிளம்பினான். சற்று நேரத்தில் அந்த பயங்கர மயானத்தைத் தாண்டிச் சென்றபோது ஓரிடத்தில் ஒரு சிறிய வீட்டைக் கண்டான். அவ்வீட்டு ஜன்னல் வழியாக ஒரு விளக்கின் ஒளி வந்து கொண்டிருந்தது. முதலில் தாகத்தைத் தணித்துக் கொள்ள விரும்பிய அவன், அவ்வீட்டின் வாசலை அடைந்து கதவைத் தட்டினான். இரண்டொரு நிமிடங்களுக்குப் பின் கையில் விளக்கை எடுத்துக் கொண்டு வந்த ஒரு கிழவி கதவைத் திறந்தாள். ''யாரப்பா? இந்த அகாலத்தில் வந்து கதவைத் தட்டுவது?'' என அவள் கேட்கவே, ஜெயசீலனும், ''அம்மா! நான் நெடுந்தூரம் செல்லும் பயணி. எனக்கு தாகமாக இருக்கிறது. குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுப்பீர்களா?'' என்று கேட்டான்.

கிழவியும் ''உள்ளே வா! தாராளமாய்த் தண்ணீர் கொடுக்கிறேன்,'' எனக் கூற, அவனும் அந்த வீட்டிற்குள் சென்றான். கிழவி தண்ணீர் கொண்டு வந்து கொடுக்க அதைக் குடித்துவிட்டு, ''அம்மா! வீட்டில் வேறு யாரும் இல்லையா? நீங்கள் தனியாகவா இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். அவள் ''யாரும் இல்லையப்பா! என் கணவர் சென்ற ஆண்டில் இறந்து போனார். எனக்குக் குழந்தையே பிறக்கவில்லை. என் கணவர் அரசாங்க ஊழியர். அதனால் அவரது மரணத்திற்குப் பின் மன்னர் என் பராமரிப்பிற்காக மாதா மாதம் பணம் கொடுக்கிறார்,'' என்றாள்.

ஜெயசீலனும், ''அப்படியா? ரொம்ப சந்தோஷம். நான் இந்த நாட்டிற்குப் புதியவன். இதன் மன்னர் யார்? சற்றுத் தொலைவில் தென்படும் நகரத்தின் பெயர் என்ன?'' என்று கேட்டான். கிழவியும், ''அந்த நகரத்தின் பெயர் ஹிரண்யபுரம். இந்நாட்டு மன்னரின் பெயர் கனகாட்சன். மக்கள் நலனைக் கருதி ஆட்சி புரிபவர். நேர்மையானவர். ஆனால் திருமணத்திற்குத் தயாராக இருந்த அவரது மகளையும், இளவரசுப் பட்டம் கட்டிக் கொள்ள வேண்டிய அவரது மகனையும் யாரோ கடத்திக் கொண்டு போய்விட்டார்கள். அன்றிலிருந்து மன்னர் படுத்த படுக்கையாகக் கிடக்கிறார்,'' என்றாள்.

அதைக் கேட்ட ஜெயசீலன், 'இந்த நிலையில் நான் மன்னனைக் கண்டு உத்தியோகம் கொடுங்கள் என்று எப்படிக் கேட்க முடியும்? ஒன்று செய்யலாம். மன்னனுக்கு உதவ அவனது மகனும் மகளும் எங்கே இருக்கிறார்கள் என்றுதேடிக் கண்டுபிடிப்பதாகக் கூறி அவனது ஆதரவைப் பெறலாம். அதை முதலில் செய்கிறேன்' என்று எண்ணி, அக்கிழவியிடம் ''மன்னனுடைய மகளையும் மகனையும் யாராவது வேற்று நாட்டு மன்னன் தான் பகைமை காரணமாகக் கவர்ந்து சென்றிருக்க வேண்டும்'' என்றான்.

கிழவியும் ''யாராவது மன்னன் தான் இதைச் செய்தான் என்றால் கனகாட்சனால் அவனோடு போர் புரிந்து அவர்களை மீட்டு வரமுடியும். ஆனால் ஒரு ராட்சஸனோ அல்லது யட்சனோ அவர்களைக் கொண்டு போயிருந்தால் அவனை எப்படி வெல்வது?'' என்று கேட்டாள். அப்போது அந்த வீட்டு வாசலின் முன் பலத்த கூச்சல் கேட்டது. ஒரு குரல் ''நான் என் கண்ணால் பார்த்தேன். என் தந்தையின் தலையை மயானத்தில் வெட்டிப் போட்டவன் இந்த வீட்டிற்குள் தான் நுழைந்தான். இந்த வீட்டிலுள்ள கிழவியிடம் விசாரித்தால் ஏதாவது தெரிந்து கொள்ளலாம்,'' என்றது. அப்போது இன்னொரு குரல், ''இறந்தவன் மீண்டும் எப்படி உயிர் பெற்றான் என்பது பற்றி விசாரிக்க அமைச்சர் என்னை நியமித்திருக்கிறார். எனவே எதை எதையோ கூறி விஷயத்தைக் குழப்பாதீர்கள்,'' என்று கடுமையாகக் கூறியது.

அதை எல்லாம் கேட்ட ஜெயசீலன் கிழவியிடம், ''அம்மா! என்னைப் பிடிக்க அரசாங்க வீரர்கள் வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது. அதனால் நான் பின்புற வாசல் வழியாக இங்கிருந்து போய்விடுகிறேன்,'' என்றான். அப்போது வாசல் கதவு பலமாகத் தட்டப்பட்டது. ஒரு குரல் அதிகாரத் தோரணையில், ''யாரது உள்ளே? கதவைத் திற!'' என்று மிரட்டியது.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

## 2

*(ஜெயசீலன் ஒரு மயானத்தில் ஒரு விசித்திர உருவத்தைக் கண்டு அதன் தலையை வெட்டி சித்தசாதகனைக் காப்பாற்றினான். அதன்பின் அவன் சற்று தூரத்தில் தென்பட்ட ஒரு வீட்டிற்குப் போய் அதிலிருந்த கிழவியுடன் பேசிக் கொண்டிருக்கையில் ஹிரண்யபுரக் காவலதிகாரி இரு காவல் வீரர்களுடன் வந்து அந்த வீட்டின் கதவைத் தட்டினான். அதன் பிறகு -)*

வாசல் கதவைத் திறக்கப் போன கிழவி சட்டென நின்று ஜெயசீலனிடம், ''நீ அரசாங்க வீரர்கள் கண்ணில் படாமல் தலைமறைவாக இருப்பவனா? ஏதாவது பெரிய குற்றத்தைச் செய்தவனா?'' என்று கேட்டாள். அவனும் ''நான் எவ்விதக் குற்றமும் புரியவில்லை. ஏதாவது வேலை கிடைக்குமா என்று ஊர் ஊராக அலைந்து கொண்டிருக்கிறேன்'' என்றான். அதைக் கேட்ட கிழவி திருப்தி அடைந்து கதவருகே போய் அதைத் திறந்தாள்.

நகரக் காவலதிகாரி வாசல்படியில் நின்றவாறே, ''ஒரு வழக்கு விஷயமாய் நான் வந்திருக்கிறேன். யாராவது ஒரு வாலிபன் வாளுடன் இங்கு வந்தானா?'' என்று கேட்டான். அப்போது ஜெயசீலன் வாசலுக்கு வரவே, காவலதிகாரியுடன் வந்தவன் ''ஆ! இவன் தான் என் தந்தையின் தலையை வெட்டியவன்! ஆனால் மீண்டும் அவர் தலை உடலில் பொருந்தவே உயிர் பெற்றுவிட்டார்,'' எனக் கூவினான். அப்போது சித்தசாதகன் ''ஏன் கத்துகிறாய்? தலை வெட்டப்பட்டவன் மீண்டும் பிழைத்து வந்தான் என்பது எங்காவது



நடந் திருக்கிறதா? இவன் காலனைத் தான் தன் வாளால் தாக்கினான். அதனால் இவனது வாளுக்கு அபூர்வ சக்தி கிடைத்துவிட்டது'' என்றான்.

அப்போது ஜெயசீலன் அந்த அதிகாரியிடம், ''ஐயா! என் பெயர் ஜெயசீலன். நான் அமராவதி நகர வாசி. மயானத்தில் ஒரு பயங்கர உருவம் என்னைத் தாக்கியது. தற் காப்பிற்காக அதன் தலையை நான் வெட்ட வேண்டியதாயிற்று'' என்றான். அப்போது காவலதிகாரி ''என் கூட இருப்பவர்கள் எதை எதையோ கூறிக் குழப்பிக் கொண்டு இருக்கிறார்கள். யாரோ காலன் இறந் தான், பிறகு பிழைத்தான் என்றெல் லாம் நம்ப முடியாத விஷயத்தைக் கூறிக் கொண்டு இருக்க இந்தத் தலை வலி எனக்கு எதற்கு? எல்லோரையும் மந்திரி முன் கொண்டு போய்விட்டு விடுகிறேன். அவர் விசாரித்தாலும் சரி, உங்களை விட்டு விட்டாலும் சரி. எனக்குக் கவலையில்லை. இப்போ தைக்கு என்னோடு வாருங்கள்'' எனவே, அவர்கள் யாவரும் அந்த அதிகாரியின் பின்னால் சென்றார்கள்.

அவர்கள் அரண்மனையை அடைந்தபோது மந்திரியும் அப் போது தான் அரண்மனை வாசல் வழியாக அரண்மனைக்குள் போய்க் கொண்டிருந்தார். நகரக் காவலதிகாரி அவருக்கு வணக்கம் செலுத்தி, அவ ரிடம் தான் கொண்டு வந்த வழக்கைப் பற்றிக் கூறினான். அதை கவனமாய்க் கேட்ட மந்திரி சற்று நேரம் வரை யோசித்துவிட்டு, ''ஒருவன் தலை வெட்டப்படுகிறது. அவன் இறந்து விடுகிறான் என எல்லோரும் நம்பு கிறார்கள். ஆனால் இறந்த மனிதன் உயிர் பெற்று எழுந்தான் என்பதைத் தான் நம்ப முடியாமல் இருக்கிறது? அப்படி ஏதாவது நடந்திருந்தால் அது ஏதோ மந்திர சக்தியால் தான் நிகழ்ந் திருக்கும். எனவே இவன் கொலை செய்யவில்லை. தன்னைக் காத்துக் கொள்ளவே அந்த உருவத்தின் தலையை வெட்டினான். ஆனால் அது மீண்டும் உயிர் பெற்றுவிட்ட தால் இவனைக் குற்றவாளியாகக் கருத முடியாது'' என்றார்.

மந்திரி ஜெயசீலனைப் பார்க்கவே அவனும், ''ஐயா! சட்டங்களை அறிந் தவர் நீங்கள். நீங்கள் கூறும் தீர்ப்பை யாவரும் ஏற்கத் தானே வேண்டும்? இதனை நான் மனப்பூர்வமாக ஏற் கிறேன்'' என்றான். அப்போது மந்திரி

அவர்களை எல்லாம் அங்கேயே இருக்கச்சொல்லிவிட்டு மன்னனைக் காண அரண்மனைக்குள் சென்றார். அப்போது மன்னன் கனகாட்சன் சேனாதிபதியின் மகனான மங்கள வர்மனுடன் பேசிக் கொண்டிருந் தான். மந்திரியைக் கண்டதும் மன்னன் ''மந்திரியாரே! இளவர சனையும் இளவரசியையும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வருவதாக மங்களவர்மன் கூறுகிறான். அதற்கு என் அனுமதியையும் கோருகிறான். உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான்.

மந்திரியும் ''இதற்கு தேகபலமும் துணிச்சலும் அபூர்வ சக்திகளும் கொண்ட ஒரு இளைஞனே செல்ல வேண்டும். இந்த மங்களவர்மனால் செய்ய முடியுமா என்பது சந்தேகமே. இவனுக்குத் தேகபலம் இருந்தாலும் நுண்ணியஅறிவு உள்ளதா என்பது சந்தேகமே. இவனிடம் மந்திர சக்தி எதுவும் இல்லை. இப்போது நமக்கு அத்தகைய இளைஞன் ஒருவன் கிடைத்திருக்கிறான். அவன் பெயர் ஜெயசீலன். அவன் வைத்திருக்கும் வாளுக்கு அபூர்வ சக்தி உள்ளது'' என்றார். அதைக் கேட்ட கனகாட்சன் யோசிக்கத் தொடங்கினான். மங் களவர்மனோ கோபமாக, ''அரசே! இந்த ஜெயசீலன் உயர் குடிமகனா? தாங்கள் தங்கள் மகனையும் மக ளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வருபவர்களுக்கு பாதி நாட்டைக் கொடுப்பதாக அறிவித் திருக்கிறீர்கள். அதற்கான தகுதி



அவனுக்கு உண்டா?'' என்று கேட் டான். அதைக் கேட்ட மந்திரி எரிச் சலைடைந்து, ''இளவரசனையும் இளவரசியையும் கவர்ந்து சென்ற வர்கள் அபூர்வ சக்தி கொண்டவர் களாகவும் இருக்கலாம். அத்தகை யவர்களை எதிர்த்து வெற்றியை பெறுபவன் அவர்களை விட அதிக சக்தி வாய்ந்தவனாகத் தான் இருக்க வேண்டும். அப்படிப்பட்டவன் தாங்கள் அறிவித்த நாட்டைப் பெற் றுக் கொள்ளத் தகுதி பெற்றவனே!'' என்றார்.

மங்களவர்மன் அப்போது ''அவனது வாளுக்கு அபூர்வ சக்தி இருக்கிறது என்றால் அதைப் பரீட் சித்து பார்க்க வேண்டும்'' என்றான் தன் வெறுப்பைக் காட்டியவாறே. மன்னனும் ''இவன் கூறுவதும்



சரியே. ஜெயசீலனின் வாளை இவன் பரீட்சித்துப் பார்க்கட்டும். அது சக்தி வாய்ந்தது என்றால் அவனுக்கு உயர் பதவி ஒன்றை அளிக்கலாம்'' என்றான். மந்திரியும் ''அது சரி. அதற்கு எப்படிப்பட்ட பரீட்சை வைக்கலாம்?'' என்று கேட்டார். மன்னனும் ''இரண்டு கூண்டுகளில் இரு புலிகளை வைத்து கொண்டுவர வேண்டும். ஜெயசீலனின் வாளை மங்களவர்மன் எடுத்துக் கொண்டு கூண்டுகளிலிருந்து ஒரு பரந்த மைதானத்தில் விடப்படும் புலிகளுடன் சண்டை போட வேண்டும்'' என்றான். மன்னன் இவ்வாறு கூறியதைக் கேட்டு மங்களவர்மன் நடுநடுங்கிப் போனான். ஒரு வேளை ஜெயசீலனின் வாளுக்கு மந்திர சக்தி இல்லாவிட்டால் தான் புலிகளை எதிர்க்க முடியாமல் அவற்றிற்கு இரையாக வேண்டி வருமே என்று எண்ணிப் பயந்தான். ஆனாலும் பயப்படாதவன் போல அவன், ''ஓ! நான் புலிகளை எதிர்க்கிறேன்,'' என்றான்.

மந்திரி இதை ஜெயசீலனிடம் கூறவே, அவன் சற்றும் தயங்காமல் தன் வாளை மங்களவர்மனிடம் கொடுத்தான். கூண்டுகளில் அடைக்கப்பட்ட புலிகள் பரந்த மைதானத்திற்குக் கொண்டுவரப்பட்டன. கூண்டுகளிலிருந்து வெளியே மைதானத்தில் விடப்பட்ட அந்தப் புலிகளை எதிர்க்க மங்களவர்மன் ஜெயசீலனின் வாளுடன் சென்றான். ஆனால் இரு புலிகள் ஒரே சமயத்தில் தன் மீது பாய வருவது கண்டு அவன் பயந்து நடுங்கலானான். அவன் கையிலிருந்த வாள் கீழே விழுந்து விட்டது. இந்த ஆபத்தான நிலையைக் கண்ட ஜெயசீலன் சட்டென மைதானத்தில் குதித்து மங்களவர்மன் நழுவவிட்ட தன் வாளை எடுத்துக் கொண்டு சீறிப் பாயும் இரு புலிகளையும் எதிர்த்தான்.

இதைக் கண்ட கனகாட்சன் ஆச்சரியப்பட்டதோடு, ''ஆகா! வீரன் என்றால் இவன் தான் வீரன். இவனால் எதையும் செய்ய முடியும். இவனால் தான் இளவரசனையும் இளவரசியையும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டுவர முடியும்! மங்களவர்மன் வாய்ச் சொல்வீரன். கோழை. தொடைநடுங்கி. மந்திர வாள் கையில் இருந்தும் கூட அவனால் புலிகளை எதிர்க்க முடியவில்லையே. அவற்றைக் கண்டு

பயந்துவிட்டானே! இவனாலா என் மகனையும் மகளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டுவர முடியும்?'' என்று கூவினான். இதற்குள் ஜெய சீலன் போக்குக் காட்டி இரண்டு புலிகளில் ஒன்றை வேறாக்கி அதனைத் தன் வாளால் குத்திக் கொன்றான். இரண்டாவது புலி பின்வாங்கி ஓடிக் கூண்டிற்குள் போய்ப் படுத்து விட்டது. கனகாட்சனும் அங்கு கூடி இருந்த மற்றவர்களும் அதைக் கண்டு கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

மங்களவர்மன் வாளை நழுவ விட்டபோதே தன் நினைவை இழந்து விழுந்துவிட்டான். அவன் கண் விழித்துப் பார்த்தபோது ஒரு புலி இறந்து கிடப்பதையும் மற்ற புலி கூண்டினுள் படுத்துக் கிடப்பதையும ஜெயசீலன் வாளுடன் நிற்பதையும் கண்டான். அவன் எழுந்து மன்னனிடம் ''அரசே! அந்த வாள் அபூர்வ சக்தி வாய்ந்தது தான். இதில் சந்தேகமே இல்லை'' என்றான்.

மந்திரியும் ''மங்களா! நீயே அந்தக் கத்திக்கு அபூர்வ சக்தி இருப்பதை ஒப்புக் கொண்டாய். உன்னால் அதைப் பிடித்து புலியைத் தாக்க முடியவில்லை என்பதனையும் நிரூபித்துவிட்டாய். இதனால் உன்னால் இளவரசனையும் இளவரசியையும் தேடிக் கண்டுபிடித்து இங்கு அழைத்துவர முடியாது என்பது நன்கு தெரிகிறது. எனவே இந்த வேலையை ஜெயசீலனிடம் தான் ஒப்படைக்கவேண்டும். ஏனென்றால் அவனிடம் மந்திர சக்தி வாய்ந்த வாளும், எந்த நிலையையும் எதிர்த்து வெற்றி பெறத் துணிச்சலும் உள்ளது,'' என்றார். அதைக் கேட்ட மங்களவர்மன் பதில் எதுவும் கூற





முடியாமல் வெட்கித் தலை குனிந்து நின்றான்.

அப்போது சித்தசாதகனும் ''நான் அப்போதே சொன்னேனே காலனே இந்த வாளுக்குள் அபூர்வ சக்தியைச் செலுத்தி இதை ஜெயசீலனிடம் கொடுத்தான் என்று. இது ஜெயசீலன் ஒருவனிடம் மட்டுமே இருக்க வேண்டும். இந்த சக்தி வாய்ந்த வாளைக் கையில் வைத்திருந்தும் மங்களவர்மன் புலியைத் தாக்க முடியாமல் வாளையே நழுவவிட்டு பயந்து தன் நினைவை இழந்து விழுந்ததை நாம் பார்த்தோமே. வாய்ச்சொல் வீரர்களிடம் இந்த வாள் இருந்தாலும் இது அவர்களுக்குப் பயன்படாது'' என்றான்.

இதன் பிறகு யாவரும் மன்னனுடன் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது மயானக் காவலாளியின் மகன் மன்னனை வணங்கி நிற்கவே, மன்னனும் அவனைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு ''சரி. நீ உன் தந்தை செய்து வந்த வேலையையே செய்து வா. உனக்கு ஊதியமும் உன் தந்தைக்குக் கொடுத்ததைப் போல இரு மடங்கு கொடுக்கப்படும். இனிமேல் வழக்கு, வாதம் என்றெல்லாம் செய்யாமல் உன் வேலை உண்டு, நீ உண்டு என்று இருந்துகொண்டு வேலையைச் செய்'' என்றான். அவனும் மன்னனை வணங்கிவிட்டு அங்கிருந்து சென்றான்.

மன்னன் மந்திரியுடனும் ஜெயசீலனுடனும் சித்தசாதகனுடனும் தர்பார் மண்டபத்திற்குச் சென்றான். அவன் தனது அரியாசனத்தில் அமர்ந்து மந்திரியிடம் ''மந்திரியாரே! இளவரசனையும் இளவரசியையும் தேடிக் கண்டுபிடிக்க நாம் பல முயற்சிகள் செய்தும் அவற்றில் ஒன்றில் கூட வெற்றி பெறாமல் போய்விட்டோம். இப்போது துணிச்சலும் அபூர்வ சக்திகள் கொண்ட ஜெயசீலன் நமக்குக் கிடைத்திருக்கிறான். இவனிடம் அந்த வேலையை ஒப்படைக்கலாமா?'' என்று கேட்டான். மந்திரியும் ஜெயசீலனை ஏற இறங்கப் பார்த்தார். அப்போது சித்தசாதகன் ''இவனிடம் அந்த வேலையைக் கொடுத்துவிட்டால் அதைச் செய்து முடித்துவிட்டுத் தான் மறு வேலையைப் பார்ப்பான். இவன் அந்த வேலை செய்யச் சம்மதித்தால்

நான் இவனுக்கு உறுதுணையாக இவனுடன் செல்வேன்'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''அரசே! நான் அண்டை நாட்டிலிருந்து ஏதாவது வேலை கிடைக்குமா என்று தேடிக் கொண்டே இங்கே வந்தவன். எனக்கு எந்த சிறு வேலையைக் கொடுத்தாலும் நான் அதைச் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்றான்.

அப்போது மந்திரி மன்னனிடம் பேசிவிட்டு ஜெயசீலனைப் பார்த்து, ''ஜெயசீலா! மன்னர் உன்னைத் தன் உதவியாளனாக நியமித்திருக்கிறார். நீஅந்த வேலையை ஏற்றுக் கொள்கிறாயா?'' என்று கேட்டார். ஜெயசீலனும் ''ஆகா! மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன். இனி மன்னர் எனக்கு என்ன கட்டளை இட்டாலும் அதைச்செய்து முடிப்பேன். நான் என் பொறுப்பைத் தட்டிக் கழிக்க மாட்டேன்'' என்றான்.

மந்திரியும் ''பேஷ்! இது தான் சரியான நோக்கு. மன்னர் தன் மகனையும் தன் மகளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டுவரும்படிக் கட்டளை இட்டிருக்கிறார். அதனை உன்னால் தான் செய்ய முடியும் என்ற நம்பிக்கை மன்னருக்கும் இருக்கிறது, எனக்கும் இருக்கிறது. உன்னிடம் மந்திர சக்தி வாய்ந்த வாள் இருக்கிறது. துணிச்சலுடன் எதையும் நீ செய்து முடிப்பாய் என்ற நம்பிக்கையும் எங்களுக்கு ஏற்பட்டுவிட்டது. எனவே தான் இந்த வேலையைச் செய்யும்படி மன்னர் கட்டளை இட்டிருக்கிறார்,'' எனவே, ஜெயசீலனும் ''ஆ! நான் அதன்படி நடக்கிறேன்'' என்றான்.

அப்போது ஒரு வீரன் ஒரு முத்துமாலையையும், உடைந்து போன ஒரு வாளையும் கொண்டு வந்து மன்னனுக்குக் காட்டி ''அரசே! இவை இளவரசரும் இளவரசியும் காணாமல் போன இடத்தில் ஒரு மரத்தினருகே கிடந்தனவாம். இவற்றை ஒரு மலைவாசி கண்டெடுத்திருக்கிறான். அவன் தன் நினைவை இழந்து கிடக்கிறான்,'' என்றான்.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

# 3

(ஜெயசீலன் தன் சக்தியால் சேனாதிபதியின் மகன் மங்களவர்மனைப் புலிகளிடமிருந்து காப்பாற்றினான். அதுகண்டு மன்னன் கனகாட்சன் மகிழ்ந்து மந்திரியாரின் யோசனையின் பேரில் அவனுக்கு ஓர் உத்தியோகத்தைக் கொடுத்தான். ஜெயசீலனைப் பற்றி மந்திரி கூறிக் கொண்டிருக்கையில் ஒரு வீரன் உடைந்த கத்தியையும், ஒரு முத்து மாலையையும் மன்னன் முன் வைத்தான். அப்போது -)

மன்னன் கனகாட்சனும் மந்திரி தருமமித்திரரும் வீரன் கொண்டு வந்த உடைந்த கத்தியையும் முத்து மாலையையும் பார்த்துவிட்டு அவை இளவரசனதும், இளவரசியுடையதும் தானா என்று எப்படி அடையாளம் கண்டு கொள்வது என்று யோசிக்கலானார்கள். அப்போது தருமமித்திரர் ஏதோ நினைவிற்கு வந்தது போல ''உடைந்த கத்தியைப் பார்த்து அது இன்னாருடையது என்று சொல்லி விட முடியாது. ஆனால் முத்துமாலை இளவரசியுடையதுதானா எனக் கண்டுபிடித்துவிடலாம். அந்தப்புரத்திலிருந்து இளவரசியின் முக்கிய பணிப்பெண்ணை வரவழைத்துக் கேட்கலாம்,'' என்றார்.

மன்னனும் ஒரு வீரனை அழைத்து, ''நீ அந்தப்புரத்திற்குப் போய் இளவரசியின் முக்கிய பணிப் பெண்ணை இங்கு அழைத்து வா. இது என் கட்டளை என்றும் தெரிவி!''



என்றான். வீரனும் உடனே போய் அந்தப் பணிப்பெண்ணைஅழைத்து வந்தான்.

தருமமித்திரரும் அவளிடம், ''இந்த முத்துமாலையை நீ பார்த்திருக்கிறாயா?'' என்று கேட்டார். அவளும் மாலையை வாங்கிப் பார்த்த மறுவிநாடியே ''இது இளவரசியினுடைய முத்துமாலை. இதோ இந்த நடுமுத்து அதுங்கி இருக்கிறது. இதை நான் கவனித்திருக்கிறேன். அதனால் இது இளவரசியுடையதே என்று என்னால் உறுதியாகக் கூற முடியும்,'' என்றார்.

அதைக் கேட்டு மன்னனும் மந்திரியும் முத்துமாலை இளவரசியினுடையது தான் என்பதை உறுதி செய்து கொண்டார்கள். உடைந்த வாளும் இளவரசனுடையதாகத் தான் இருக்க வேண்டும் என்பதையும் அவர்கள் நம்பினார்கள். அப்போது மன்னன், ''இந்த வாளையும் முத்துமாலையையும் கண்டெடுத்த வேடன் என்ன ஆனான்?'' என்று கேட்டான்.

அந்த இரு பொருள்களையும் கொண்டு வந்த வீரன் ''பிரபுவே! அந்த வேடனால் சரியாகப் பேசக் கூட முடியவில்லை. இரண்டு கால் முதலை என்று அடிக்கடி கூறிக் கொண்டே இருக்கிறான்,'' என்றான்.

அப்போது சித்தசாதகன், ''அரசே! மகாகாலனின் ஆட்களில் சிலர் அவ்வப்போது விசித்திர உருவங்கள் எடுத்து நடமாடுவது உண்டு. அந்த வேடன் இத்தகைய ஓர் உருவத்தைக் கண்டு தான் மிரண்டு போயிருக்கிறான். என்னையும் ஜெயசீலனையும் அவனைக் கண்டு பேசி விஷயம் அறிய அனுப்புங்கள்!'' என்றான்.

மன்னனும் அதற்கு அனுமதி அளிக்கவே, ஜெயசீலனும் சித்தசாதகனும் முத்துமாலையையும் உடைந்த வாளையும் கொண்டு வந்த வீரனைக் கூட்டிக் கொண்டு வேடன் இருந்த இடத்திற்குச் சென்றார்கள்.

அந்த இடத்தில் இருந்த பெரிய மரத்தின் கீழ் பல வேடர்கள் கூடி இருந்தனர். அவர்களிடையே இருந்த ஒரு வேடனை ஒரு மந்திரவாதி வேப்பிலையால் அடித்து, ''ஓம், க்ரீம், ஹ்ரீம்!'' என்று ஏதேதோ மந்திரங்களை உரத்த குரலில் உச்சரித்துக் கொண்டிருந்தான்.

தன் கையிலிருந்த கோலால் அந்த வேடனை அடித்தவாறே, ''வா, வா! இறங்கி வா! இப்படித் தான்! இங்கே

தான்!'' என்று கூவினான் சித்த சாதகன். அதைக் கண்ட வேடுவ மந்திரவாதி கோபம் கொண்டு சித்த சாதகனை அடிக்கப் பாயவே, அரசாங்க வீரன் அவனைத் தடுத்து, ''ஏய்! வேப்பிலைப் பூசாரி! இவர் அரசாங்க மந்திரவாதி. நீ எதுவும் செய்யாதே! செய்தால்...'' என்று எச்சரித்தான்.

சித்தசாதகனும், ''ஏய் வேப்பிலை! உன் வேலைத்தனத்தை என்னிடம் காட்டாதே! உன்னைப் புல்லாக்கி என் சுண்டு விரலில் சுற்றிக் கொண்டு விடுவேன். வாலைச் சுருட்டிக் கொண்டு பேசாமல் இரு!'' என்று கோபமாகக் கூறினான். அதுகேட்டு வேப்பிலைப் பூசாரி நடுநடுங்கினான்.

சித்தசாதகன் அவனை அலட்சிய மாகப் பார்த்தவாறே வேப்பிலையால் அடிபட்ட வேடனிடம், ''அடே சூரப்புலி! நீ பார்த்த இரண்டு கால் முதலையை இந்த மாவீரன் ஜெய சீலன் தன் வாளால் குத்திக் கொன்று விட்டான். இனி நீ பயப்படாதே!'' என்று கூறி ஜெயசீலன் வைத்திருந்த வாளை எடுத்துக் காட்டினான்.

அந்த வேடனும் எழுந்து நின்று, ''ஐயா! அந்தப் பிசாசைக் கொன்று விட்டீர்களா? அதன் உடல் எங்கே கிடக்கிறது?'' என்று ஆவலுடன் கேட்டான்.

சித்தசாதகன் ''பிசாசு மனிதன் அல் லவே. அதனால் இறந்ததும் அதன் உடல் காற்றோடு கலந்துவிட்டது. அது சரி, நீ முத்து மாலையையும் உடைந்த கத்தியையும் எங்கிருந்து



எடுத்தாய்?'' என்று கேட்டான்.

அவனும் ''ஐயா! நான் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருந்தேன். அதோ தெரியும் மரத்தில் ஒரு காட்டுக் கோழி இருந்து கூவவே, அதை நான் அம்பு எய்து அடித்தேன். அது அடிபட்டு சற்று தூரத்திலுள்ள புதரில் விழுந்தது,'' எனக் கூறி ஜெய சீலனையும் சித்தசாதகனையும் அழைத்துக் கொண்டு போய் அந்தப் புதரைக் காட்டினான்.

சித்தசாதகன் அந்தப் புதரைக் கூர்ந்து பார்த்து, ''ஆ! ஏதோ ஓலைச் சுவடி கிடக்கிறதே!'' என்று கூறி கைவிட்டு ஓர் ஓலைச் சுவடியை எடுத்தான். அதுகண்டு ஜெயசீலன் ஆச்சரியப்பட்டான்.

சித்தசாதகனோ ஓலைச் சுவடியின் கட்டை அவிழ்த்து ஓலைகளை ஒவ் வொன்றாகத் திருப்பிப் பார்த்தவாறே,




''இது எந்த மொழி? புரியவில்லையே!'' எனக் கூறினான்.

ஜெயசீலனும் அதை வாங்கிப் பார்த்துவிட்டு ''இது ஒரு வேளை அந்த இரண்டு கால் முதலை தான் கொண்டு வந்து போட்டிருக்கும்,'' என்றான். சித்தசாதகனும் ''இருந்தாலும் இருக்கலாம்,'' எனக் கூறிவிட்டு வேடனிடம், ''அந்த இரண்டு கால் முதலை இங்கே ஏன் வந்தது?'' என்று கேட்டான்.

வேடனும் ''அது எனக்குத் தெரியாது. நான் அடித்து வீழ்த்திய பறவையை எடுக்க இந்த புதரினுள் பார்த்த போது இதில் அந்த இரண்டு கால் முதலை உருவத்தைக் கண்டு பயந்து அலறியவாறே நினைவிழந்து விழுந்துவிட்டேன்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் அவனைத் தட்டிக் கொடுத்து, ''நீ அடித்து வீழ்த்திய பறவை என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

வேடன் பதில் சொல்வதற்குள் வேப்பிலைப் பூசாரி குறுக்கிட்டு, ''அதை மலைத் தேவதை தூக்கிக் கொண்டு போயிருக்கும். அதை அடித்துப் பெரும் பாவத்தை இவன் அடைந்துவிட்டான்,'' என்றான்.

ஜெயசீலன் அவன் பேசாதிருக்க வேண்டும் என்று கூறிவிட்டு சித்த சாதகனிடம் ''அந்த இரண்டு கால் முதலை எங்கே இருக்கிறது என்று நாம் தேடிப் பார்க்கலாம்,'' என்றான்.

சித்தசாதகனும், ''இந்த ஓலைச் சுவடியை இங்கே தவறவிட்டவன் தான் இளவரசனையும் இளவரசியையும் கவர்ந்து கொண்டு போய் இருக்க வேண்டும். அவன் ராட்சஸனோ, யட்சனோ, கந்தர்வனோ அல்லது கின்னரனோ?'' என்றான்.

ஜெயசீலன் தன்னுடன் வந்த வீரனைத் தலைநகருக்குப் போகச் சொல்லிவிட்டு சித்தசாதகனுடன் காட்டில் இரண்டு கால் முதலையைத் தேடலானான். அது அடர்ந்த காடுகள் நிறைந்த மலைப் பகுதி. அவர்கள் இருவரும் அப்பகுதியில் சென்று கொண்டிருக்கும்போது ஒரு கிராமத்தை அடைந்தார்கள்.

அந்த கிராமத்து மக்கள் ஓரிடத்தில் கூடி ஏதோ பேசிக் கொண்டு பயந்தவாறே அங்கும் இங்கும் பார்ப்பதை ஜெயசீலன் கவனித்தான். உடனே அவன் அதற்கு என்ன காரணம் என்று கேட்கவே, ஒரு கிராமவாசி கூறலானான்.

"இந்த ஊரை ஒட்டிய ஒரு சோளக் காட்டைக் காவல் காக்க பதினான்கு வயது சிறுவன் ஒருவன் அங்கு கட்டியிருந்த காவல் பரண் மீது நின்று இன்று காலையில் சுற்றிலும் பார்த்த போது ஒரு பெரிய யானை வந்து கொண்டிருப்பதைக் கண்டான். அது சோளக் காட்டில் நுழைந்து பயிரை நாசப்படுத்திவிடுமே என எண்ணி அதைப் பயமுறுத்தி விரட்ட ஒரு கூரிய கருங்கல்லை எடுத்து அதற்குக் குறி வைத்து எறிந்தான். அது யானையின் மீது பட்டது.

அப்போது திடீரென யானை மீது ஒருவன் தோன்றி, "அடே! யாரடா அது கல்லை விட்டெறிந்தது?" என்று கோபத்தோடு கேட்டான். அக்குரலைக் கேட்ட சிறுவன் நடுங்கிப் போனான். பயத்தால் என்ன செய்வது எனத் திகைத்து அவன் பரண் மீதே நின்றான்.

இரண்டொரு நிமிடங்களில் யானை அவனை அணுகியது. அது எல்லா யானைகளைப் போல இருக்கவில்லை. அதன் காதுகள் மீனின் செதில்கள் போல இருந்தன. அதன் மீது இருந்தவனின் தலைப் பாகை ஒரு முதலையின் தலை போல இருந்தது. கரடுமுரடான முதலையின் உடல் போல அவனது உடல் இருந்தது.

அந்த மனிதன் சோளக் காட்டைக் காவல் காக்கும் சிறுவனை அணுகினான். அவன் சிறுவனிடம், "பயப்படாதே! நீ போய் உன் கிராம வைத்தியனை அழைத்து வா. என் உடலில் குத்தி ஒடிந்திருக்கும் இந்தக் கத்தியை வெளியே எடுக்க வேண்டும். இதற்காக நிறையப் பணம் கொடுக்கிறேன்," என்றான்.



சிறுவனும் அங்கிருந்து தப்பி ஓட வழி ஏற்பட்டது கண்டு பரணிலிருந்து குதித்து வேகமாக ஓடி வந்து கிராமத்தை அடைந்தான். அவன் வேகமாக ஓடிவந்ததைப் பார்த்த சிலர், "சின்னா! என்ன சமாச்சாரம்? ஏன் இப்படித் தலைதெறிக்க ஓடி வருகிறாய்? சோளக் காட்டிற்குள் ஏதாவது கொடிய மிருகம் புகுந்து விட்டதா?" என்று கேட்டார்கள். அவனும் வாய் குழறித் தட்டுத் தடுமாறியவாறே நடந்ததைக் கூறினான். அதை முதலில் யாரும் நம்பவில்லை. ஆனால் சிலர் அவன் ராட்சஸனோ என நினைக்கிறார்கள்."

இவ்வாறு அவன் ஜெயசீலனிடம் சொல்லி முடித்தபோது அந்த கிரா



மத்துத் தலைவன், ''அந்த விசித்திர மனிதனுக்கு இப்போது ஒரு வைத்தியர் தேவை. எனவே நம்மூர் வைத்தியரைக் கூட்டிக் கொண்டு அங்கே போகலாம்!'' என்றான்.

வேறு சிலரும், ''அவன் கோரிய படியே நம் ஊர் வைத்தியரை அழைத்துக் கொண்டு போகலாம். அவனுக்குச் சிகிச்சை செய்தால் அவன் நமக்கு நன்றி செலுத்துபவனாய் நம்மை ஒன்றும் செய்ய மாட்டான். இப்படிச் செய்வதே நம் ஊருக்கும் நல்லது. அவனுக்கும் நல்லது. எனவே யோசனை செய்து கொண்டிருக்காமல் இப்போதே நம் ஊர் வைத்தியரை அழைத்துக் கொண்டு அவன் இருக்கும் இடத்திற்குச் செல்வோம்,'' என்றார்கள்.

கிராம வைத்தியரோ, ''ஒரு ராட்சஸனுக்கா நான் வைத்தியம் செய்ய வேண்டும்? முடியாது! எனக்கு பயமாக இருக்கிறது,'' என்றான்.

கிராமத் தலைவனும், ''பயப்படாதே! நாங்கள் எல்லோரும் உன் கூட வருகிறோம். எல்லோரும் அரிவாள், கடப்பாரை, கோடாலி என்று கைக்குக் கிடைத்ததை எடுத்துக் கொண்டே வருகிறோம். நம்மால் ஓர் உயிரைக் காப்பாற்ற முடியுமானால் மனிதாபிமானம் காட்டி அதைச் செய்யலாம். ஆனால் அங்கிருப்பவன் ராட்சஸனாக இருந்து நம்மைத் தாக்க முயன்றால் நாம் எல்லோருமாகச் சேர்ந்து அவனை அடித்துக் கொன்று விடலாம்,'' என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் உற்சாகத்துடன் 'அப்படியே செய்யலாம்!' என்று கூவினார்கள். உடனே யாவரும் தம் கைக்குக் கிடைத்த அரிவாள், கோடாரி, கடப்பாரை என எடுத்துக் கொண்டு வந்தார்கள். எல்லோரும் சோளக் காட்டை அடைந்தார்கள்.

ஜெயசீலனும் சித்தசாதகனும் அங்கு நடப்பதை எல்லாம் உன்னிப்பாக கவனித்தார்கள். சித்தசாதகன் அப்போது, ''ஜெயசீலா! இவர்கள் எல்லோரும் அந்த விசித்திர மனிதனைக் காண சோளக் காட்டிற்குப் போகிறார்களே! அவன் யாராக இருப்பான்? யாரோ அவனை வாளால் தாக்கிக் குத்தி இருக்கிறார்கள். அவன் தாக்குதலில் இருந்து தப்ப முயன்றிருக்கிறான். அப்போது அந்த வாள் உடைந்து ஒரு பாதி அவனது உடலில் இருந்துவிட்டது. மற்ற பாதி எங்கோ

விழுந்துவிட்டது,'' என்றான்.

ஜெயசீலனும், ''சித்தா! இவ்வளவு ஊகித்த உனக்கு மேலும் என்ன நடந்திருக்கும் என்று நினைத்துப் பார்க்க முடியவில்லையா? ஆச் சரியமாகத் தான் இருக்கிறது? இந்த முதலை மனிதன் தான் நம் இள வரசனையும் இளவரசியையும் சிறைப்பிடித்துக் கொண்டு போயி ருக்க வேண்டும். அப்போது நடந்த கைகலப்பில் இளவரசர் தம் வாளால் அவனைத் தாக்கி இருக்கிறார். அத்தாக்குதலில் தான் இளவரசரின் வாள் உடைந்திருக்கிறது. தாம் சிறைப்பட்டோம் என்பதைத் தெரி விக்கவே இளவரசி தன் முத்து மாலையைக் கழற்றி எறிந்திருக்க வேண்டும். உடைபட்ட கத்தியாலும், எறியப்பட்ட முத்துமாலையாலும் இளவரசனையும் இளவரசியையும் எங்கு பிடித்தார்கள் என்பது தெரிந்து விட்டது. இனி அந்த இடத்திற்குப் போய் வேறு ஏதாவது புதுத் தட யங்கள் கிடைக்கின்றனவா என்று பார்ப்போம். இப்போது இந்தக் கூட்டத்தோடு சோளக் காட்டிற்குப் போய் அந்த முதலை மனிதனைப் பார்ப்போம்,'' என்றான். சித்த சாதகனும், ''அப்படியே செய்ய லாம். நீ கூறியபடித் தான் நடந் திருக்க வேண்டும். இவன் தான் நம் இள வரசனையும் இளவரசியையும் கடத் திக் கொண்டு போனவன் என் பதில் சந்தேகமே இல்லை. இவன் முதலை மனிதன் போல இருப்பது கண்டு பயந்து போய்த் தான் அந்த வேடன் அப்படிப் புலம்பிக் கொண்டிருந் தான். இவனது சக்தி என்ன என்பதைக் கண்டு கொள்ள வேண்டும்,'' என் றான். அதன்பின் இருவரும் கூட்டத் தோடு சேர்ந்து சோளக் காட்டிற்குச் சென்றார்கள்.

ஒரு பெரிய கூட்டமே தன்னை நோக்கி வருவதைக் கண்டு யானை மீது அமர்ந்திருந்தவன் யானையை அவர்களிருக்கும் இடத்திற்குச் செல் லும்படிக் கட்டளை இட, யானையும் துதிக்கையைத் தூக்கியவாறே பயங் கரமாய் ஓடி வந்தது.

(தொடரும்)





# மர்மக் குளம்

## 4

(ஆலமரத்தருகே இருந்த புதரிலிருந்து சித்தசாதகன் ஓர் ஓலைச் சுவடியைக் கண்டெடுத்தான். ஆனால் இளவரசனையும் இளவரசியையும் பற்றிய தகவல் எதுவும் கிடைக்கவில்லை. அதனால் ஜெயசீலனும் சித்தசாதகனும் அவர்களை மலைப் பகுதியில் தேடிக் கொண்டு சென்றனர். வழியில் ஒரு கிராமத்தவர் தம் வயல்களை அழிக்க வந்த ஒரு யானையையும் அதன் மீது அமர்ந்திருந்த முதலை வடிவ மனிதன் ஒருவனைத் தாக்குவதையும் கண்டார்கள். அப்போது - )

தம்மைத் தாக்க முதலை வடிவ மனிதன் யானை மீது அமர்ந்து வருவது கண்டு கிராமவாசிகள் பயந்து போனார்கள். அவர்கள் அங்கிருந்து ஓடிவிட முயலவே, யானை மீதிருந்த முதலை மனிதன், ''ஓடாதீர்கள். நான் யாரையும் எதுவும் செய்துவிட மாட்டேன்,'' என்று உரத்த குரலில் கூறினான். அதைக் கேட்ட கிராமவாசிகள் கொஞ்சம் தைரியம் அடைந்தார்கள். முதலை போலத் தோன்றினாலும் அவன் மனிதன் போலப் பேசியது அவர்களுக்குத் திருப்தியை அளித்தது.

ஆச்சரியப்பட்டு நின்ற அவர்களைப் பார்த்து அந்த முதலை மனிதன், ''உங்கள் கிராமத் தலைவர் யார்? எனக்கு உடனடியாக ஒரு வைத்தியர் வேண்டும் என்று நான் தகவல் அனுப்பினேனே. அதன்படி ஒரு வைத்தியரைக் கூட்டி வந்திருக்கிறாரா?'' என்று கேட்டான்.

கிராம மணியகாரரும் முன்வந்து, ''எனக்குத் தகவல் கிடைத்தது. என்னுடன் கிராம வைத்தியனும் அவனது உதவியாளனும் வந்திருக்கிறார்கள். யாருக்கு என்ன நோய் எனச் சொன்னால் அவர்கள் நோயாளியைப்



பார்த்துவிட்டுத் தக்க சிகிச்சையை அளிப்பார்கள்,'' என்றார்.

முதலை மனிதனும், ''வைத்தியர்களைக் கூட்டி வந்தது சரி. ஆனால் எனக்கு உணவு அளிப்பது பற்றி என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

மணியகாரரும், ''ஐயா! எங்கள் ஊருக்கு வருபவரைப் பட்டினி போட்டு அனுப்பும் பழக்கம் எங்களுக்குக் கிடையாது. உங்களுக்காக விருந்து சாப்பாடே என் வீட்டில் தயாராகிக் கொண்டிருக்கிறது,'' என்றார்.

முதலை மனிதனோ, ''விருந்து சாப்பாட்டைப் பிறகு சாப்பிடலாம். முதலில் அந்த இரு வைத்தியர்களையும் இங்கே வரச் சொல்லுங்கள்,'' என்றான். கிராம மணியகாரரும், ''மணி! முத்து!! இருவரும் இங்கே வாருங்கள்!'' என்று உரத்த குரலில் கூப்பிட்டார்.

மணியும் முத்துவும் மணியகாரரின் பக்கத்தில் வந்து நின்றார்கள். மணியகாரரும், ''மணி சாதாரண நோய்களுக்கு மருந்து கொடுப்பவன். முத்து அறுவை சிகிச்சை செய்பவன்,'' என்று அவர்களை முதலை மனிதனுக்கு அறிமுகப்படுத்தினார்.

அப்போது முதலை மனிதன் தன் தலையில் அணிந்திருந்த தலைப்பாகையை அகற்றவே, அவன் நாற்பது வயதான சாதாரண மனிதனாக இருப்பதை யாவரும் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். நல்ல நிறமாக, சுருண்ட கருத்த தலைமுடியுடன் இருந்தான்.

அதைக் கண்ட வைத்தியன் மணி, ''ஓ! இவன் சாதாரண மனிதன் தானா!'' எனக் கூவினான். முத்துவோ, ''அப்படி எண்ணி ஏமாந்து போகாதே! ராட்சஸர்கள் தாம் விரும்பும் எந்த உருவையும் எடுத்துக் கொள்ளக் கூடியவர்கள். ஆனால் வைத்தியர்கள் நோயாளி யார் என பாகுபடுத்தாமல் சிகிச்சை அளிக்க வேண்டும். அதுதான் அவன் கடமை,'' என்றான்.

மணியும், ''நீ சொல்வது சரியே. முதலில் இவருக்கு என்ன நோய் உள்ளது என்பதைக் கண்டுபிடிப்போம்'' என்றான். அப்போது முதலை வடிவில் இருந்த மனிதன், ''எனக்கு நோய் என்று எதுவும் இல்லை. என் உடலில் உடைந்த கத்தி குத்தியுள்ளது. அதை எடுத்துவிட்டு மருந்து

வைத்துக் கட்டுப் போடவேண்டும்,'' என்றான்.

அப்போது முத்து, ''நான் எளிதில் இக்கத்தியை வெளியே எடுத்துவிடு வேன். ஆனால் அறுவைச் சிகிச்சைக் கான உபகரணங்களை இப்போது நான் எடுத்து வரவில்லையே. அவை என் வீட்டில் அல்லவா இருக் கின்றன'' என்றான்.

பிறகு அவன் யானை மீதேறி அந்த மனிதனின் உடலில் குத்தி உடைந்து போன கத்தியைப் பார்த்து ''இது ஏதோ அரச குடும்பக் கத்தி போல இருக் கிறதே!'' என்று மணியகாரரைப் பார்த்துக் கூறினான்.

அப்போது முன்பு முதலை வடிவில் இருந்தவன் ''ஆம். நீ சொல் வது சரியே! இது ஓர் அரசகுமாரனின் கத்தி தான். அந்த அரசகுமாரன் தனக்கு ஏதோ மிகவும் அதிக சக்தி உள்ளதாக எண்ணி என்னைத் தாக்கினான். நானும் அவனோடு சண்டை போட்டு அவனையும் அவனது சகோதரியை யும் சிறைப்பிடித்தேன். என்னுடன் வந்தவர்கள் என்னை இப்படியே விட்டுவிட்டு அந்த அரசகுமாரியை யும் அரசகுமாரனையும் கொண்டு போய் விட்டார்கள்,'' என்றான்.

அப்போது முத்து கிராம மணிய காரரிடம், ''ஐயா! இவரது உடலில் குத்தப்பட்ட அரசகுமாரனின் கத்தி உடைந்திருக்கிறது. இதை எப்படி யாவது இப்போது வெளியே எடுத்து விடுகிறேன். உடலுக்குள் உடைந்து போன கத்தியின் சிறு முனைப் பகுதி இருக்கும். அதை அகற்ற இவரை என்



வீட்டிற்குத் தான் கொண்டு போக வேண்டும்,'' என்று உரத்த குரலில் கூறினான்.

முத்து ஏன் உரத்த குரலில் அவ் வாறு கூறினான் என்பதை கிராம மணியகாரர் புரிந்து கொண்டுவிட் டார். அரசகுமாரனின் கத்தி அந்த மனிதனின் உடலில் பாய்ந்து உடைந்து போனது என்றால் அந்த மனிதனுக்கும் அரசகுமாரனுக்கும் இடையே கடும் சண்டை நடந்திருக்க வேண்டும் என அவர் ஊகித்து விட்டார்.

மேலும் அரசகுமாரியையும் அரச குமாரனையும் கடத்திக் கொண்டு போன கூட்டத்தைச் சேர்ந்தவன் அவன் என்பதனையும் அவர் புரிந்து கொண்டார்.

அதனால் தன்னருகே நின்ற



மணியிடம் ,''மணி! நீ போய் காயத்தில் வைத்துக் கட்ட பச்சிலை களைப் பறித்து வா. அதற்குள் முத்து அவரது உடலிலுள்ள உடைந்த கத்தியை மெதுவாக எடுத்து வெளியே போட்டுவிடுவான். காயத்திலிருந்து ரத்தம் வடியாமல் இருக்க பச் சிலையை வைத்துக் கட்டி இவரை நம் கிராமத்திற்குக் கொண்டு போய் முழு சிகிச்சையை அளிக்கலாம்,'' என யாவருக்கும் கேட்கும்படிக் கூறினார்.

அந்த காயமுற்ற அந்த மனிதன் முத்துவையும் கிராம மணியகார ரையும் மாறிமாறிப் பார்த்தான். பிறகு அவன் முத்துவிடம், ''வலி அதிக மாக இருக்கிறதே. நீ கத்தியை எடுத்து பிறகு அந்த வைத்தியன் கொண்டு வரும் பச்சிலையை வைத்துக் கட்டி னால் வலி போய்விடுமா?'' என்று கேட்டான்.

முத்துவும் ''ஓ! போய்விடும்'' என்று கூறும்போதே தொலை விலிருந்து மணியின் குரல் ''காப் பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்!'' எனக் கத்தியது அங்கே இருந்த யாவருக்கும் கேட்டது.

அதைக் கேட்ட காயமுற்றவன், தான் கழற்றி வைத்த முதலை வடிவத் தலைப் பாகையை எடுத்து அணிந்து கொண்டு தனது யானையை மணி யின் குரல் வந்த திசையை நோக்கிப் போகச் செய்தான்.

யானை மீது அமர்ந்திருந்த முத் துவோ தட்டுத் தடுமாறியவாறே ''ஐயோ! எங்கே போகிறாய்?'' என்று நடுநடுங்கும் குரலில் கேட்டான். முதலை மனிதனும் ''பயப்படாதே. உன் தோழனான வைத்தியன் மணி யைக் காப்பாற்றவே போய்க் கொண் டிருக்கிறோம். அவன் அலறியதைக் கேட்டாயா? அவன் ஏதோ பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொண் டிருக்கிறான். அவனை நாம் காப் பாற்ற வேண்டும். அவன் பச்சிலை கொண்டு வந்து என் காயத்தில் கட்டினால் தானே என் காயம் ஆறி வலி இல்லாது போகும்'' என்றான்.

முதலை மனிதனின் யானை வேகமாகச் சென்றது. அது சற்று தூரம் போய் அங்கு ஓடிவந்த காட்டு யானை ஒன்றைக் கண்டு அதை பலமாகத் தாக்கியது.

அந்த யானை முதலை மனிதனின் யானையை ஓரிரண்டு நிமிடங்களே



எதிர்த்தது. ஆனால் அதற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியாமல் ஓட்டம் பிடித்தது. அந்தக் காட்டு யானை யோடு வந்த மற்ற யானைகளும் தம் சகா ஓடி வருவது கண்டு அவை கூட ஓட்டம் பிடித்தன.

இதற்குப் பிறகு முதலை மனிதன் தன் யானையை நிறுத்தினான். தன்னோடு யானை மீது இருந்த முத்து இல்லாததைக் கண்டு அவன் ''முத்து! எங்கே இருக்கிறாய்?'' என்று உரக்கக் கூவினான்.

முத்துவும் ''இங்கே தான் இருக் கிறேன். உங்கள் யானையின் வாலைப் பிடித்துக் கொண்டு தொங்கிக் கொண் டிருக்கிறேன்'' என்று பதில் குரல் கொடுத்தான்.

அதைக் கேட்டு முதலை மனிதன் சற்று நகர்ந்து கை கொடுத்து முத்து வைத் தூக்கித் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு ''இனி நீ என் உடலிலிருந்து கத்தியை எடுக்க லாமே. உம், இப்போதே எடு'' என்றான்.

அதற்கு முத்து ''அவசரப்படாதீர் கள். நான் கத்தியை எடுத்தால் காயத்திலிருந்து ரத்தம் 'குபு, குபு' வென்று வெளியே வரும். அப்படி வருவதைத் தடுக்கும் பச்சிலை பறித்துவரத் தானே மணி வைத்தியர் சென்றார். அவரது குரலைக் கேட்டுத் தானே நாம் இங்கே வந்தோம். முதலில் அவரைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். பிறகு தான் உங் களுக்குச் சிகிச்சை செய்ய முடியும்'' என்றான்.

அதைக் கேட்ட முதலை மனிதன் ''நீயும் ஒரு வைத்தியன் தானே. நீ போய் பச்சிலைகளைப் பறித்து வந்து எனக்குச் சிகிச்சையை ஆரம்பி!'' என்றான்.

அதற்கு முத்து ''எனக்கு அறுவை சிகிச்சையில் காயங்களைச் சுத்தப் படுத்தத் தான் தெரியும். எங்கள் ஊரில் நான் காயங்களையோ அல் லது புண்களையோ அறுத்து சுத்தம் செய்வேன். மணி வைத்தியர் தான் அக்காயங்களை குணப்படுத்த மருந்து வைத்துக் கட்டுவார். இதுதான் எங்கள் பழக்கம்,'' என்றான்.

அதைக் கேட்ட முதலை மனிதன், ''சரி. இப்போதே அந்த மணி வைத்தியரைத் தேடிக் கண்டுபிடிப் போம்,'' எனக் கூறி அம்முயற்சியில் இறங்கினான்.



மணி வைத்தியனை ஒரு பெரிய மலைப் பாம்பு சுற்றி வளைத்து அவனை விழுங்கத் தன் வாயைத் திறந்து கொண்டிருந்தது.

சித்தசாதகன் அதைக் கண்டு ''அடடா! யாரோ ஒருவனை ஒரு மலைப் பாம்பு விழுங்க முயன்று கொண்டிருக்கிறதே. அவனை எப்படியாவது காப்பாற்ற வேண்டும். ஜெயசீலா! நீ உன் வாளை எடு!'' என்றான்.

ஜெயசீலன் சட்டென ஓடி, தன் வாளால் பாம்பின் தலையை நகர்த்தி மணி வைத்தியனுக்குக் காயப்படாத விதத்தில் அதனை வெட்டினான். தலை துண்டிக்கப்பட்டதும் மணி வைத்தியனைச் சுற்றிய அப்பாம்பின் உடல் பகுதி தளர்ந்தது. மணி வைத்தியன் விடுவிக்கப்பட்டான்.

ஜெயசீலன் அவனைப் பிடித்துத் தடவியவாறே ''பயப்படாதே. மலைப் பாம்பு இறந்துவிட்டது. நீயும் ஆபத்திலிருந்து தப்பிவிட்டாய்!'' என்றான்.

மணி வைத்தியன் அவர்கள் இருவரையும் ஆச்சரியத்துடன் பார்த்து, ''நீங்கள் யார்? அந்த முதலை மனிதன் என்ன ஆனான்?'' என்று கேட்டான். ஜெயசீலனும் ''முதலில் நீ யாரென்றும் உனக்கும் முதலை மனிதனுக்கும் என்ன தொடர்பு உள்ளது என்பதையும் சொல்!'' என்று அதிகாரத்துடன் கேட்டான்.

மணியும் ''நான் இங்கே அருகே உள்ள ஒரு கிராமத்தில் வாழும் வைத்தியன். எம் ஊரருகே உள்ள

மணி வைத்தியனின் கூக்குரலை ஜெயசீலனும் சித்தசாதகனும் கேட்டனர். அவர்களும் அப்படிக் குரல் கொடுத்தவனைக் காப்பாற்ற விரைந்தார்கள். அப்போது அவர்கள் முதலை மனிதனின் யானை காட்டு யானையுடன் சண்டையிட்டு அதனைத் துரத்தியதைப் பார்த்தார்கள்.

சித்தசாதகன் தன் மந்திரத் தடியை ஆட்டியவாறே, ''ஜெயசீலா! நம் அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்றவன் இவனே!'' என்றான். அப்போது மறுபடியும் மணி வைத்தியன் 'காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்!!' என அலறுவது அவர்களுக்குக் கேட்டது.

ஜெயசீலனும் ''இதோ, வந்து விட்டோம்!'' என்று பதில் குரல் கொடுத்தான். இருவரும் அக்குரல் வந்த இடத்திற்குச் சென்றபோது

காட்டிற்குள் ஒரு யானை புகுந்தது. அதன் மீது ஒரு மனிதன் முதலை வடிவில் அமர்ந்திருந்தான். அவன் அங்கே தென்பட்ட ஆடு மாடு மேய்க்கும் ஒரு சிறுவனைப் பிடித்து தனக்கு உணவும் சிகிச்சைக்கு ஒரு வைத்தியனையும் அழைத்து வரு மாறு சொல்ல அனுப்பினான். கிராம மணியகாரர் ஊரார் யாவரையும் அழைத்துக் கொண்டு அந்த முதலை மனிதன் இருக்கும் இடத்திற்குச் சென்றார்,'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

''ஊரார் எல்லோரும் அந்த இடத்தை அடைந்தபோது அந்த முதலை மனிதன் தன் தலைப் பாகையை எடுக்கவே அவன் சாதாரண மனிதனாகத் தென்பட்டான். அவன் 'வைத்தியன் வந்திருக்கிறானா?' என்று கேட்கவே, கிராம மணியகாரர் என்னையும் முத்துவையும காட்டி னார். முதலை வடிவில் வந்த அந்த மனிதன் தன் இடுப்பைக் காட்டி 'ஒரு வாள் ஒடிந்து இங்கு குத்தியுள்ளது. அதை எடுக்க வேண்டும்' என்றான். நானும் 'முத்து அறுவை சிகிச்சை செய்பவன். அவன் அக்கத்தியை எடுக்கட்டும். அதன் பிறகு காயத் திற்குப் பச்சிலையை வைத்துக் கட்டு கிறேன்' எனக் கூறிவிட்டு பச்சிலை யைத் தேடிக் கொண்டு இங்கு வந்தேன். வந்த இடத்தில் அகப் பட்டுக் கொண்டேன். நல்ல வேளை யாக நீங்கள் வந்து என்னைக் காப் பாற்றினீர்கள்!'' என்று கூறினான்.

அப்போது அங்கு வந்த சேர்ந்த முதலை மனிதன் ''இவன் எனது பிரத்தியேக வைத்தியன். உம். நீங்கள் யார்? சட்டெனச் சொல்லப் போகி றீர்களா அல்லது என் யானையின் மோதலை ஏற்கப் போகிறீர்களா?'' என மிரட்டினான்.

ஜெயசீலன் தன் வாளை எடுத்துக் கொண்டு, ''இங்குள்ள கிராம வைத் தியன் உனக்குத் தனிப்பட்ட வைத் தியனா? உண்மையில் நீ யார்?'' என்று அதட்டியவாறே கேட்டான். அப்போது சற்றும் தாமதிக்காமல் சித்தசாதகனும் தன் மந்திரத்தடியை உயர்த்தினான். (தொடரும்)





# மர்மக் குளம்

## 5

(காட்டு யானைகளைத் துரத்திய பிறகு முதலை மனிதன் மணியைத் தேடி அலைந்தான். மலைப்பாம்பின் வாயில் அகப்பட்ட மணி உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தான். ஜெயசீலன் அவனைக் காப்பாற்றி அவனிடம் விபரங்கள் கேட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது முதலை மனிதன் அங்கு வந்தான். அவனைப் பார்த்ததுமே ஜெயசீலன் வாளை உருவினான். சித்தசாதகனும் மந்திர தண்டத்தில் கை வைத்தான்) - அதன் பிறகு

பயமின்றி வாளுடனும் மந்திர தண்டத்துடனும் தன்னை எதிர்ப்பதற்காக நின்ற ஜெயசீலனையும், சித்த சாதகனையும் கண்டு முதலை மனிதன் பயந்தான். தனது வாகனத்தையும், முதலை உருவத்தையும் கண்டு அவர்கள் பயந்து நடுங்கி 'செத்தோம், பிழைத்தோம்' என்று ஓடிவிடுவார்கள் என்று நினைத்தான். ஆனால் அப்படி ஏதும் நடக்கவில்லை.

சூலத்தைக் கையிலெடுத்தபடி முதலை மனிதன் சத்தமாக ''நீங்கள் யார்? இந்தக் காட்டில் உங்களுக்கு என்ன வேலை?'' என்று கேட்டான்.

வாளைக் கையில் எடுத்துக் கொண்டு ஜெயசீலன், ''உன்னுடைய உருவத்தைப் பார்த்தால் எனக்குச் சிரிப்புத் தான் வருகிறது. நான் கேட்க வேண்டிய கேள்வியை நீ கேட்கிறாய். அது சரி, நீ யார்? இந்தக் காட்டில் உனக்கென்ன வேலை? உன்னைப் போல் உன் யானையையும்



விசித்திரமான தோலினால் மூடியிருக்கிறாய்? இந்தப் போலி எல்லாம் எதற்கு?'' என்று கேட்டான்.

''சீ! ஒரு மனிதன் என்னைக் கேள்வி கேட்பதா? என்ன அவமானம்!'' என்றபடி முதலை மனிதன் தனது ஆயுதத்தைக் கையில் எடுத்தான். அப்பொழுது அவன் வாலைப் பிடித்துக் கொண்டு நடுங்கிக் கொண்டிருந்த முத்து தைரியத்தை வரவழைத்துக் கொண்டு முதலை மனிதனின் சூலந்தாங்கிய இரண்டு கரங்களையும் வலுவாகப் பிடித்துக் கொண்டு, ''முதலை ஐயா! அமைதியாக இருங்கள். நீங்கள் பெரிய வீரர் தான். அதில் சந்தேகமே இல்லை. ஆனால் இப்பொழுது ஒடிந்த பாதி வாள் உங்கள் வயிற்றில் பாய்ந்து தொங்கிக் கொண்டிருக்கிறது. இவர்களுடன் சமாதானமாகப் போவது தான் நல்லது. ஏனென்றால் உங்களுக்கு வைத்தியம் செய்யும் மணியும் வைத்தியம் செய்யும் நிலையில் இல்லை,'' என்றான்.

வீரன் சொன்னதைக் கேட்டு முதலை மனிதன் மணியைப் பார்த்தான். எழுந்திருக்க முயற்சி செய்தும் அவனால் எழுந்திருக்க முடியவில்லை. கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. வேதனையில் முனகிக் கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் வெட்டப்பட்ட பாம்பு துடித்துக் கொண்டிருந்தது. இந்தக் காட்சியைப் பார்த்து முதலை மனிதன் சிறிது நேரம் சும்மாயிருந்தான். பிறகு ''மணி! எனக்கு சிகிச்சை செய்ய வந்து மலைப் பாம்பிடம் மாட்டிக் கொண்டாய். ஒருவேளை அதை நீ வைத்தியத்திற்கான மூலிகைக் கொடி என்று நினைத்தாயா? நீ விரும்பினால் யானையையே விழுங்கும் சக்தி படைத்த பாம்பினை உனக்குத் தந்திருப்பேனே!'' என்றான்.

பிறகு அவன் ஜெயசீலனையும், சித்தசாதகனையும் பார்த்து ''இன்னும் நீங்கள் இங்கு தான் இருக்கிறீர்களா? உயிரின் மேல் ஆசை இருந்தால் ஓடிவிடுங்கள். இல்லாவிட்டால் எனது சூலத்திற்குப் பலியாகிவிடுவீர்கள்,'' என்றான்.

ஜெயசீலன் வாளை ஓங்கியபடி முன்னேறினான். அப்பொழுது யானையின் மீதிருந்த முத்து ''வாள் ஏந்திய வீரனே! சற்றுப் பொறு! இந்த முதலை மனிதனின் மீது வாளை ஏன்

வீசுகிறாய்? அது போரிடும் நிலையில் இல்லாதவனைக் கொல்வதற்குச் சமம். ஏற்கனவே இவன் வயிற்றில் வாள் பாய்ந்திருக்கிறது. அதை வெளியில் எடுக்காவிட்டால் ரத்தம் உறைந்து சாக நேரிடும்,'' என்றான்.

''இவன் சாவு சுலபமாக இருப்பதை நானும் விரும்பவில்லை. இவன் வயிற்றில் பாய்ந்துள்ள வாளின் மறுபாதி கனகாட்ச மன்னரிடம் இருக்கிறது,'' என்று ஜெயசீலன் கூறினான்.



ஜெயசீலன் கூறி முடிப்பதற்குள் சீற்றத்துடன் ''உனக்கு என்னைப் பற்றி எல்லாமே தெரிந்திருக்கிறது போலும்!'' என்று முதலை மனிதன் கூறினான்.

''ஆம்! தெரியும்! காட்டில் இளவரசன், இளவரசியை அபகரித்தாய். உன் வயிற்றில் பாய்ந்துள்ள பாதி வாள் இளவரசன் காஞ்சனவர்மனுடையது,'' என்றான் ஜெயசீலன். இதற்குப் பிறகும் உன்னை உயிருடன் விடக்கூடாது!'' என்று கூறியபடி முதலை மனிதன் அவர்கள் மீது சூலத்தை எறியத் தயாரானான். அப்பொழுது முத்து சூலத்தைப் பிடித்துக் கொண்டான். தடுமாறி அவன் கீழே விழுந்தான். சூலமும் விழுந்தது.

அதே சமயம் ஜெயசீலன் யானையின் பின்புறமாக ஏறி முதலை மனிதனின் கழுத்தைப் பிடித்துக் கொண்டான். சித்தசாதனும் கீழே விழுந்த சூலத்தை எடுத்துக் கொண்டு ''ஜெய் மகாகாளி!'' என்று உரக்கக் கூறினான். முதலை மனிதன் சூலமும் போய் எதிரிகளின் வலையிலும் விழுந்து விட்டான்.

ஜெயசீலன் அவன் கழுத்தில் வாளை வைத்தபடி, ''இப்பொழுது சொல். நீ யார்? உன்னுடைய பெயர் என்ன? உன்னுடைய தோல்வியை ஒப்புக் கொள். இல்லாவிட்டால் கொன்றுவிடுவேன்,'' என்றான்.

''ஏ மனிதனே! உனது தைரியத்தை பாராட்டுகிறேன்,'' என்றான். அவன் கழுத்தை குலுக்கியபடி, ''ஏய்! போலி முதலையே! உன்னுடைய பெயரைச் சொல். தோல்வியை ஒப்புக் கொண்டு என்னுடன் வந்து ஹிரண்யபுரி மன்னர் கனகாட்சனிடம் அவரது குழந்தைகளை எங்கு ஒளித்து வைத்திருக்கிறாய் என்று சொல்!'' என்றான் ஜெயசீலன்.



''எனது பெயர் மகரகேது. மன்னரின் குழந்தைகளை எங்கு வைத்திருக்கிறேன் என்று சொல்ல அவ்வளவு தூரம் போக வேண்டாமே, உன்னிடமே கூறுகிறேனே!'' என் றான் மகரகேது.

இதை ஒப்புக் கொள்ளாத ஜெயசீலன், ''என்னிடம் சொல்ல வேண்டியது இல்லை. வினோத யானையுடன் ஹிரண்யபுரிக்கு வா! வழியில் தப்ப நினைத்தால் ஒரே வீச்சில் உன் கழுத்தைச் சீவி விடுவேன்,'' என்று ஜெயசீலன் கூறினான்.

மகரகேது அவன் பேச்சை ஒப்புக் கொண்டு மேலே சென்றான். சித்த சாதகனும் யானை மீது ஏறிக் கொண்டான்.

அப்பொழுது கைதட்டி அவர்களை நிறுத்தி ''என்னுடைய கிராமம் வழியில் தான் இருக்கிறது. இந்த அடர்ந்த வனத்தைக் கடப்பது கடினம். கொடிய மிருகங்கள் என்னைக் கொன்றுவிடும். அதனால் என்னையும் கூட்டிச் செல்லுங்கள்,'' என்று மணி கூறினான்.

''இந்தக் கொடியவனின் சிகிச்சைக்காக நீ வந்ததால் எனக்கும் இவனைப் பிடிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. எனவே உன்னைக் காப்பது என் கடமை. நீயும் முத்துவும் எங்களுடன் நடந்து வாருங்கள்,'' என்றான் ஜெயசீலன்.

எல்லோரும் ஹிரண்யபுரியை நோக்கி முன்னேறினர். அப்பொழுது ''நான் காலையில் இருந்து இந்த மகரகேதுவிற்குச் சிகிச்சை செய்ய முயற்சி செய்து கொண்டு இருந்தேன். மற்ற எவரும் பாய்ந்த வாளுடன் இவ்வளவு நேரம் உயிருடன் இருந்திருக்க முடியாது. இவனோ அதை ஓர் ஆபரணம் போல் அணிந்து கொண்டு நடக்கிறான். இவன் நாடியைப் பரிசோதித்தேன். இவன் உடலில் ஓடும் ரத்தம் குளிர்ந்த ரத்தம். எனவே இவன் ஜலத்தில் வாழ்பவனாக இருக்க வேண்டும்,'' என்று மணி கூறினான்.

''நீ சொல்வதைப் பார்த்தால் தவளை போல் இவனும் நீரிலும் நிலத்திலும் வாழும் உயிரினம் என்று நினைக்கிறேன். கனகாட்ச மன்னரின் வேலை முடிந்ததும் மருத்துவ சம்பந்தமான ஆராய்ச்சி செய். இந்த யானையையும் உனக்குத் தருகிறேன்,'' என்று ஜெயசீலன் கூறினான்.

இதைக் கேட்டு பல்லைக் கடித்த படி மகரகேது உறுமிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். திடீரென்று மகர கேது மீது ஓர் அம்பு விழுந்தது. ஜெயசீலன், சித்தசாதகன் இருவரும் திகைத்தனர். ஜெயசீலன் புதர்களின் வழியாக பார்த்தான். அப்பொழுது ''எந்த மகரகேதுவை நான் கொல்ல வேண்டும் என்று நினைத்திருந் தேனோ, அவனை நீ எங்கு கூட்டிச் செல் கிறாய்? அப்படி நீ செய்தால் என் அம்பு உன் மார்பில் பாயும்,'' என்ற அட்டகாசமான குரல் ஒலித்தது.

அது பலராமனின் குரல் என் பதை ஜெயசீலனும் சித்தசாதகனும் உணர்ந்து கொண்டனர். ''ஏ பலராமா! இன்னும் ஓர் அம்பு விழுந்தால் உன் னைக் காளிக்குப் பலியாக்கிவிடு வேன்,'' என்று சித்தசாதகன் கூறி னான். ''நீ யார்? மன்னருடைய பூத வைத்தியனா?'' பலராமன் கத்தினான்.

''நான் பூத வைத்தியன் அல்ல. சித்தசாதகன். மந்திரக்கலை பயின் றவன். பேசாமல் மரத்தை விட்டு இறங்கு. இல்லாவிட்டால் என் மந்திரத்தால் மரம் தீ பிடித்து நீ கருகிச் சாவாய்!'' என்றான் சித்தசாதகன்.

''என்னை அழிக்க யாராலும் முடியாது. நான் தான் மகரகேதுவுடன் உங்களையும் அழிப்பதற்காக இங்கு வந்திருக்கிறேன்,'' என்றான் பல ராமன். ''யாரை மிரட்டுகிறாய்? உன் னைப் போன்ற பலரை நான் பார்த் திருக்கிறேன். தைரியம் இருந்தால் நேருக்கு நேர் சண்டை போட வா! ஏன் ஒளிந்து நின்று மிரட்டுகிறாய்?'' என்று ஜெயசீலன் கூறினான்.

''என்ன! அந்த நீச பலராமனா என் மீது அம்பு எய்கிறான். நான் மர்மக் குளத்தின் அதிபதி. எனக்கா இந்தக் கதி? எனது யானை மரத்தின் மீது மோதி அவனைக் கீழே தள்ளி மிதித்துக் கொன்றுவிடும்,'' என்று மகரகேது கத்தினான்.

இதைக் கேட்டதுமே யானை மரத் தின் மீது மோதி தும்பிக்கையினால் மரத்தை இழுத்துக் கீழே தள்ளியது. கிளைக்கு நடுவில் அகப்பட்டுக் கொண்ட பலராமன் உரக்கக் கத்தலானான். (தொடரும்)





# மர்மக் குளம்

## 6

(ஜெயசீலனும் சித்தசாதகனும் யானை மீதிருந்த முதலை மனிதனைப் பிடித்து அதே யானை மீது அமர்ந்து ஹிரண்யுபுரத்திற்குச் சென்றனர். வழியில் ஒரு மரத்தின் மீதிருந்த வேடன் குண்டப்பன் முதலை மனிதன் மீது அம்பை எய்தான். அது அவனது தோளில் குத்தவே முதலை மனிதன் கோபம் கொண்டு தன் யானையை அந்த மரத்தையே வேரோடு பிடுங்கி எறிய ஏவினான். அப்போது -)

வேடன் குண்டப்பன் அதுகண்டு அலறினான். மரத்தோடு அவனும் கீழே விழவே, ஜெயசீலன் முதலை மனிதனை முறைத்துப் பார்த்து, ''அடே! முதலை வேஷக்காரா! நீ ஏன் என் அனுமதி பெறாமல் யானையை ஏவி மரத்தைச் சாய்த்தாய்?'' என்று கோபத்தோடு கேட்டான்.

முதலை மனிதனும் வலி தாங் காமல் முக்கி முனகியவாறே ''ஐயா! நான் இப்படிச் செய்திராவிட்டால் அந்த வேடன் இன்னொரு அம்பை எய்து என்னைக் கொன்றிருப்பான்'' என்றான்.

அப்போது சித்தசாதகன் யானை மீதிருந்து கீழே குதித்து மரக்கிளை களிடையே சிக்கி அவதிப்பட்டுக் கொண்டிருந்த குண்டப்பனை மெது வாகத் தூக்கி நிறுத்தினான். அவனது எலும்பு ஏதாவது முறிந்திருக்குமோ என சித்தசாதகன் எண்ணிக் கொண் டிருக்கையில் அவன் ஆச்சரியப்படும்



விதத்தில் குண்டப்பன் துள்ளிக் குதித்து ஓடி, ''மந்திரக்காரா! என் எலும்பு எதுவும் முறிந்து போய்விட வில்லை. இதோ பார்! என் இந்த அம்பு அந்த யானை மீதுள்ள முதலை மனிதனை எமலோகத்திற்கே அனுப்பிவிடும்,'' என்று கூறி, வில்லில் அம்பை வைத்தான்.

அதைக்கண்ட ஜெயசீலன் யானை மீதிருந்து கீழே குதித்து ஓடிப்போய் குண்டப்பனின் கழுத்தைப் பிடித்து நெருக்கி, ''அடே! நீ எனக்கா குறி வைக்கிறாய்?'' என்று கோபத்தோடு கேட்டான். அவன் பிடித்த பிடியில் நடுநடுங்கிய வேடன் வில்லையும் அம்பையும் கீழே நழுவ விட்டான். இதே சமயம் வைத்தியர்களான மணியும் முத்துவும் அங்கு வந்தார்கள். அவர்கள் முதலை மனிதனைப் பார்த்துவிட்டு வியப்புடன், ''இதென்ன கொடுமை? கத்தியால் குத்தப்பட்டது போதாது என்று அம்பு காயம் வேறா?'' என்று கேட்டார்கள்.

அதைக் கேட்ட முதலை மனிதன் ''ஆ! இப்படி எல்லோரும் கேலி பேசும் நிலைக்கு வந்துவிட்டேனே! நான் இனி உயிர் வாழக் கூடாது. நான் தற்கொலை செய்துகொண்டு மடி கிறேன்,'' என்று விரக்தியுடன் கூறி னான். சுற்றிலும் பார்த்துவிட்டுத் தன் ஈட்டியை எடுக்கப் போனான். அதைக் கண்ட சித்தசாதகன் சட்டெனப் பாய்ந்து அந்த ஈட்டியைத் தன் கையில் எடுத்துக் கொண்டுவிட்டான்.

ஜெயசீலனும் சித்தசாதகனும் முதலை மனிதன் இருந்த யானையின் மீது சட்டென ஏறி அவனது இரு பக்கங்களிலும் நின்று கொண் டார்கள். சித்தசாதகன் அவனிடம், ''பயப்படாதே! உன் உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை. உன்னை இங்கே அருகிலுள்ள கிராமத்திற்கு அழைத் துக் கொண்டு போய் அங்கு தக்க சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய் கிறோம். உன் காயங்கள் முற்றிலும் ஆறிய பிறகே உன்னை இரணியபுர மன்னரிடம் கொண்டு போய்ச் சேர்ப்போம்,'' என்றான்.

முதலை மனிதன் இரு கைகளை யும் கூப்பியவாறே, ''எல்லாம் அந்த மர்மக்குள மகேஸ்வரனின் அருளே! என்னை கிராமத்திற்கு அழைத்துச் செல்லும் வழியில் இன்னும் யாரா வது தாக்காதபடி காக்க வேண்டும்,'' என்று பணிவுடன் வேண்டினான்.

ஜெயசீலனும், ''கவலைப்



புடாதே! உன்னை யாரும் தாக்காத படி நாங்கள் பாதுகாக்கிறோம்,'' என்றான். அவர்கள் ஏறி இருந்த யானை அங்கிருந்து மெதுவாகச் செல்லலாயிற்று. அது கொஞ்ச தூரம் போனதும் அவர்களுக்குத் தாரை தப்பட்டைகளின் சத்தமும் மனிதர்கள் 'வீல் வீல்'என்று கத்துவதும் காதில் விழுந்தது. மறுநிமிடம் வேடர்களின் பூசாரி ஒருவனும் பத்து பனிரெண்டு வேடர்களும் அங்கிருந்த மரங்களிலிருந்து குதித்து அவர்களை அணுகினார்கள்.

வேடர்களின் பூசாரி தலைவிரி கோலமாய் 'ஆ ஊ' என்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டு, ''நான்தான் மகாகாளி. அந்த முதலை மனிதனின் கழுத்தை அறுத்து அவனது ரத்தத்தை என் பாதங்களில் தடவ வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் பூவுலகில் வேடர் குலமே இல்லாது அழித்துவிடுவேன்,'' என்று மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க உறுமினான்.

அதைக் கேட்டு யானையின் பின்னால் நடந்து வந்து கொண்டிருந்த வேடன் குண்டப்பன், ''தாயே! அப்படியே செய்கிறோம்!'' எனக் கூறிவிட்டு சித்தசாதகனிடம் ''எங்கள் குலதேவதை இந்தப் பூசாரியின் வாக்கில் புகுந்து ஆணை இடுகிறது. எனவே முதலை மனிதனை அந்தப் பூசாரியிடம் ஒப்படைத்துவிடுங்கள்,'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் முதலை மனிதனின் காதில் ரகசியமாக ஏதோ கூறினான். அவனும், ''யானையே! இந்த குண்டப்பனைஅலாக்காகத் தூக்கு!'' எனவே, யானையும் தன் துதிக்கையால் அவனைப் பற்றி உயரத் தூக்கியது. அவன் அலறவே ஜெயசீலன், ''ஏய்! குண்டா! உன் இனத்தவரை எல்லாம் இங்கிருந்து போகச் சொல்!'' எனக் கூறியவாறே தன் வாளை உருவி அவனது கழுத்தின் மீது வைத்தான். மறுநிமிடமே குண்டப்பன் வேடர் கூட்டத்தைப் பார்த்து, ''எல்லோரும் எதுவும் செய்யாமல் இங்கிருந்து போய் விடுங்கள்! இந்த முதலை மனிதன் மன்னரின் ஆள்!'' என்று உரக்கக் கூவினான்.

பூசாரி பேயாட்டம் ஆடியவாறே, ''உம். விடமாட்டேன் அந்த முதலை மனிதனை. எனக்கு அவனது ரத்தம் வேண்டும்,'' என்று கூறி, யானையை



நோக்கி வந்தான். அப்போது ஜெய சீலன் யானை மீதிருந்து கீழே குதித்து பூசாரியின் தலைமயிரைப் பற்றி இழுத்து, ''அடே! பொய்யாகவா 'சாமி' வந்ததாகக் கூவுகிறாய்? இது நீ குடி போதையில் பிதற்றுவது தானே. உண்மையைச் சொல்,'' என்று அதட்டினான்.

பூசாரியோ, ''மகாகாளியே! என் னைக் காப்பாற்று!'' என்று கதறி னான். அப்போது பத்து குதிரை வீரர் கள் வந்து எல்லோரையும் சூழ்ந்து கொண்டு, ''இங்கே என்ன ரகளை?'' என்று அதட்டினார்கள்.

அக்குதிரை வீரர்கள் இரணியபுர மன்னரின் வீரர்களே என்பதை ஜெய சீலன் தெரிந்து கொண்டுவிட்டான். அவன் அவர்களிடம், ''அதோ அந்த யானை மீதுள்ள முதலை மனிதன் தப்பி ஓடிவிடாமல் கண்காணியுங் கள். அவனைச் சிறைப்படுத்தி வந் திருக்கிறேன்,'' என்றான்.

அப்போது அக்குதிரை வீரர்களின் தலைவன் முதலை மனிதனை வியப் புடன் பார்த்து, ''இவன் மனிதனா அல்லது ராட்சஸனா?'' என்று கேட் டான். ஜெயசீலனும், ''இவன் யாரெ னத் திட்டவட்டமாகக் கூற முடி யாது,'' என்றான்.

இதற்குள் பூசாரியை சித்தசாத கன் பிடித்து சற்று தூரத்திற்கு இழுத்துக் கொண்டு போய், ''ஏய்! நீ ஒன்றும் காளி பக்தன் அல்ல. இவன் மார்பிற்குக் குறி வைத்து அம்பை எய்யுங்கள்!'' என்று வேடர்களிடம் கூறினான். அதைக் கேட்ட பூசாரி பயந்து நடுங்கி ஜெயசீலன் இருந்த இடத்திற்கு ஓடி அவனது கால்களில் விழுந்து, ''ஐயா! என்னைக் காப் பாற்றுங்கள்!'' என்று கெஞ்சினான்.

ஜெயசீலனும் வேடர்களிடம், ''இவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுங்கள். இனிமேல் இந்த மாதிரி செய்ய மாட்டான். இவன் நல்ல பாடம் கற்றுக் கொண்டுவிட் டான்,'' என்றான். பிறகு சித்தசாதக னிடம், ''சித்தா! நீ இவனைக் கொல் லும்படி வேடர்களிடம் கூறியது பெரும் தவறு. நீ யார் இவனைத் தண்டிக்க? நீதிபதியா அல்லது மன்னனா? இரண்டும் இல்லையே!'' என்று கூறினான்.

இதை எல்லாம் பார்த்த குதிரை வீரர்களும் அவர்களது தலைவனும் ஜெயசீலனை பயபக்தியுடன் பார்த் தார்கள். அத்தலைவனும், ''ஐயா!



தாங்கள் தாம் ஜெயசீலரா? நம் முதலமைச்சர் இங்கே மலைச் சரிவில் ஏரிக்கரையிலுள்ள கிராமத்தில் தான் முகாமிட்டிருக்கிறார். நாங்களும் உங்களைத் தேடிக் கொண்டு தான் இந்தக் காட்டிற்குள் வந்தோம்,'' என்றான்.

அப்போது சித்தசாதகன், ''பேஷ்! பேஷ்!! நானும் ஜெயசீலனும் சேர்ந்து இந்த முதலை மனிதனைப் பிடித்தோம். இவன் தான் நம் அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்றவன்,'' எனக் கூறி முதலை மனிதனைச் சுட்டிக் காட்டினான்.

குதிரை வீரர்களின் தலைவனும் முதலை மனிதனை ஏறஇறங்கப் பார்த்துவிட்டு, ''இவன் இடுப்பில் கத்தியும், முதுகில் அம்பும் சொருகப்பட்டுள்ளனவே. இதென்ன புது மாதிரியான வேஷம்?'' என்று கேட்டான். அப்போது மணி வைத்தியன் ''இது வேஷம் அல்ல. இவனைக் கொல்ல முயன்றவர்கள் அளித்த பரிசுகள்,'' என்றான்.

இனியும் தாமதிக்கக்கூடாதென எண்ணிய ஜெயசீலன், ''சரி, நாம் அமைச்சரைக் காணச் செல்வோம்,'' எனவே, முதலை மனிதனும் ''இந்த அம்பின் வலி தாங்க முடியவில்லை. இதை எய்தவனை என் யானை கொன்றுவிட்டது போலிருக்கிறதே!'' என்றான்.

மணி வைத்தியனும் அந்த வேடனின் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு, ''இவன் இன்னமும் உயிருடனேதான் இருக்கிறான்,'' என்றான். அப்போது சித்தசாதகன் வேடன் குண்டப்பனிடம், ''குண்டா! நீ அடித்துப் போட்ட காட்டுக் கோழியை எடுத்துக் கொண்டு அந்தப் பூசாரி ஓடுகிறான், பார்! அவனைத் துரத்திப் பிடி!'' என்று கூவினான். குண்டப்பனும் ஓடிப்போய் பூசாரியின் முன் நின்று, ''எங்கே என்னுடைய கோழி? மரியாதையாகக் கொடுத்துவிடு. இல்லாவிட்டால் உன் கழுத்தை நெறித்துக் கொன்றுவிடுவேன்,'' என்று பயமுறுத்தினான்.

பூசாரியோ மற்ற வேடர்களிடம், ''இந்த குண்டப்பனைப் பேய் பிடித்துள்ளது. இவனைப் பிடித்துக் கட்டுங்கள். அதன்பின் வேப்பிலை அடித்துப் பேயை விரட்டுகிறேன்,'' என்றான் அவன் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு.



அவரது கண் முன்னாலேயே.சிகிச்சை செய்கிறேன். அவரும் எங்கள் திற மையைப் பார்த்துவிட்டு அரசாங்கத் தில் வேலை போட்டுக் கொடுக் கட்டும்,'' என்றார்கள்.

ஜெயசீலனும், ''நீங்கள் இரு வரும் இந்த முதலை மனிதனுக்குச் சிகிச்சை செய்து காயங்களை ஆற்றி விட்டால் உங்களுக்கு அரசாங்க வேலை கிடைக்கும். அப்படி செய்யா விட்டால் உங்கள் தலைகள் தரையில் உருளும். தெரிந்ததா?'' என்று எச் சரித்தான்.

சித்தசாதகனும், ''இவர் சொன் னதைப் புரிந்து கொண்டீர்களா?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும், ''இனி நாம் போய் அமைச்சரைப் பார்ப்போம்!'' எனவே, எல்லோரும் புறப்பட்டு அமைச்சர் தங்கி இருந்த ஏரிக் கரையை அடைந்தனர். அவரும் முதலை மனிதனைப் பிடித்து வந்த தற்காக ஜெயசீலனைப் பாராட்டினார். பிறகு அவர், ''அரசகுமாரனையும் அரசகுமாரியையும் இவன் எங்கே மறைத்து வைத்திருக்கிறான்?'' என்று கேட்டார்.

ஜெயசீலனும், ''அதை இன் னமும் அறிந்து கொள்ள முடிய வில்லை. இவனை எதிர்த்து நம் இளவரசர் வாள் போர் புரிந்திருக் கிறார். அந்த வாள் ஒடிந்து இவன் உடலில் சிக்கி இருக்கிறது. இவ னைப் பிடித்துக் கொண்டு வரும் போது ஒரு வேடனின் அம்பு இவனது முதுகில் பாய்ந்துவிட்டது. அதனால்

மற்ற வேடர்களும் பேய் பிடித்த குண்டப்பன் தங்களை எல்லாம் என்ன செய்வானோ எனப் பயந்து ஓடினார்கள். குண்டப்பன் பூசாரி யைத் துரத்திக் கொண்டு ஓட, ஒரே நொடியில் அங்கிருந்த வேடர்களின் கூட்டம் கலைந்து மறைந்து போய் விட்டது.

சித்தசாதகனும் ''இந்த வேடர் களின் தொல்லை ஒழிந்தது. இனி நாம் போய் அமைச்சரைக் காணலாம்,'' என்றான்.

ஜெயசீலனும் சரியெனக் கூறி விட்டு, மணி வைத்தியனிடமும் முத்துவிடமும் ''உங்கள் ஊரில் தான் அமைச்சர் தங்கி இருக்கிறாராம். நாம் எல்லோரும் அங்கே செல்வோம்,'' என்றான்.

மணி வைத்தியனும் ''அப்படி யானால் இந்த முதலை மனிதனுக்கு

இந்த முதலை மனிதனுக்கு முதலில் சிகிச்சை அளிக்க வேண்டும். அவன் குணமடைந்த பிறகே அவனிடம் எதையும் கேட்டு அறிய முடியும்,'' என்றான். அமைச்சரும் அவ்வாறே செய்யலாம் எனக் கூறினார்.

அப்போது முதலை மனிதன், ''ஜெயசீலரே! என் யானை தண்ணீர் குடித்துப் பல நாட்களாகி விட்டன. அதனால் அதனை ஓட்டிப் போய் இந்த ஏரியில் தண்ணீர் குடிக்க வைக்கிறேன்,'' என்றான்.

ஜெயசீலனும், ''முதலைத் தோல் போர்த்த மூடனே! எங்களிடமிருந்து தப்பிச் செல்லவா திட்டம் போடுகிறாய்? அதை நடக்கவிட மாட்டேன். யானைக்குக் குடிக்க நீரைக் கொடுக்க அதனைக் குளத்திற்குள் கொண்டு செல்லலாம். ஆனால் நீ யானையை நடத்திச் செல்லும் போதும், அதைத் தண்ணீர் குடிக்க வைக்கும் போதும் உன் இருபுறத்திலும் நானும் சித்தசாதகனும் இருப்போம். நீ தப்ப முயற்சித்தால் உன்னைச் சித்திரவதை செய்வோம்,'' என்றான்.

முதலை மனிதன் தன் யானையை ஏரிக்குள் கொஞ்சதூரத்திற்கு நடத்திச் சென்றான். அப்போது அவன் ஜெயசீலனிடம், ''ஜெயசீலா! எனக்கு மரணம் ஏற்படும் என்பது உறுதி. எனக்கு சிகிச்சை அளிக்கும் போதே அது ஏற்படலாம். நான் குணமடைந்து விட்டாலோ மன்னர் எனக்கு மரண தண்டனை அளிப்பது நிச்சயம். இவ்வாறு எந்த விதத்தில் பார்த்தாலும் நான் இறந்து தான் போவேன் என்பது உறுதியாகிவிட்டது. உங்கள் வைத்தியர்களிடம் சிகிச்சை பெற்று அவஸ்தைப்பட்டு நான் சாக விரும்பவில்லை. மன்னனிடம் தண்டனை பெற்று மடியவும் விரும்பவில்லை. இப்போது என்னைக் காப்பாற்றுபவர் என் குல தெய்வம் மர்மக்குள மகேஸ்வரன் தான். யானையே! வழி காட்டு!'' எனக் கூறவே, அந்த யானை ஜெயசீலனோடும் சித்தசாதகனோடும் ஏரி நீரில் முங்கியது.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

## 7

(மந்திரி குளக்கரையில் முகாமிட்டிருக்கிறார் என்று குதிரை வீரர்கள் கூறத் தெரிந்து கொண்ட ஜெயசீலன் முதலை மனிதனை அந்த இடத்திற்குக் கொண்டு செல்லத் தீர்மானித்தான். அவனும் சித்தசாதகனும் முதலை மனிதனோடு அவனது யானை மீதே அமர்ந்து சென்றார்கள். தான் இறக்கப் போவது உறுதி எனத் தெரிந்து கொண்ட முதலை மனிதன் யானையைத் தண்ணீர் குடிக்க வைக்க அதனை ஏரிக்குள் போகச் செய்தான். யானை ஏரி நீருக்குள் மூழ்கவே, அதன் மீதிருந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் முதலை மனிதனும் ஏரிக்குள் மூழ்கலானார்கள். அப்போது –)

முதலை மனிதனோடு ஏரி நீரில் விழுந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் நீந்தியவாறே இருந்தார்கள். ஜெய சீலன் அப்போது நீரில் மூழ்கி முதலை மனிதனும் அவனது யானையும் போகும் திசையிலேயே பின் தொடர லானான். அவன் முதலை மனிதனை அணுகியதும் அவன் முதுகில் ஓர் அடி கொடுத்து, ''அடே, முதலைத்தோலா! எங்களை இந்த ஏரியின் நீரில் மூழ் கடித்து சாகடிக்கப் பார்க்கிறாயா?'' என்று கேட்டான்.

முதலை மனிதன் பலமாகச் சிரித்து, ''ஜெயசீலா! நாம் இருப்பது நீரின் நடுவே. சண்டை போடுவதா னால் நீருக்குள்ளும் போட வேண்டி வரும். அங்கு எதையும் பார்க்க முடியாது. கேட்க முடியாது. மூச்சு



கூட விட முடியாது. இது தெரியுமா?'' என்று கேட்டான்.

சித்தசாதகனும், ''ஜெயசீலா! இவன் சொல்வது சரியே. இவனது யானை அதோ போகிறது. இவனைத் தாக்க ஒரு வேளை மந்திர சக்தி வேண்டியிருக்கலாம். இதற்காக மகா காலனை நான் வேண்டிக் கொள்கிறேன்,'' என்றான்.

இதற்குள் ஒரு பெரிய குகையின் வாயிலிலிருந்து நீர் 'குபு குபு'வென்று தண்ணீர் வந்து ஏரிக்குள் விழுந்து கொண்டிருப்பதை ஜெயசீலனும் சித்தசாதகனும் கவனித்தார்கள்.

முதலை மனிதன் ஜெயசீலனிடம், ''என்ன பேச்சு மூச்சு இல்லாமல் வருகிறீர்கள்? ஏன் மூச்சு விடத் திணறுகிறீர்களா? நீரில் முங்கி மேலே வருவது என்றால் இப்படித் தான் சிரமப்பட வேண்டும்,'' என்றான்.

ஜெயசீலனும், ''ஓஹோ! எங்களைவிட நீரில் அதிக நேரம் மூழ்கி இருந்ததால் உனக்கு அபூர்வ சக்தி இருக்கிறது என்று தெரிவிக்கிறாயா?'' என்று கேட்டான். முதலை மனிதனும், ''அதில் சந்தேகம் என்ன? எனக்கு மட்டும் அல்ல, என் யானைக்கும் அபூர்வ சக்தி உள்ளது. அதனால் நீ என்னைத் தாக்க வாளை உருவாதே!'' எனச் சிரித்துக் கொண்டே கூறினான்.

ஜெயசீலனும், ''சும்மா ஜம்பம் அடிக்காதே! பேசாமல் உன் யானையுடன் ஓடித் தொலை! அப்படி ஓடா விட்டால் என் வாள் உன் தலையைத் துண்டித்துவிடும்,'' என்று எச்சரித்தான். சித்தசாதகனும், ''முதலைத் தோலா! ஜெயசீலனின் வாள் மட்டு மல்ல, என் ஈட்டியும் உன்னைப் பதம் பார்த்துவிடும்,'' என்று கூறியவாறே தன் ஈட்டியை உயர்த்தினான்.

அதைக் கண்டு முதலை மனிதன் பலமாகச் சிரித்து, ''ஓஹோ! நீங்கள் இருவருமா என் தலையை வெட்டி எறியப் போகிறீர்கள்? என்னை மட்டும் நீங்கள் ஒருவேளை கொன்றுவிட்டால் நீங்கள் இருவரும் இதே இடத்தில் துடிதுடித்து இறந்து போய்விடுவீர்கள்,'' என்றான்.

அதைக் கேட்டு ஜெயசீலனும் சித்தசாதகனும் பயந்துவிடவில்லை. இச்சமயத்தில் ஒரு பெரிய முதலை ஒரு மீனைத் துரத்திப் பிடிக்க முயன்று கொண்டிருந்தது. முதலை மனிதன் அந்த முதலையின் வாலைப் பிடித்துத் தூக்கி தூரத்தில் எறிந்துவிட்டு,

''ஜெயசீலா! நீங்களும் இங்கு இறக்கப் போவதில்லை. நானும் உங்களுக்கு அகப்படப் போவதில்லை. நான் சற்று நேரத்தில் கரை சேர்ந்து என் யானையுடன் போய்விடுவேன். நீங்களும் உங்கள் வழியே போய் விடுங்கள்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் முதலை மனிதனிடம், ''இதுதான் மர்மக்குளம் எனப்படுவதா?'' என்று கேட்டான். முதலை மனிதன் தன் உடலை ஒரு முறைப் பார்த்துக் கொண்டு, ''இந்தக் குளத்து நீரில் இவ்வளவு நேரம் இருந்ததால் கத்தியினாலும் அம்பினாலும் ஏற்பட்ட காயங்களின் வலி போய்விட்டது. இது மர்மக்குள மகேஸ்வரனின் அருளால் தான். ஆனால் மர்மக்குளம் எனப்படுவது இது இல்லை. அதைப் பார்த்த எந்த மனிதனும் உயிருடன் திரும்பி வந்ததே இல்லை,'' என்றான்.

அதன்பின் முதலை மனிதன் வேகமாக நீந்தித் தன் யானையை அடைந்து விட்டான். அவனைப் பிடிக்க முடியாது எனக் கண்ட ஜெயசீலனும் சித்தசாதகனும் அங்கு மிதந்து வந்த ஒரு பெரிய மரக்கிளையைப் பற்றி அதில் ஏறி ஆளுக்கு ஒரு முனையில் உட்கார்ந்து கொண்டார்கள்.

அப்போது தான் ஒரு புலியும் அந்தக் கிளையில் இருப்பதை அவர்கள் பார்த்தார்கள். அந்த மரக்கிளை மிதந்து கொண்டே போய் குகையிலிருந்து வந்த நீரோட்ட வேகத்தில் மிக வேகமாய்ப் போய் இரு பாறைகளுக்கு மத்தியில் சிக்கி இரண்டாக



உடைந்து தனித்தனியாகச் சென்றது. கிளையின் ஒரு துண்டில் ஜெயசீலனும் மற்ற துண்டில் சித்தசாதகனும் புலியும் இருந்தனர்.

ஜெயசீலன் இருந்த மரக்கிளைத் துண்டு கரை ஓரமாகப் போய் நின்றது. நல்ல வேளையாக அந்தக் கிளை நேராகப் போகவில்லை. போயிருந்தால் அங்குள்ள நீர்வீழ்ச்சியை அடைந்து ஜெயசீலனோடு உயரமான இடத்திலிருந்து ஆழமான பள்ளத்துள் விழுந்திருக்கும். கரை ஓரமாகப் போய்ச் சேர்ந்த ஜெயசீலன் எழுந்து நின்று சுற்றிலும் பார்த்தான்.

தன்னோடு வந்த சித்தசாதகன் என்ன ஆனான் என்று தெரியவில்லை. அருகில் கரை ஓரமாக அவனும் தன்னைப் போல ஒதுங்கி இருக்கலாம் என்று எண்ணி அவன்



'சித்தசாதகா!' என்று உரக்கக் கூவிப் பார்த்தான்.

பதில் எதுவும் வராததால் அவனுக்கு என்ன ஆபத்தோ என்று எண்ணி ஜெயசீலன் மனம் கலங்கினான். பிறகு ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு கரை மீது நடந்து கொண்டே போனான். ஓர் இடத்தில் புலியின் உறுமல் கேட்டு திடுக்கிட்டுத் திகைத்து நின்றான். அப்போது புலியும் சித்தசாதகனும் மரக் கிளையில் இருந்தது அவன் நினைவிற்கு வந்தது.

ஒருவேளை புலி சித்தசாதகனைக் கொன்றுவிட்டதோ என்று எண்ணி ஜெயசீலன் வாளை உருவிக் கையில் பிடித்தவாறே உறுமல் சத்தம் வந்த இடத்தை நோக்கிச் சென்றான்.

ஓரிடத்தில் கரையில் சித்தசாதகன் ஆடாமல் அசையாமல் படுத்துக் கிடப்பதை அவன் கண்டான். புலி அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. அதன் இரண்டு கால்கள் முறிந்து போயிருந்ததால் அதனால் வேகமாகச் செயல்பட முடியாமல் போயிற்று. அது மேலும் உறுமிக் கொண்டே சித்தசாதகனைத் தாக்க வந்து கொண்டிருந்தது.

இதற்குள் கட்டை போல் கிடந்த சித்தசாதகன் நினைவு பெற்றுக் கண்விழித்ததும் புலி தன்னைத் தாக்க வருவதைக் கண்டு, ''ஐயோ! காப்பாற்றுங்கள்!'' என்று அலறினான்.

இதற்குள் புலி நொண்டிக் கொண்டு போவதைக் கண்டு ஜெயசீலன் ஓடி அதன் பின்னங்கால்களைப் பற்றி உயரத் தூக்கி ஒரு புதருக்குள் எறிந் தான். ஆபத்து விலகியது கண்டு சித்தசாதகன் எழுந்து சற்றுத் தொலைவில் கிடந்த தன் ஈட்டியை எடுத்துக் கொண்டு ஜெயசீலனின் முன் வந்து நின்றான். இதற்குள் ஜெயசீலன் விரைந்து போய் தன் வாளால் புலியின் தலையை வெட்டி எறிந்தான்.

அவன் சித்தசாதகனைப் பார்த்து, ''ஆகா! மறுபடியும் உன்னைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். முதலை மனிதன் இனி நம் கையை விட்டுப் போனது போலத்தான்,'' என்றான்.

சித்தசாதகனும், ''இனி பழைய சம்பவங்களைப் பற்றிப் பேசுவதால் ஒரு பயனும் இராது. முதலில் நாம் இருக்கும் இப்பகுதியைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும்,'' என்றான்.

அப்போது யாரோ ஒருவன் அலறுவதையும், காட்டாடு ஒன்று உறுமுவதையும் அவர்கள் கேட்டார்கள். சித்தசாதகனும், ''யாரோ ஒருவன் பெரும் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான் போலிருக்கிறது,'' என்றான்.

ஜெயசீலனும், ''சித்தசாதகா! வா, நாம் போய் விஷயம் என்ன என்று பார்க்கலாம்!'' என்று கூறி அவனைக் கூட்டிக் கொண்டு சத்தம் வந்த இடத்தை நோக்கி ஓடினான்.

இருவரும் அங்கு போனதும் தாம் கண்ட காட்சியைக் கண்டு திகைத்து நின்றார்கள். ஏனெனில் அங்கு கரை ஓரத்தில் இருந்த பெரிய மரத்தில் மலைச்சாதிக் குள்ளன் ஒருவனும், காட்டாடு ஒன்றும் தொங்கிக் கொண்டிருந்தது தான் அதற்குக் காரணம்.

சித்தசாதகனும், ''இது ஏதோ மாய மந்திர வித்தை போல் இருக்கிறதே!'' என்று கூறித் தன் ஈட்டியுடன் குள்ளன் தொங்கும் கிளையை நோக்கி ஓடினான்.

அப்போது அந்த மரத்தின் மற்றொரு கிளை தாழ்ந்து அவனது தோளைத் தட்டியது. அப்போது சித்தசாதகன், ''ஜெயசீலா! இந்த மரத்திற்கு ஏதோ கொடிய சக்தி உள்ளது. அதனால் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் ஓடி வந்தான். தாழ்ந்து வந்து சித்தசாதகனை அடித்த மரக்கிளையை தன் வாளால் ஒரே வெட்டில் வெட்டி



னான். அதே கிளையில் தொங்கிக் கொண்டிருந்த காட்டாடும் குள்ளனும் ஆற்று நீரில் 'பொத்'தென்று விழுந்தார்கள்.

நீரிலிருந்து துள்ளிக் குதித்து ஓடிவந்த குள்ளன் ஜெயசீலனிடமும் சித்தசாதகனிடமும், ''ஐயா! இது மனிதர்களைப் பற்றி விழுங்கும் ராட்சஸ மரம். இதன் பிடியிலிருந்து சேனாதிபதியான என்னைக் காப்பாற்றினீர்கள். அதற்கு என் நன்றி. இதைக் கேட்டு எம் கூட்ட ராணியும் தங்களுக்குப் பரிசுளை அளிப்பார்,'' என்றான்.

அவன் இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும்போதே அங்குள்ள மரங்களின் இடையில் இருந்து பலத்த ஆரவாரம் ஏற்பட்டது. இரண்டு கொழுத்த செம்மறி ஆடுகள் இழுத்து வந்த தேரில் மயிலிறகுக் கிரீடம்



அணிந்து பெண் ஒருத்தி அமர்ந்திருந்தாள். அவள் பின்னால் அதே போன்ற செம்மறி ஆடுகள் மீதேறிப் பல ஆட்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

அப்போது தன்னை சேனாதிபதி எனக் கூறிக் கொண்ட குள்ளன் ஓடிப் போய் தேரில் இருந்த பெண்மணியை வணங்கி, ''அரசியாரே! இதோ நிற்கும் இரு மாவீரர்கள் என்னை ராட்சஸ மரத்தின் பிடியிலிருந்து காப்பாற்றினார்கள்,'' என்றான்.

குள்ளர் கூட்டத்தின் அரசியும், ''அப்படியா! வீரர்களே! நேற்று நீங்கள் என் கனவில் தோன்றினீர்களே! அப்போது என் எதிரிகளை ஒழிப்பதாகக் கூட வாக்கு அளித்தீர்கள்!'' என்றாள்.

அப்போது ஜெயசீலன் ''உங்களுக்கு எதிரிகளா? ஆச்சரியம் தான். உங்களுக்கு எங்களால் முடிந்த உதவிகளைச் செய்கிறோம்,'' என்றான்.

அப்போது அங்கிருந்த ஒரு குன்றின் மீதிருந்து பயங்கரச் சத்தம் கேட்டது. உடனே எல்லோரும் அது வந்த திசையில் பார்த்தார்கள்.

பனிரெண்டு அடி உயரமுள்ள ஒரு பயங்கர உருவம் குன்றின் உச்சி மீது நின்று கொண்டிருந்தது. அதன் கையில் ஒரு பெரிய பாறாங்கல் இருந்தது. அதன் இடுப்பில் கட்டியிருக்கும் இரும்புச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான்.

அந்த பயங்கர உருவத்தைக் கண்டதும் குள்ளர் கூட்ட அரசியும், மற்ற குள்ளர்களும் நடுநடுங்கிப் போனார்கள். அந்த பயங்கர உருவத்தைப் பிடித்துக் கொண்டிருந்த மனிதன் தன் வாளால் அதன் தலை

யில் ஒரு தட்டு தட்டினான். அந்த பயங்கர உருவம் பாறாங்கல்லைத் தூக்கிக் கொண்டு அப்படியும் இப் படியுமாக அசைந்தது.

அதைக் கண்ட ஜெயசீலன், ''சித்தா! அந்தப் பயங்கர உருவம் அந்த மனிதன் சொல்கிறபடி எல் லாம் செய்வதைப் பார்! அரசி கூறிய எதிரிகள் இவர்கள் தானா?'' எனக் கூறினான்.

அப்போது தேரிலிருந்து குள்ளர் கூட்ட அரசி இறங்கி வந்து, ''வீரர் களே! என் எதிரிகள் எம் சாதியைச் சேர்ந்த மற்றொரு பிறவினரே. அவர்களுக்கும் எங்களுக்கும் இன் றல்ல, நேற்றல்ல, நீண்ட காலமாகப் பகைமை இருந்து வருகிறது. அவர் களைவிடப் பிறப்பில் எங்கள் சாதி யினர் மட்டமானவர்களாம். அவர்கள் தம்மை உயர்குடிப் பிறப்பினர் எனக் கூறிக்கொண்டு எங்களை ஒழிக்கப் பார்க்கிறார்கள். இதுவரை என்னென் னவோ செய்து பார்த்தார்கள். அவர் களால் எங்கள் சாதியினரை அழிக்க முடியவில்லை. இப்போது ஒரு விசித்திர முறையில் எங்களை அழிக்கப் பார்க்கிறார்கள்,'' என்றாள்.

ஜெயசீலனும், ''அந்த பயங்கர உருவம் ஒரு மனிதக் குரங்கு போலத் தென்படுகிறதே!'' என்று கூற, அரசி யும், ''ஆம். அது மனிதக் குரங்கு தான். அதன் பின்னால் இருக்கும் மனிதன் சொல்கிறபடி எல்லாம் அது செய்கிறது. அதைப் பயன்படுத்தித் தான் எங்களைத் தாக்கிக் கொண்டிருக் கிறார்கள். எம் எதிரிகள் இப்படிப் பட்ட தாக்குதலைக் கடந்த மூன்று நாட்களாகச் செய்து வருகிறார்கள். இப்போது நீங்களே நேரில் பாருங் கள், தாக்குதல் எப்படி நடக்கிறது என்று. அந்த மனிதன் பாறாங்கல்லை எம் மீது எறியும்படி அந்த மனிதக் குரங்கிடம் கூறுகிறான். அதுவும் அவ்வாறே செய்கிறது!'' என்றாள்.

இப்படி அவள் கூறிக் கொண் டிருக்கும்போதே மனிதக் குரங்கு குள்ளர் கூட்ட அரசியும் மற்ற குள் ளர்களும் நின்ற இடத்தை நோக்கிப் பாறாங்கல்லை எறிந்தது.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

## 8

(நீர்வீழ்ச்சியிலிருந்து வெளியே வந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் ஒரு குள்ளனை பயங்கர மரம் விழுங்குவதிலிருந்து காப்பாற்றினார்கள். அப்போது காட்டுக் கடா பூட்டப்பட்ட தேரில் குள்ளர்களின் ராணி வந்ததை அவர்கள் கண்டார்கள். அவள் தன் கூட்டத்தவரைப் பற்றி அவர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கையில் ஒரு பயங்கர மிருகம் ஒரு பாறாங்கல்லை எடுத்து அவர்களை நோக்கி எறிந்தது. அப்போது -)

ஜெயசீலனும் சித்தசாதகனும் அந்த பயங்கர உருவத்தைப் பார்த்த போது அதனருகே ஒரு மனிதன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அப்போது அந்த பயங்கர உருவம் எறிந்த பாறாங்கல் அவர்களருகே விழுந்தது. ஜெயசீலன் அந்தப் பயங்கர உருவத்தை சங்கிலியால் கட்டிப் பிடித்து நின்ற அந்த மனிதனை உற்றுப் பார்த்தான்.

காட்டுக்கடாத் தேரில் அமர்ந்திருந்த குள்ளர்களின் ராணி பயந்து போனாள். அவளது ஆட்களும் நடு நடுங்கினார்கள். குள்ளர்களின் ராணி ஜெயசீலனிடம், ''மாவீரரே! அந்த மனிதக் குரங்கும் அதனை ஆட்டி வைக்கும் மனிதனும் கடந்த பத்து நாட்களாக எங்களை மிகவும் பய முறுத்தி வருகிறார்கள். எங்கள் குள்ளர் இனத்தில் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதப்படும் பிரிவினர் இவர்களது உதவியால் எங்களைத்



''அந்த மனிதக் குரங்கை அடித்து வீழ்த்த எனக்கு ஒரு வில்லும் அம்பு களும் வேண்டும். அவற்றை வர வழைத்துக் கொடு!'' என்றான்.

ஜெயசீலன் இதைக் கூறியதும் அந்த ராணியின் சேனாதிபதி பயந்து போய் ராணியிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் பிறகு யோசனை செய்து பேசாமல் இருந்து விட்டான்.

அதைக் கவனித்த சித்தசாதகன், ''என்ன சூரப்புலியே! என்னவோ சொல்ல வந்தாயே! அதைச் சொல்லித் தொலை. இப்படி மென்று விழுங்கிக் கொண்டிருந்தால் எப்படித்தான் வீரர் களுக்குத் தலைமை தாங்கிப் போரை நடத்தப் போகிறாயோ?'' என்று கேட்டான்.

தாக்கி வருகிறார்கள்,'' என்றாள்.

அப்போது ஜெயசீலனும், ''கவலைப்படாதே! நானும் இந்த சித்த சாதகனும் உறுதுணையாக இருக் கிறோம். உங்கள் கூட்டம் கடாக் கூட்டம் என அறிகிறோம். உங்கள் எதிரிகளின் கூட்டத்தின் பெயர் என்ன?'' என்று கேட்டான்.

அவளும், ''அதற்கு மொடாக் கூட்டம் என்று பெயர்'' என்னும் போதே சித்த சாதகன், ''அதோ அந்த மனிதக் குரங்கு மறுபடியும் கல்லை எறியப் பார்க்கிறது,'' என்றான். அதற்கு ஜெயசீலன், ''இதற்கெல் லாம் நாம் பயந்தா போய்விடுவோம்? கல்லடி படாமல் நாம் தப்ப முடியும் என்பது அதற்குத் தெரியாது தான். ஏனெனில் அதற்கு மூளை என்பது கிடையாதே!'' என்றான்.

பிறகு குள்ளர்களின் ராணியிடம்,

அப்போது சேனாதிபதி சித்த சாதகனுக்கு நேரடியாக பதில் சொல் லாமல் ராணியைப் பார்த்து, ''மகா ராணி! நாம் வில், அம்புகளைத் தொடு வது இல்லை என்ற கட்டுப்பாட்டு டன் இருக்கிறோம். அவற்றை நாம் பயன்படுத்துவதில்லை என்றாலும், எப்போதாவது உதவும் என்று எண்ணி ஒரு வில்லையும் சில அம்புகளையும் எடுத்து வைத்திருக்கிறேன். அவற் றைக் கொண்டு வந்து கொடுக் கட்டுமா?'' என்று கேட்டான்.

ராணி தன் சேனாதிபதியைச் சுட் டெரித்துவிடுபவள் போலப் பார்த் தாள். அப்போது ஜெயசீலன் குறுக் கிட்டு, ''ராணியே! அந்த வில்லையும் அம்புகளையும் கொண்டு வரச் சொல். அதைக் கொண்டு முதலில்

அந்த மனிதக் குரங்கைக் கொன்று விட்டு, பிறகு அதனை ஆட்டி வைக்கும் மனிதனை அடித்து விரட்டு கிறேன்,'' என்றான். ராணியும் தன் சேனாதிபதியைப் பார்த்துத் தலையை ஆட்டவே, அவனும் அங்கிருந்து சென்றான்.

இச்சமயத்தில் கல்லைத் தூக்கிக் கொண்டு நின்ற மனிதக் குரங்கை அதனைச் சங்கிலியால் பிடித்துக் கொண்டிருந்த மனிதன் தன் கத்தியால் லேசாகக் குத்தினான். அதனால் கோபத்தோடு அந்த வானரம் அம்மனிதன் மீதே கல்லைப் போடக் கைகளைத் தூக்கியது. அம்மனிதன் தன் கத்தியை அக்குரங்கின் கழுத்தின் மீது வைத்துக் கோபமாக உறுமினான்.

அப்போது ஜெயசீலன், ''ஆ! அந்த மனிதன் யாரென்று தெரிந்துவிட்டது. அவன் என் ஊர்க்காரன். அவன் என் எதிரி. அவனால் தான் நான் ஊர்ஊராக இப்படி அலைந்து கொண்டிருக் கிறேன். அவன் எமது மன்னர் ருத்திர சேனரிடம் குதிரைப் படைத் தலை வனாக இருந்தவன். அவனது பெயர் கிருபாணஜித்தன்,'' என்றான்.

இதே நேரத்தில் வில்லையும் அம்புகளையும் எடுத்துவரச் சென்ற கடாக்குள்ள சேனாதிபதி அவற்றோடு திரும்பி வந்தான். ஜெயசீலன் அவ னிடமிருந்து அவற்றை வாங்கிக் கொண்டான்.

சேனாதிபதியும், ''ஐயா ! நீங்கள் அம்பை எய்து அந்த மனிதக் குரங் கையும் அதனருகே நிற்கும் மனி தனையும் கொன்றுவிடுங்கள். அவர்




கள் அம்புகளால் அடிபட்டு விழுந் தால் எம் எதிரிகள் பயந்து ஓடி விடுவார்கள். அப்போது நாங்கள் அவர்களைப் பின்தொடர்ந்து துரத்தி வெகுதூரத்திற்கு விரட்டிவிடு கிறோம்,'' என்றான். சித்தசாதகனும் ''ஜெயசீலா! இந்த சேனாதிபதி கூறு வது போல மனிதக் குரங்கையும் அந்த மனிதனையும் அம்புகளால் அடித்து வீழ்த்து!'' எனக் கூறியவாறே தன் ஈட்டியையும் ஆட்டினான்.

ஜெயசீலனும் ஓர் அம்பை எடுத்து மனிதக் குரங்கிற்குக் குறி வைத்து எய்தான். அந்த அம்பு 'விர்'ரெனப் பாய்ந்து அக்குரங்கின் இடுப்பில் குத்தியது. அது பயங்கரமாகக் கத்தி நிலைதடுமாறி சற்று தூரத்தில் நின்ற குள்ளன் ஒருவனை அலாக்காகத் தூக்கி எறிந்தது. அப்போது கடாக் குள்ளர் சேனாதிபதி எல்லோரையும்



கொஞ்சம் மெதுவாகவே போகச் சொல்! ஏனென்றால் அந்த மனிதக் குரங்கு பாறாங்கல்லை எடுத்து எறிந் தாலும் எறியும்,'' என்றான்.

சேனாதிபதியும் ''நீங்கள் மனிதக் குரங்கையும் அதைப் பிடித்திருக்கும் மனிதனையும் அடக்குங்கள். நாங்கள் எங்கள் எதிரிகளான மொடாக் குள் ளர்களைப் பார்த்துக் கொள்கிறோம்!'' என்றான்.

சித்தசாதகனோ, ''ஓ! நீ சூரப்புலி தான். சொன்னதைச் செய்து காட்டு!'' என்று கூறிச் சிரித்தான். அப்போது மனிதக் குரங்கு ஒரு பெரிய கல்லைத் தூக்கிக் கொண்டு எறியத் தயாராகவே, சித்தசாதகன் ''இந்த வானரத்திற்குக் கல்லைத் தூக்கி எறிவது ஒன்றுதான் தெரியும் போலிருக்கிறது. இதை நான் கவனிக்கிறேன்,'' என்று கூறி ஈட் டியை எடுத்துக் கொண்டு அதனைத் தாக்கச் சென்றான்.

எச்சரித்தான். அவனது வீரர்கள் உடனே மனிதக் குரங்கைத் தாக்க ஓடினார்கள். குள்ளர் சேனாதிபதியும் அவர்களோடு சேர்ந்து விரைந்து சென்றான்.

கடாக் குள்ள வீரர்கள் தம்மைத் தாக்க வருவது கண்டு மொடாக் குள்ள வீரர்களை கிருபாணஜித்தன் எதிர்த் துப் போரிடும்படித் தூண்டினான். அப்போது ஜெயசீலன் சித்தசாதக னிடம், ''நாம் இந்த ராணிக்கு இப் போது உதவி கிருபாணஜித்தனை ஒழிக்க வேண்டும்,'' என்றான்.

சித்தசாதகனும், ''அப்படியே செய்வோம்!'' எனக் கூறவே, அவர் கள் இருவரும் கிருபாணஜித்தன் நின்ற மேட்டை நோக்கி விரைந்து சென்றார்கள். அவர்கள் கடாக் குள்ளர் சேனாதிபதியை அணுகியதும் அவனி டம், ''சேனாதிபதி! உன் ஆட்களை

அதைக் கண்ட ஜெயசீலன், 'இவன் போய் ஏடாகூடமாக எதை யாவது செய்து மாட்டிக் கொள்ளப் போகிறான். இவனைத் தடுத்து நிறுத்துகிறேன்' என்று எண்ணி, ''சாதகா, நீ போகாதே! நான் ஓர் அம்பை எய்து அதை அடித்து வீழ்த்து கிறேன்,'' என்றான்.

அவன் வில்லில் வைத்துவிட்ட அம்பு வானரத்தின் மீது படாமல் கிருபாணஜித்தன் அதனைக் கட்டிப் பிடித்துக் கொண்டிருந்த இரும்புச் சங்கிலி மீது பலமாகப் பட்டது. அதைக் கண்டு கிருபாணஜித்தன் திடுக் கிட்டுத் தலைநிமிர்த்திப் பார்த்தான்.

அம்பை எய்தவன் தன் பரம எதிரி யான ஜெயசீலன் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது.

ஜெயசீலன் அங்கு வருவான் என்று கிருபாணஜித்தன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அதனால் மொடாக் குள்ளப் படைத் தலைவனிடம், ''இப்போது நாம் எதிரிகளை எதிர்க்க வேண்டாம். பேசாமல் பின்வாங்கிப் போய்விடுவதே நல்லது!'' என்றான். மனிதக் குரங்கையும் உடனேயே அங்கிருந்து போகச் சொன்னான்.

அப்போது படைத் தலைவன் ஜெயசீலனையும் சித்தசாதகனை யும் பார்த்துவிட்டு, ''இவர்களைப் பார்த்தா இப்படி ஒரு முடிவு? நீங்களும் இந்த மனிதக் குரங்கும் அங்கு போய் அவர்களை ஒரே அடியில் வீழ்த்தி விடலாமே! அந்த ராணியின் படையை நொடியில் நாங்கள் விரட்டிவிடுவோமே! இப்படி இருக்க நீங்கள் எங்களைப் பின்வாங்கிப் போகச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட கிருபாணஜித்தன் அவனை எரித்துவிடுபவன் போலப் பார்த்தான். பிறகு மனிதக் குரங்கை இழுத்தவாறே, ''இதோ பார்! நான் உன் மாதிரி மரமண்டை இல்லை. எல்லாம் யோசித்து ஒருகாரணத்திற்காகத் தான் சொல்கிறேன். அவர்களைத் தாக்கிக் கொல்வதற்கு வேறு வழி இருக்கிறது. அதனால் இப்போது எதுவும் பேசாதே! உடனே கிளம்பு!'' என்றான்.



அதுகேட்டு அப்படைத்தலைவன் தன் ஆட்களுக்குப் பின்வாங்கி ஓடும்படிக் கட்டளை இடவே, அவர்களும் ஓடினார்கள். கிருபாணஜித்தனும் மனிதக் குரங்குடன் தலைதெறிக்க ஓடினான்.

எதிரிகள் ஓடுவதைக் கண்ட ஜெயசீலனும் சித்தசாதகனும் கடாக் குள்ளர் சேனாதிபதியிடம், ''இதுதான் சரியான தருணம். எதிரிகளைத் தாக்கி எவ்வளவு பேர்களைக் கொல்ல முடியுமோ அவ்வளவு பேர்களைக் கொன்றுவிடு!'' என்றார்கள். சேனாதிபதியும் தன் வீரர்களிடம், ''வீரர்களே! எதிரிகளை அடித்து வீழ்த்துங்கள். உம், ஓடுங்கள்!'' என்று முடுக்கி விட்டான்.

அவர்களும் மொடாக் குள்ளர்களையும், கிருபாணஜித்தனையும், மனிதக் குரங்கையும் துரத்திக்



கொண்டு ஓடினார்கள். அவர்கள் பல குள்ளர்களை அடித்து வீழ்த்தியவாறே முன்னேறினார்கள்.

மொடாக் குள்ளர்களில் பலர் விழுந்ததைக் கண்ட சித்தசாதகன் உற்சாகத்துடன் உரத்த குரலில், ''உம்! பேஷ்! அப்படித்தான் அடி! குத்து! உதை!'' என்று உற்சாகத்துடன் கத்தினான். பிறகு அவன் ஜெயசீலனிடம், ''நாமும் போய் அந்த கிருபாணஜித்தனையும் மனிதக் குரங்கையும் தீர்த்துக் கட்டிவிடலாம்,'' என்றான்.

ஜெயசீலன் சித்தசாதகனிடம் ''நாம் அவசரப்படக் கூடாது. நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்,'' என்று கூறிக் கொண்டிருக்கும்போது கடாக் குள்ளர்களின் சேனாதிபதி வந்து ''நாங்கள் எங்கள் எதிரிகள்ள விரட்டிவிட்டோம். பலரைக் கொன்றும் வீழ்த்திவிட்டோம். இனிமேல் என்ன செய்ய வேண்டும் என்று கூறுங்கள்!'' என்று யோசனை கேட்டான்.

ஜெயசீலனும், ''சரி. இனி உங்கள் ஆட்களை அழைத்துக் கொண்டு உங்கள் இருப்பிடத்திற்குச் செல்லுங்கள். நாங்களும் அங்கே வந்துவிடுகிறோம். அதன் பிறகு நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி யோசிப்போம்,'' என்றான். சேனாதிபதியும் தன் ஆட்களில் ஒருவனைக் கூப்பிட்டு, ''இவர்களுக்கு நம் இருப்பிடத்திற்கு வர வழியைக் காட்டு! நான் நம் ஆட்களோடு முன்னதாக அங்கு செல்கிறேன்,'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

அப்போது சித்தசாதகன், ''ஜெயசீலா! இப்போது நாம் இந்தக் குள்ளர்களின் இருப்பிடத்திற்குப் போகத்தான் வேண்டுமா? நாம் அவசியமில்லாமல் இந்த வம்பில் மாட்டிக் கொண்டு விட்டோமே!'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''சாதகா! நாம் இஷ்டப்பட்டா இங்கு வந்தோம்? அந்த முதலை மனிதன் மகரகேதுவைப் பிடிக்கும் முயற்சியில் தானே இங்கு வந்தோம்? இரண்யபுர அரசகுமாரியைத் தேடிக் கண்டுபிடித்து அவளை மீட்க வந்த நாம் இங்கு தள்ளப்பட்டுவிட்டோம். ஆயினும் அந்தக் கிருபாணஜித்தனை எமலோகத்திற்கு அனுப்பிவிட்டு நம் முயற்சியில் தொடர்ந்து ஈடுபடுவோம்,'' என்றான்.

சித்தசாதகனும், ''சரி, அதையே செய்வோம்! அவனோடு அந்த மனிதக் குரங்கையும் சேர்த்து அங்கே

அனுப்பி வைப்போம். சரி, நாம் கடாக் குள்ளர்களின் ராணி வசிக்கும் இடத்திற்குச் செல்வோம்!'' என்றான்.

இதே சமயம் மொடாக் குள்ளர் படைத் தலைவனுக்கும் கிருபாணஜித்தனுக்குமிடையே வாக்குவாதம் ஏற்பட்டது. படைத் தலைவன் கிருபாணஜித்தன் எடுத்த முடிவு சரி அல்ல என்று கூறவே, கிருபாணஜித்தன் ''இது போர்த் தந்திரம். இதைப் புரிந்து கொள்ள மூளை வேண்டும். இப்போது நம் எதிரி ஜெயசீலன். அவனை நாளைக்குள் கொன்றாக வேண்டும். இந்த மனிதக் குரங்கை என்ன செய்வது என்று கேட்கிறாயா? அதைச் சுதந்திரமாகத் திரியவிட்டு விடுகிறேன்,'' என்று கூறி, அதைப் பிணைத்திருந்த இரும்புச் சங்கிலியை அகற்றிவிட்டான்.

மொடாக்குள்ள தலைவன் கிருபாணஜித்தனிடம், ''நீ எடுத்த முடிவு சரியல்ல. இதனால் நம் படைக்குத் தான் சேதம் ஏற்பட்டிருக்கிறது. நாம் பின்வாங்கக் கூடாது. நின்று போராடி எதிரிகளைத் தாக்க வேண்டும். இதுதான் சரியான வழி,'' என்றான்.

கிருபாணஜித்தனோ, ''இதோ பார்! இப்போது என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியும். உன் யோசனை எதுவும் தேவை இல்லை. நான் சொன்னால் சொன்னதுதான். அதன்படி எல்லோரும் நடக்கவே வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் எதிரியின் கை தான் ஓங்கி விடும். நான் பயங்கர மனிதக் குரங்கை அவிழ்த்து விட்டுவிட்டேன். அதனால் எதிரிகள் கதி கலங்கி ஓடிவிடப் பார்ப்பார்கள். நம் மனிதக் குரங்கோ அவர்களை அடித்து ஓட ஓட விரட்டிவிடும். அப்போது நாமும் நம் பயங்கரத் தாக்குதலை நடத்தலாம். அதனால் மனிதக் குரங்கு என்ன செய்யப் போகிறது என்பதை நீயே பார்!'' என்றான். மனிதக் குரங்கு மொடாக் குள்ளர் படைத் தலைவனைப் பிடித்து உயரத் தூக்கியது. அதைக் கண்ட குள்ளர்கள் கூச்சல் போட்டவாறே கிருபாணஜித்தனையும் மனிதக் குரங்கையும் சூழ்ந்து கொண்டார்கள். *(தொடரும்)*





# மர்மக் குளம்

## 9

(ஜெயசீலன் எய்த அம்பு மனிதக் குரங்கின் மீது பட்டதும் அதை எய்தவன் யார் என்று கிருபாணஜித்தன் பார்த்தான். தன் பகைவனான ஜெயசீலன் தான் அவன் என்று கண்டு மொடாக் கூடடத்தவரோடு சேர்ந்து அவர்களது இருப்பிடத்திற்கு ஓடினான். மொடாப் படைத் தலைவன் அவனை இகழவே, கிருபாணஜித்தன் ஆத்திரம் கொண்டு மனிதக் குரங்கை ஏவி அவனைத் தாக்கச் சொன்னான். அதன் பிறகு -)

கிருபாணஜித்தனின் இந்தச் செயலைக் கண்டு மொடாக் கூட்டத்தினர் கோபம் கொண்டு அவனையும் மனிதக் குரங்கையும் தாக்கலானார்கள். இதைக் கண்ட கிருபாணஜித்தன் பயந்து நடுநடுங்கினான். பல பேர்களின் தாக்குதலை அவன் ஒருவனால் சமாளிக்க முடியாது தானே!

அதனால் அவன் சட்டெனத் தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு புன்சிரிப்புடன், ''அவசரப்படாதீர்கள்! நான் உங்கள் பகைவன் அல்ல, நண்பனே! இந்த மனிதக் குரங்கை எப்படிப் பழக்கி இருக்கிறேன் என்பதை உங்களுக்குக் காட்டவே இப்படிச் செய்தேன்,'' என்றான். மனிதக் குரஙகினிடமும் அ்வன் தாக்குதலை நிறுத்து எனவே, அதுவும் படைத் தலைவனை எதுவும் செய்யாமல் நின்றது.

மொடாக் கூட்டப் படைத் தலைவன் பெருமூச்சு விட்டவாறே ஒரு மேட்டின் மேல் உட்கார்ந்தான். அவனது ஆட்களும் அவனைச் சுற்றி



நின்றார்கள். அப்போது அவர்களின் படைத் தலைவன், ''எங்கிருந்தோ வந்த இவனை நம்பினேனே! அது என் முட்டாள்தனம்!'' என்று கூறித் தன் தலையில் அடித்துக் கொண்டான்.

பிறகு அவன் ''சரி, இனிமேலாவது நாம் எச்சரிக்கையுடன் நடப்போம். இனி நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதை அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனோடு நேருக்கு நேராக நின்று நாம் சண்டை போட முடியாது. அவனிடம் உள்ள நீண்ட வாளையும், அவனது மனிதக் குரங்கையும் அவனிடமிருந்து பிரித்து விட வேண்டும். இம்முயற்சியில் நம்மில் சிலர் இறந்தாலும் பரவாயில்லை. அவ்வாறு செய்தாலே நாம் அவனைக் கொல்ல முடியும்,'' என்றான்.

அப்போது ஒருவன், ''இவனைக் கொல்ல வழி என்ன?'' என்று கேட்கவே, படைத் தலைவனும், ''வழியா கிடைக்காமல் போய்விடும்? யோசிப்போம்!'' என்றான். இதற்குள் கிருபாணஜித்தன் மனிதக் குரங்கைப் பிடித்து இழுத்துக் கொண்டு அங்கே வந்து, ''இங்கே என்ன சதி ஆலோசனை நடக்கிறது? என்னையும் இதையும் கொல்லத் திடீரெனப் பாயத் திட்டம் தீட்டுகிறார்களா?'' என்று கேட்டான்.

மொடாக் கூட்டப் படைத் தலைவனோ, ''அப்படி எல்லாம் எதுவும் இல்லை. இப்போது எங்களுக்குச் சிக்கலான பிரச்சினை ஏற்பட்டுள்ளது. இனிமேலும் நாங்கள் இங்கு இருந்தால் ஆபத்து தான். அதனால் மாலை ஆவதற்குமுன் எங்கள் இருப்பிடத்தை அடைந்துவிட வேண்டும்,'' என்றான்.

இதைக் கேட்ட கிருபாணஜித்தன் பயந்துபோனான். காட்டில் தனியாகத் திரிந்து பட்ட கஷ்டங்கள் எல்லாம் அவனது நினைவிற்கு வந்தான். அதனால் அவன் மொடாக்கூட்டப் படைத் தலைவனிடம் தாழ்ந்த குரலில் ''படைத் தலைவா! சற்றும் பயப்படாதே! நான் உங்களைப் பாது காக்கிறேன். அதற்காக எனக்கு உன் உதவி தேவை. அதுவும் இன்றிரவு நடு ராத்திரியில் நீ செய்ய வேண்டும். அதற்குப் பிறகு உன் பகைவர்களை நானும் இந்த மனிதக் குரங்கும் பூண்டோடு அழித்துவிடுவோம். அப்போது இந்தப் பரந்த காட்டுப் பகுதியும், மலைகளும் உன் வசமாகி

விடும். நீதான் இதன் மன்னன். இது நடக்கும் என்று உனக்கு வாக்குறுதி அளிக்கிறேன்,'' என்றான்.

இதைக் கேட்ட மொடாக் கூட்டப் படைத் தலைவன் மிகவும் திருப்தி அடைந்தான். அப்போது கிருபாண ஜித்தன், ''சரி, நாம் இப்போது உன் இருப்பிடத்திற்குப் போவோம். அங்கு உணவு உண்டு சற்று இளைப் பாறுவோம்,'' என்றான். படைத் தலைவனும் ''உங்கள் கூடாரத்தில் உணவு தயாராக உள்ளது. நீங்கள் போய் உண்டு இளைப்பாறுங்கள். இன்று நள்ளிரவில் உங்களுக்கு உதவி புரியத் தயாராக இருக்கிறோம்,'' என்றான்.

கிருபாணஜித்தன் அங்கிருந்து சற்று தூரத்தில் அமைக்கப்பட்டிருந்த கூடாரத்திற்குச் செல்லலானான். போகுமுன் யாவரையும் பார்த்து, ''நள்ளிரவு வரை யாரும் என் கூடாரத்திற்கு வந்து என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது. அதுவரை நான் தியானத்தில் கண் மூடிக் கொண்டு இருப்பேன்,'' என்றான். படைத் தலைவனும், ''அப்படியே செய் யுங்கள்!'' என்றான். அதன்பின் அவன் நம்பிக்கைக்குப் பாத்திரமான நான்கு வீரர்களை தன்னுடன் அழைத்துக் கொண்டு தன் இருப்பிடத்திற்குச் சென்றான்.

இதற்குப் பின் மூன்று மணி நேரம் கழிந்தது. நன்கு உண்ட பின் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த கிருபாணஜித்தன் திடீரெனக் கண் விழித்து, ''என்ன இது! வேப்பெண்



ணெய் வாசனை வருகிறதே! யார் என்ன செய்கிறார்கள்?'' என்று உரத்த குரலில் அதட்டிக் கேட்டான்.

வெளியிலிருந்து ஒருவன், ''வேப் பெண்ணெய் மட்டும் அல்ல. அதனுடன் நல்லெண்ணெயும் கலக்கப் பட்டு உங்கள் கூடாரத்தைச் சுற்றித் தெளிக்கப்பட்டுள்ளது. இதனால் உங்கள் கூடாரத்திற்குள் கொசு, விஷக் கிருமி, புழு, பூச்சி எதுவுமே நுழையாது. நீங்கள் நன்கு தூங்கலாம்,'' என்றான் மிகவும் பணிவாக.

''ஓ! உன் படைத் தலைவன் இப் படிச் செய்யச் சொன்னானா? பேஷ், பேஷ்! ஒழுங்காகச் செய்து முடி!'' எனக் கூறிவிட்டு கிருபாணஜித்தன் மறுபடியும் கண்ணை மூடிக் கொண் டான். சற்று நேரத்தில் பலத்த குறட் டையும் கிளம்பியது. அப்போது மொடாக் கூட்டப் படைத் தலைவன்



ஒரு சில வீரர்களோடு அங்கு வந்தான். அவன் சைகை செய்யவே, ஒரு வீரன் சத்தப்படுத்தாமல் கிருபாணஜித்தனின் கூடாரத்திற்குள் சென்றான். அங்கு ஒரு மூலையில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த கிருபாணஜித்தனின் நீண்ட வாளை அவன் எடுத்துக் கொண்டு வெளியே வந்தான். அதன் பின் அந்த கூடாரத்தைச் சுற்றி நெருப்பு வைக்கப்பட்டது.

நெருப்பு 'குப்'பென்று பற்றிக் கொண்டது. எண்ணெய் கருகும் வாசனையால் கிருபாணஜித்தனின் தூக்கம் கலைந்தது. கண் விழித்துப் பார்த்த போது தன் இருப்பிடத்தைச் சுற்றி நெருப்பு பற்றிக் கொண்டு எரிவதைக் கண்ட அவன் உரத்த குரலில் ''ஆ! மோசம்! நம்பிக்கைத் துரோகம்! இதற்குப் பழிவாங்கியே தீருவேன்,'' என்று கத்தினான். பிறகு அவன் தன் வாளை எடுப்பதற்காக அதை வைத்த இடத்தைப் பார்த்தான். அது அங்கே இருக்கவில்லை.

இச்சமயத்தில் மனிதக் குரங்கு பயங்கரமாகக் கத்தியவாறே தன்னைக் கட்டியிருந்த சங்கிலியை அறுத்துக் கொண்டு தீயிலிருந்து தப்ப அங்கும் இங்கும் ஓடியது. அப்போது கிருபாணஜித்தன் தானும் அதனோடு தப்பிச் செல்ல அதன் இடுப்பில் தொங்கிய இரும்புச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டான். மனிதக் குரங்கு ஒரு குதி குதித்து கூடாரத்திற்கு வெளியே வந்து விழுந்தது. கிருபாணஜித்தனும் அதனோடு சேர்ந்து வெளியே விழுந்தபோதிலும் அவன் சங்கிலியை விட்டுவிட்டான்.

மனிதக் குரங்கு ஓடுவதைக் கண்ட படைத் தலைவன் தன் ஆட்களிடம், ''குரங்கைப் போகவிடுங்கள். கிருபாணஜித்தன் தப்பி ஓடிவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். ஈட்டிகளால் அவனைத் தாக்குங்கள்!'' என்றான்.

அங்கு நடந்து கொண்டிருந்தவற்றை எல்லாம் இரு விசித்திர மனிதர்கள் பார்த்தனர். அவர்கள் குதிரை போலத் தோன்றும் விசித்திர மிருகங்களின் மீது அமர்ந்திருந்தனர். அவர்கள் மீன் செதில்களாலான ஆடைகளை அணிந்திருந்தார்கள்.

ஒருவன் தன் இடைவாளை உருவியவாறே, ''அண்ணா சர்ப்பநகா! அங்கே பார்! ஒரே கூச்சல், குழப்பம்! என்ன நடக்கிறதோ தெரியவில்லையே!'' என்று கூற, அதற்கு அவன் ''தம்பி சர்ப்பஸ்வரா! இதோ பார்,

யார் எப்படிப் போனால் நமக்கு என்ன? நாம் வந்த வேலையைத் தான் கவனிக்க வேண்டும்,'' என்றான்.

சர்ப்பஸ்வரனோ, ''அது சரி, அண்ணா! ஆனால் கண்ணெதிரே நடந்து கொண்டிருப்தைப் பார்க்காமல் இருக்க முடியுமா? மனிதக் குரங்கு ஒன்று குள்ளர்களை அடித்து நொறுக்கிக் கொண்டு இருக்கிறது. அதற்குத் துணையாக ஒரு மனிதன் நின்று கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான். இந்தக் கொடூரச் செயல்களைக் கண்ட பிறகும் சும்மா இருக்க முடியுமா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன், ''நீ சொல்வது சரிதான். அந்த மனிதக் குரங்கையும் அதற்கு உதவும் அந்த அற்ப மனிதனையும் பிடித்து உதைக்க வேண்டும். ஒருவேளை அந்த மனிதனிடமிருந்து, நாம் தப்பி ஓடிய நம் ஆளைப் பற்றிய சமாச்சாரம் எதையாவது தெரிந்து கொள்ள முடியும்,'' எனக் கூறி ஒரு நீண்ட கயிற்றைக் கையில் எடுத்துக் கொண்டான். இருவரும், மனிதக் குரங்கும் கிருபாணஜித்தனும் இருந்த இடத்தை அடைந்தார்கள்.

மனிதக் குரங்கு அங்குள்ள குடிசைகளை அழித்துக் குள்ளர்களைத் தூக்கி எறிந்து கொண்டிருந்தது. கிருபாணஜித்தன் ஒரு மரக்கிளையை ஒடித்து எடுத்துக் கொண்டு குள்ளர்களை அடித்து விரட்டிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது சர்ப்பஸ்வரன், ''அண்ணா! நான் மனிதக் குரங்கைப் பிடிக்கிறேன். நீ அந்த மனிதனைப் பிடித்துக் கட்டிப் போடு!'' எனக் கூறிவிட்டுத் தன் குதிரையை மனிதக் குரங்கு இருக்கும் இடத்தை நோக்கிச் செலுத்தினான். தன் கையிலிருந்த கயிற்றில் சுருக்கு முடி போட்டு சர்ப்பநகன் கிருபாணஜித்தன் மீது வீசி அவன் கழுத்தில் விழச் செய்து





கயிறை இழுக்கலானான். கழுத்தில் விழுந்த சுருக்குக் கயிறு இறுகவே, கிருபாணஜித்தன் திக்குமுக்காடிப் போய் அலறினான்.

கிருபாணஜித்தன், ''ஐயோ! என்னைக் கொல்லாதே! நானும் உன்னைப் போல ஒரு மனிதன் தான். ஓர் அதிசய யானை மீது ஏறி வந்த உங்களைப் போன்ற ஒருவனுக்கு நான் பலவிதத்தில் உதவி இருக்கிறேன்,'' என்றான். அதைக் கேட்டு சர்ப்பநகன் ஆச்சரியப்பட்டு, ''ஓ! நீ அந்த மகர கேதுவை அறிவாயா? அவன் உன் உதவியைப் பெற்றானா? அப்படியானால் அவனுக்கு ஏதோ சிக்கலான பிரச்சினை இருக்க வேண்டும். இப்போது அவன் எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டான்.

கிருபாணஜித்தனும் இரு கைகளையும் கூப்பி, ''முதலில் என் கழுத்தில் மாட்டிய கயிறை அவிழ்த்துவிடுங்கள்! அப்போது தான் என்னால் சரியாகப் பேச முடியும்,'' என்றான். சர்ப்பநகனும், ''கொஞ்சம் தளர்த்திவிடுகிறேன். ஆனால் நீ மட்டும் தப்பி ஓட முயன்றால் மறுவிநாடியே கயிறை இழுத்து கழுத்தை இறுக்கி உன்னைச் சாகடித்துவிடுவேன்!'' என்றான். கிருபாணஜித்தனும், ''அப்படி எல்லாம் செய்ய மாட்டேன்,'' எனவே சர்ப்பநகனும் பிடியைத் தளர்த்தினான்.

கிருபாணஜித்தனும், ''ஐயா! மகர கேது எங்கே இருக்கிறான் என்பது எனக்குத் தெரியாது. சில நாட்களுக்கு முன் அமராவதி நகரைச் சேர்ந்த ஜெயசீலன் என்பவனும் அவனது நண்பனான மந்திரவாதி ஒருவனும் மகரகேதுவைப் பலவிதத்திலும் துன்புறுத்தினார்கள். இதைக் காட்டுவாசிகள் கூறக் கேட்டேன்,'' என்றான். அப்போது மொடாக் கூட்டத்தின் படைத் தலைவன், ''ஐயா! நீங்கள் இங்கே பேசிக் கொண்டிருக்கிறீர்களே! உங்களது நண்பரின் நிலை என்ன என்று பார்க்கவில்லையே!'' என்றான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன் சுற்றிலும் பார்த்துவிட்டு, ''எங்கே என் தம்பி? அவனுக்கு என்ன ஆயிற்று?'' என்று கேட்டான். படைத் தலைவனும் ''அவனும் மனிதக் குரங்கும் அடித்து சண்டை போட்டுக் கொண்டு அந்தத் தோப்பிற்குள் போயிருக்கிறார்கள். அவன் ஏறிவந்த விசித்திர குதிரையும் எங்கோ ஓடிவிட்டது. அந்த

மனிதக் குரங்கைப் பழக்கியவன் இந்த கிருபாணஜித்தனே. அவன் தான் உன் அண்ணனை அடிக்கச் சொல்லி அந்த மனிதக் குரங்கைத் தூண்டிவிட்டிருக்கிறான்,'' என்றான்.

சர்ப்பநகனும், ''ஓ! இவன் இப் படிப்பட்ட மோசக்காரனா?'' என்று கூறி, கிருபாணஜித்தனின் கழுத்தை இறுக்கி, தான் பிடித்திருந்த கயிறை படைத் தலைவனிடம் கொடுத்து ''இவன் ஓடிப் போய்விடாமல் பார்த் துக் கொள்! நான் அந்த மனிதக் குரங் கைக் கொன்றுவிட்டு என் அண்ண னோடு வருகிறேன்,'' என்று கூறி விட்டு விரைந்து சென்றான்.



குள்ளர்கள் வாழும் பகுதியில் நெருப்பு மூண்டதையும், கிருபாண ஜித்தனுடனும் மனிதக் குரங்குடனும் குள்ளர்கள் போராடியதையும், அவர் களின் கூச்சலையும் தூரத்திலிருந்து ஜெயசீலனும் சித்தசாதகனும் பார்த் தார்கள். இதற்கென்ன காரணம் என்று அவர்கள் யோசித்தார்கள். எனவே அவர்கள் கடாக் கூட்டப் படைத் தலைவனை அனுப்பி என்ன விஷயம் என்று அறிந்துவரச் சொன்னார்கள்.

அவனும் இரு வீரர்களைத் தன் னோடு அழைத்துக் கொண்டு சென் றான். மொடாக் கூட்டத்தவர் வசிக் கும் பகுதியைச் சற்றுத் தொலைவில் நின்று பார்த்தான். அங்கு நடந்ததைக் கண்டு அவன் ஒரேயடியாக மகிழ்ந்து போனான். அப்போது சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும் தம் விசித்திரக் குதி ரைகளின் மீது அமர்ந்து அக்கூட்டத் தினரின் இருப்பிடத்திற்கு வந்ததை யும் கண்டு கடாக் கூட்டப் படைத் தலைவன் மிகவும் ஆச்சரியப்பட் டான். அவன் அங்கிருந்து உடனே வேகவேகமாகத் திரும்பிப் போய் ஜெயசீலனிடம் தான் கண்டதை எல் லாம் விவரமாகக் கூறினான்.

அதைக் கேட்டதுமே சித்தசாதகன் தன் ஈட்டியை எடுத்துச் சுழற்றிய வாறே, ''அந்த இருவரும் மகரகேது வின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என் பதில் சந்தேகமே இல்லை. இவர் களைப் பிடித்து மகரகேதுவை அடைந்து நம் அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கண்டுபிடித்து விடலாம். வேலை மிக எளிதில் முடிகிறதே!'' என்று மகிழ்ச்சி பொங் கக் கூவினான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் சிரித்த வாறே, ''இதோ பார்! யாரோ இரண்டு பேர்கள் கிடைக்கப் போகிறார்கள்

என்பதைக் கூறி அரசகுமாரனும் அரச குமாரியும் கிடைத்துவிட்டார்கள் என எண்ணி மகிழ்கிறாயே! அந்த இரு வரும் இந்தப் பகுதிக்கு ஏன் வந் தார்கள் என்பதை முதலில் அறிய வேண்டும். அதன் பிறகு அவர்களை எப்படிப் பிடிப்பது என்றும் யோசிக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் தன் ஈட்டியைத் தாழ்த்தியவனாய், ''என் உற்சாகமே போய்விட்டதே. இப் போது என் ஈட்டிக்கு வேலையே இல்லையா?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் ''கவலைப்படாதே! நீ உன் ஈட்டியையும் மந்திர சக்தி யையும் பயன்படுத்த எப்போது வேளை வரும் என்பதைச் சொல் கிறேன். அப்போது அவற்றைப் பயன் படுத்து!'' என்றான். பிறகு அவன் கடாக் கூட்டப் படைத் தலைவனி டம் ''நீ சில வீரர்களோடு எங்களு டன் வர வேண்டும்,'' என்றான்.

அந்தப் படைத் தலைவனும் சமிக்ஞை செய்யவே, உடனே சில வீரர்கள் வந்தார்கள். ஜெயசீலன் சித்த சாதகனையும் படைத் தலைவனை யும் வீரர்களையும் கூட்டிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவர்கள் கொஞ்ச தூரம் போனதும் மனிதக் குரங்கு பயங்கரமாகக் கத்து வது அவர்களுக்குக் கேட்டது. அவர் கள் எல்லோரும் அந்த சத்தம் வந்த இடத்தைப் பார்த்தார்கள். மனிதக் குரங்கு விநோத ஆடைகள் அணிந்த ஒருவனைத் தூக்கிக் கொண்டு அங் கும் இங்கும் ஓடிக் கொண்டிருந்தது. சித்தசாதகன், ''நாம் பிடிக்க நினைத்த இருவரில் ஒருவன் இங்கு இருக்கி றான். மற்றவன் என்ன ஆனானோ?'' என்று ஜெயசீலனிடம் கேட்டான்.

அப்போது அங்கு வந்த சர்ப்ப நகன், ''சர்ப்பஸ்வரா! நீ எங்கிருக்கி றாய்?'' என்று உரத்த குரலில் கேட் டான். அப்போது ஜெயசீலன் மற்றவர் களிடம், ''சட்டென மறைந்து கொள் ளுங்கள். யாரும் இவன் கண்ணில் பட்டுவிடக் கூடாது. எப்பாடுபட்டா வது நாம் இவனைப் பிடித்துவிட வேண்டும்,'' என்று கூறினான்.

*(தொடரும்)*






# மர்மக் குளம்

## 10

(அண்ணன் தம்பிகளான சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும் தம் விசித்திரக் குதிரைகளில் சவாரி செய்து குள்ளர்களின் குடியிருப்பிற்கு சென்றார்கள். அங்கு சர்ப்பநகன் கிருபாணஜித்தனின் கழுத்தில் சுருக்குக் கயிறைப் போட்டு இழுத்தான். மனிதக் குரங்கு சர்ப்பஸ்வரனைத் தாக்கி அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடியது. இவ்விஷயத்தைக் கேள்விப்பட்ட ஜெயசீலனும் சித்தசாதகனும் குள்ளர்களின் குடியிருப்பை நோக்கிச் சென்றனர். அப்போது தம் எதிரே சர்ப்பநகன் தன் குதிரை மீது அமர்ந்து வருவதைக் கண்டார்கள். பிறகு -)

சர்ப்பநகன் தன் குதிரையை ஒரு மரத்தின் கீழ் நிறுத்தி, ''சர்ப்பஸ்வரா!'' என்று இரண்டு மூன்று முறை உரக்கக் கூவினான்.

அந்த அழைப்பிற்கு பதில் வராது போகவே, அவன் தன் இடைவாளை உருவி தன் எதிரிலிருந்த மரத்தைக் கோபத்தோடு குத்தி ''அந்த மனிதக் குரங்கு மட்டும் என் தம்பியைக் கொன்றிருந்தால், நான் அதையும் அதை ஆட்டி வைப்பவனையும் துண்டம்துண்டமாக வெட்டி எறிவேன். இது சத்தியம்,'' என்று ஆவேசத்துடன் கூறினான்.

புதரில் மறைந்திருந்த ஜெயசீலன் அதைக் கேட்டுத் தனக்குள் சிரித்துக் கொண்டான். அவன் சித்தசாதகனிடம் ''கேட்டாயா அந்தப் பயல் செய்த சத்தியத்தை!'' என்று வினவ, சாதகனும் ''அவன் தன் தம்பியைக்



காணவில்லையே என்ற ஆத்திரத்தில் ஏதோ உளறுகிறான். ஆனால் நாம் இவனை எப்படிப் பிடிக்கப் போகிறோம்?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் சற்று யோசித்து விட்டு ''சாதகா! உன் தோற்றமும் பேச்சும் ஒரு சர்வ சாதாரண மனிதனது போல இல்லை. எனவே நீ எவ் விதத்திலாவது அவனை அணுகி அவனது வாளை வாங்கிவிட வேண்டும். அதன் பிறகு அவனை நான் பிடித்து மாயக் குளத்தைப் போய் அடையும் வழியை அவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்,'' என்றான்.

சித்தசாதகனும் உடனே சர்ப்ப நகனை நோக்கிச் சென்றான். ஜெய சீலன் குள்ளர் படைத் தலைவனிடம், ''படைத் தலைவா! இந்த விசித்திர மனிதனின் சக்தி எப்படிப்பட்டது என்று நமக்குத் தெரியாது. நீ சித்த சாதகனுக்கு உதவுவதற்காக ஏதாவது ஒரு புதரில் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும்,'' என்றான். அப்படைத் தலைவனும் அவ்வாறே செய்வதாகக் கூறித் தன் வாகனத்தை ஓரிடத்தில் கட்டிவிட்டு சித்தசாதகன் சென்ற திக்கில் சென்றான்.

சித்தசாதகன் தன் ஈட்டியைக் கையில் வைத்துக் கொண்டு சர்ப்ப நகனை அணுகினான். அவனைக் கண்டு கோபத்தோடு ''யாரடா நீ என் பகுதிக்குள் நுழைந்து ஏதேதோ பிதற்றுகிறாய்? உன் கூச்சல் என் தூக் கத்தைக் கெடுத்து கோபத்தைக் கிளறி விட்டுவிட்டது,'' என்று கேட்டான். அதைக் கேட்ட சர்ப்பநகன் சற்றும் பயப்படாமல் தன் வாளை எடுத்து சித்தசாதகனுக்கு நேராக நீட்டினான்.

சித்தசாதகன் அவனை உற்றுப் பார்த்து, ''அடே! உன்னைப் பார்த் தால் மர்மக் குளத்து ஆள் போலத் தெரிகிறதே!'' என்றான். அதைக் கேட்டு சர்ப்பநகன் திகைத்து 'அடே யப்பா! என்னைப் பார்த்ததுமே நான் இன்ன இடத்தைச் சேர்ந்தவன் என்று கூறிவிட்டானே! இவன் ஒரு மந்திர வாதியாக இருக்க வேண்டும்' என்று எண்ணி பயந்து நடுங்கினான்.

அப்போது சித்தசாதகன் அதட்டும் குரலில் ''அடே! மர்மக்குள மகேஸ் வரதாசன் என்று கர்வம் கொண்டா என்னைப் பார்த்தும் குதிரை மீது உட்கார்ந்திருக்கிறாய்? முதலில் குதி ரையிலிருந்து கீழே இறங்குடா!'' என்று உரக்கக் கூவினான்.

சர்ப்பநகன் பயந்தவாறே தன்

விசித்திர குதிரை மீதிருந்து கீழே குதித்தான். உடனே சித்தசாதகன் ''நீ வாளை உருவிக் கொண்டு வீர சபதம் புரிந்தாயே! எங்கே அந்த வாளைக் கொடு,'' என மிரட்டினான்.

சர்ப்பநகனுக்கு ஏதோ சந்தேகம் ஏற்படவே, சாதகனைப் பார்த்து ''ஏதோ மர்மக்குளம் மகேஸ்வரர் என்றெல்லாம் சொன்னாயே! அது பற்றி உனக்கு என்ன தெரியும்?'' என்று தயங்கியவாறே கேட்டான். அதைக் கேட்ட சித்தசாதகன் பலமாகச் சிரித்து ''அடே சர்ப்பநகா! உன் நண்பனான மகரகேதுவைக் கூட எனக்குத் தெரியும். உன் வாள் உன் கையில் இருப்பதால் உனக்கே தான் ஆபத்து,'' என்றான்.

அப்போது சர்ப்பநகன் பற்களை 'நறநற'வென்று கடித்தவாறே ''ஓ! இப்போது நீ யாரென்பது எனக்குத் தெரிந்துவிட்டது. மனிதக் குரங்கை ஆட்டி வைக்கும் அந்த கிருபாண ஜித்தன் உன்னையும் உன் நண்பனையும் பார்த்திருக்கிறான். நீ காளியை வழிபடுபவன் தானே?'' என்று கேட்டான்.

சித்தசாதகன் ஈட்டியை நிலத்தில் குத்தி ''ஏய்! நான் சாதாரண காளியை வழிபடுபவன் அல்ல. காபாலிகன் என்ற சக்தி வாய்ந்த மந்திரதந்திரங்கள் அறிந்தவன் என்பதைத் தெரிந்து கொள்,'' என்றான் கண்களை உருட்டியவாறே.

சர்ப்பநகனும் ''ஒரு காபாலிகனின் சக்தி எப்படிப்பட்டது என்று எனக்கு நன்கு தெரியும். என்னைப் பிடித்துக் கொண்டுபோய் காளிக்கா பலியிடப் போகிறாய்?'' என்று கூறி அவனை வாளால் தாக்க முயன்றான்.

ஆனால் அவனது முயற்சி பலிக்க





வில்லை. ஏனெனில் சித்தசாதகனின் பாதுகாப்பிற்கு வந்த படைத் தலைவன் தன் கடாவை சர்ப்பநகன் மீது மோதும்படி செய்தான். சர்ப்பநகன் தடாலென்று தரை மீது விழுந்தான். அவனது கையிலிருந்த வாள் சற்று தூரத்தில் விழவே, சித்தசாதகன் அதன் மீது தன் காலை அழுத்தி வைத்து நின்றான்.

இச்சமயத்தில் ஜெயசீலன் அங்கு வந்து கீழே கிடந்த சர்ப்பநகனைத் தூக்கி நிறுத்தியவாறே சித்தசாதனிடமிருந்து அந்த வாளை எடுத்துக் கொண்டு ''சர்ப்பநகா! உன் பல்லைப் பிடுங்கிவிட்டேன். உன்னால் இனி எதுவும் வாலாட்ட முடியாது,'' என்றான்.

சர்ப்பநகனோ ''இந்த நிலையில் பேசும் நீ ஒரு வீரன் தானா? என்னோடு நேருக்குநேர் நின்று சண்டை போடு பார்க்கலாம்,'' என்றான். ஜெயசீலனோ ஏளனமாகச் சிரித்தவாறே ''சாதகா! இந்த மாவீரன் ஏதோ சண்டை போடச் சொல்கிறான். நீ இவனிடம் உன் கைவரிசையைக் காட்டுகிறாயா?'' என்றான்.

சர்ப்பநகன் சற்றும் தாமதிக்காமல் சித்தசாதகன் மீது பாய்ந்தான். சித்தசாதகனோ அவனது இடுப்பைப் பற்றி அவனை உயரத் தூக்கி ஒரு சுற்று சுற்றி எறிந்தான். கீழே விழுந்த சர்ப்பநகன் எழுந்து நின்று நடுநடுங்கியவாறே ''ஐயா! என்னைக் கொன்றுவிடாதீர்கள். நானும் என் தம்பியும் மகரகேது என்பவனைத் தேடிக் கொண்டு இப்பகுதிக்கு வந்தோம். என் தம்பி சர்ப்பஸ்வரனை ஒரு மனிதக் குரங்கு பிடித்து இழுத்துக் கொண்டு போய் விட்டது. அவனைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்துக் கொண்டு இந்தக் காட்டிலிருந்து போய்விடுகிறேன்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''இதுவா சங்கதி? சரி, உன் தம்பியைத் தேடும் முயற்சியில் நாங்களும் சேர்ந்து கொள்கிறோம். ஆனால் அதற்குமுன் நீ எங்களை மர்மக் குளம் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்வதாக சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன் திகைத்து ''ஐயோ! அப்படி நான் மட்டும் செய்தால் என் தலை வெடித்து விடுமே!'' என்று அழாத குறையாகக் கூறினான். ஜெயசீலனும் ''ஏன் வெடிக்கும்? அப்படி ஏதாவது சாபம்

இருக்கிறதா?'' என்று கேட்டான். சர்ப்பநகனும் ஆமெனத் தலையை ஆட்டவே, ஜெயசீலன் சிரித்தவாறே ''உன் தலை வெடிப்பதற்கு நீ அங்கே போகவேண்டாம். நானே இப்போதே உன் தலையை வெடிக்கும்படிச் செய்கிறேன்,'' என்று கூறி வாளை உயர்த்தினான்.

அச்சமயத்தில் யாரோ பலமாகக் கூக்குரலிடவே, ஜெயசீலன் சத்தம் வந்த திசையைப் பார்த்தான். கிருபாணஜித்தன் ஒரு விசித்திரக் குதிரை மீது அமர்ந்து வந்து கொண் டிருந்தான். அவன் ''அந்த ஜெயசீலன் எங்கே? சித்தசாதகன் எங்கே இருக் கிறான்? இருவரையும் என் வாளுக்கு இரையாக்குகிறேன்,'' என்று உறுமி னான். கிருபாணஜித்தனைப் பார்த்த துமே சித்தசாதகன் தன் ஈட்டியை உயர்த்தி ''வா,வா! வசமாக மாட்டிக் கொண்டாயா?'' என்று கறுவினான்.

அப்போது சர்ப்பநகன் அவனைத் தடுத்து ''ஐயா! இவனை இப்போது கொன்றுவிடாதீர்கள். இந்தக் குதிரை என் தம்பியினுடையது. அவனும் அவனை இழுத்துச் சென்ற மனிதக் குரங்கும் என்னவாயிற்று என்று இவனிடம் விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''நீயே அவனை விசாரி. இந்தா உன் வாள். நாங்கள் சற்றுத் தள்ளி இருக் கிறோம்,'' எனக் கூறி சர்ப்பநகனிடம் அவனது வாளைக் கொடுத்தான்.

அங்கு வந்த கிருபாணஜித்தன் சர்ப்பநகனைப் பார்த்துவிட்டு



''எங்கே அவர்கள் இருவரும்? நீ யார்? நீதானே என் கழுத்தில் சுருக்குக் கயிறை மாட்டி இழுத்தவன்?'' என்று கேட்டான்.

சர்ப்பநகனும் ''ஆமாம். அப்படிச் செய்தவன் நான்தான். நீ இப்போது அமர்ந்திருப்பது என் தம்பியின் குதிரை மீது. அவனை என்ன செய் தாய்?'' எனக் கூறி தன் குதிரை மீதேறி அவனை அணுகினான். கிருபாண ஜித்தனோ ''நில். அங்கேயே உன் தம்பியை மனிதக் குரங்கு இழுத்துக் கொண்டு போய்விட்டது. இந்தக் குதிரை திரிந்து கொண்டிருந்ததால் இதைப் பிடித்து இதன் மீது ஏறி இங்கு வந்தேன்,'' என்றான்.

சர்ப்பநகனோ ''என் கேள்விக்குப் பதில் சொல். எங்கே என் தம்பி?'' என்று கோபத்தோடு கேட்டான். கிருபாணஜித்தனோ ''எனக்குத் தெரி



யாது. ஒருவேளை மனிதக் குரங்கு அவனைக் கொன்றிருக்கலாம். நான் என் எதிரிகளைத் தேடிக் கொண்டிருக்கிறேன். சற்றுமுன் அவர்கள் இங்கே இருந்தார்களே. எங்கே போனார்கள்? அவர்கள் உன் நண்பனான மகரகேதுவின் விரோதிகள்,'' என்றான். அதைக் கேட்டு சர்ப்பநகன் பலமாகச் சிரித்து ''அடே! இந்தப் பசப்பு வார்த்தைகள் வேண்டாம். சொல், என் தம்பி எங்கே?'' என்று அதட்டிக் கேட்டான்.

கிருபாணஜித்தனும் ''கோபப் படாதே! உன் தம்பிக்கு எதுவும் நேர்ந்திராது. என் பின்னாலேயே வா!'' எனக் கூறித் தன் குதிரையைச் செலுத்தினான். சர்ப்பநகனும் அவன் பின்னாலேயே தன் குதிரையை ஓட்டிச் சென்றான்.

அதைக் கண்ட சாதகன் ஜெயசீலனிடம் ''அந்த இருவரும் நமக்குக் கிடைக்காமல் நழுவிவிட்டார்களே!'' என்றான் உற்சாகம் இழந்தவனாய். குள்ளர் படைத் தலைவன் நடந்ததை எல்லாம் பார்த்து மலைத்து நின்றான்.

பிறகு அவன் ஜெயசீலனிடம் ''அந்த இருவரையும் நாம் பிடிக்க வேண்டும்,'' எனவே ஜெயசீலனும் ''நீ உன் ஆட்களுக்கு ஏதாவது சமிக்ஞை செய். அவர்கள் வழி மறித்து இந்த இருவரையும் பிடிக்கட்டும்,'' என்றான்.

உடனே அப்படைத் தலைவன் அதற்கான ஏற்பாடுகளை செய்வதாகக் கூறிவிட்டுச் சென்றான். ஜெயசீலனும் சித்தசாதகனும் அங்கிருந்து கொஞ்ச தூரம் போய் நின்றார்கள். அப்போது ஜெயசீலன் சித்தசாதகனிடம் ''நமக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டு வருகின்றன. அதனால் நாம் மனம் தளர்ந்துவிடக் கூடாது,'' என்றான்.

கிருபாணஜித்தனைப் பின் தொடர்ந்து சென்ற சர்ப்பநகன் ''நில்! ஒருவேளை என் தம்பி உயிருடன் இருக்கலாம். அதனால் நீ என் தம்பியின் குதிரையை என்னிடம் கொடுத்துவிட்டு உன் வழியே செல்!'' என்றான்.

அப்போது கிருபாணஜித்தன் ''நீ சமாதானம் பேசுவது போலப் பேசி நயவஞ்சகமாகக் கொல்லமாட்டாயே? என் முதல் எதிரி அந்த ஜெயசீலன்தான். அவனை ஒழித்துவிட்டுத் தான் மறுவேலை. அதன் பிறகே உன் விஷயத்திற்கு வருவேன்,'' என்று கூறி குதிரையை

மேலும் வேகமாக ஓட்டினான். சர்ப்ப நகனும் அவனை விடாமல் துரத்திக் கொண்டே சென்றான்.

இதற்குள் குள்ளர் படைத் தலைவன் தப்பட்டைகளால் அறிவித்த சமிக்ஞை அப்பகுதியில் வாழ்பவர்களை எச்சரிக்கவே, அவர்கள் அங்கங்கே கூடிவிட்டார்கள். அவர்கள் கிருபாணஜித்தனையும் சர்ப்ப நகனையும் வழி மறித்தார்கள். கிருபாணஜித்தன் முன்னே செல்ல முடியாமலும் பின்வாங்க முடியாமலும் திணறினான். முன்னே சென்றால் மக்கள் கூட்டம். பின்வாங்கினாலோ சர்ப்பநகன்.

ஆற்றின் கரை யோரமாகச் சென்று கொண்டிருந்த அவனுக்கு ஒரு வழி சட்டென்று தெரிந்தது. அவன் தன் குதிரையோடு ஆற்றில் பாய்ந்துவிடத் தீர்மானித்து ஆற்றைப் பார்த்தான். அங்கு இரு பயங்கர முதலைகள் இருப்பதைக் கண்டு என்ன செய்வது என்று யோசித்தான்.

எங்கு திரும்பினாலும் மரணமே என்பதால் ஆற்றில் குதித்து உயிரைப் போக்கிக் கொள்வதை அவன் தேர்ந்தெடுத்தான். சற்றும் தயங்காமல் அவன் குதிரையை ஆற்றில் போக விட்டு அவனும் ஆற்றில் குதித்து விட்டான்.

அதைக் கண்ட சர்ப்பநகன் ''கிருபாணஜித்தா! ஏன் இப்படிச் செய்தாய்? முதலைகள் உன்னோடு சேர்ந்து என் தம்பியின் குதிரையையும் அல்லவா விழுங்கிவிடும். அதனால் உன்னையும் என் தம்பியின் குதிரையையும் காப்பாற்ற நானும் ஆற்றில் குதிக்கிறேன். அவன் உயிருடன் இருந்தால் அவனுக்கு இந்தக் குதிரை மிகமிக அவசியம்,'' எனக் கூறி



அவனும் தன் குதிரையோடு ஆற்றில் குதித்தான்.

முதலைகள் இரண்டும் முதலில் குதித்த கிருபாணஜித்தனை விழுங்க வந்தன. பின்னால் குதித்த சர்ப்பநகன் முதலையைத் தாக்கத் தன் வாளை உயர்த்தினான். கரையில் நின்ற குள் ளர்கள் முதலைகளின் மீது கற்களை வீசி எறிந்தனர்.

கற்கள் குளத்திலிருந்த முதலை களின் மீதும் வேறு இடங்களிலும் விழுந்தன. தன் மீது அவை பட்டு விடுமோ என்று பயந்து சர்ப்பநகன் அங்கும் இங்கும் நகர்ந்தவாறே, ''என் மீது கல்லை எறிந்துவிடாதீர்கள். நான் அந்தக் கிருபாணஜித்தனைப் பிடிக் கவே முயன்று கொண்டிருக் கிறேன்,'' எனக் கூறி கிருபாணஜித்த னின் காலைப் பற்றிய முதலையைத் தன் வாளால் குத்தினான். முதலை துள்ளிப் புரண்டது.

முதலாவது முதலையிலிருந்து விடுபட்ட கிருபாணஜித்தன் இரண் டாவது முதலையிடம் அகப்பட இருந்தான். ஆனால் அதற்குள் அவனது குதிரை கரையை நோக்கி ஓட அதைப் பிடித்த கிருபாணஜித் தனும் கரையை அடைந்தான். குதிரை கிருபாணஜித்தனோடு கரை யில் ஓடி மனிதனைப் பிடித்துக் கொல் லும் மரண மரத்தை அடைந்தது.

கரையில் நின்றவர்களோ, ''கிரு பாணஜித்தா! ஜாக்கிரதை! அது ஆபத்தான மரம். உன்னைப் பிடித்து நசுக்கி நொறுக்கிக் கொன்றுவிடும். தப்பி வேறு எங்காவது ஓடு!'' என்று கத்தினார்கள்.

கிருபாணஜித்தனும் அதைக் கேட்டு ''என்ன? மரண மரமா அது? அப்படியானால் நான் எச்சரிக்கை யுடன் இருக்கிறேன். நான் அந்த மரத்திடம் சிக்கிக் கொள்ளமாட் டேன்,'' என்று கூறிக் குதிரையை அடக்க முயன்றான்.

ஆனால் கிருபாணஜித்தனை அக் குதிரை அந்த பயங்கர மரத்தடியே கொண்டு போயிற்று. அந்த மரத்தின் கிளை ஒன்று கிருபாணஜித்தனைப் பற்றி உயரத் தூக்கலாயிற்று.

(தொடரும்)





# மர்மக் குளம்

## 11

(மர்மக் குளத்தை அடைய சர்ப்பநகனின் உதவி வேண்டும் என்று ஜெயசீலன் நினைத்தான். சர்ப்பநகனோ முதல் வேலையாகத் தன் தம்பியைத் தேடுவதில் முனைந்தான். மனிதக் குரங்கை ஆட்டி வைக்கும் கிருபாணஜித்தனைக் கண்டதும் அவன் அவனைத் துரத்தலானான். உயிருக்குப் பயந்து ஓடிய கிருபாணஜித்தன் மரண மரத்திடம் அகப்பட்டுக் கொண்டான். அப்போது - )

மரண மரத்தின் கிளை ஒன்று கிருபாணஜித்தனின் தலையைப் பற்றி அவனை உயரத் தூக்கியது. அவனது இரு பக்கங்களில் இரு கிளைகள் நீண்டு அவனைப் பிடித்தன. அவனோ அக்கிளைகளிடமிருந்து விடுபட கை கால்களை ஆட்டிய வாறே, ''ஐயோ! காப்பாற்றுங்கள்!'' என்று உரக்கக் கூவினான்.

ஆனால் அவனது கூக்குரலைக் கேட்டும் குள்ளர்களில் எவனும் அவனுக்கு உதவ முயலவில்லை. ஏனெனில் அவர்களுக்கு மரண மரத்தை அணுகவே மிகவும் பயம். சர்ப்பஸ்வரனின் குதிரையை மட்டும் தப்பி ஓட முடியாதபடி அவர்கள் இறுகப் பிடித்துக் கொண்டு இருந்தார்கள்.

சற்று தூரத்தில் ஒரு மேட்டில் நின்று பார்த்துக் கொண்டிருந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் கிரு பாணஜித்தனின் அலறல் கேட்டு ஓடி



வந்தார்கள். அதே சமயம் சர்ப்ப நகனும் அங்கு வந்தான்.

அவன் ''ஆ! என் தம்பி எங்கே இருக்கிறான் என்று கூறக் கூடியவன் இவன் ஒருவன் தான். மரண மரம் இவனைக் கொன்று விட்டால் எதுவுமே தெரியாமல் போய்விடுமே. அதனால் இவனைக் காப்பாற்றுகிறேன்,'' எனக் கூறித் தன் இடை வாளை உருவி கிருபாணஜித்தனைப் பற்றி இருந்த மரக்கிளை ஒன்றன் மீது ஓங்கி அடித்தான்.

அந்த அடிபட்டதும் அந்த மரம் புயலால் தாக்கப்பட்டது போல பயங்கரமாக ஆடியது. அப்போது அந்த மரம் மெதுவாக முனகியது போல இருந்தது. அதன் ஒரு கிளை சட்டெனத் தாழ்ந்து சர்ப்பநகனைப் பற்றிக் கொண்டது.

அவனோ ''மர்மக்குள மகேஸ்வரா! காப்பாற்று!!'' எனக் கதறினான். அவன் ஏறி வந்த குதிரை பயந்து ஓடலாயிற்று.

அப்போது சித்தசாதகன் ஓடிப் போய் சர்ப்பநகனின் கால்களை இறுகப் பிடித்து மரண மரத்திலிருந்து இழுக்கலானான். ஜெயசீலன் தன் வாளால் சர்ப்பநகனைப் பிடித்திருந்த கிளையை வெட்டினான். கிளையிலிருந்து விடுபட்ட சர்ப்பநகன் கீழே விழும்போது சித்தசாதகன் அவனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

அப்போது சர்ப்பநகன் ''மர்மக் குள மகேஸ்வரன் என்னைக் காப்பாற்றிவிட்டான்,'' என்று மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கக் கூறினான். சித்தசாதகனோ, ''அதெல்லாம் ஒன்றும் இல்லை. உன்னைக் காப்பாற்றியது நாங்கள் இருவரும் தான்,'' என்றான்.

சர்ப்பநகன் தலை நிமிர்ந்து பார்த்தான். மரண மரத்தின் கிளையில் அகப்பட்டிருந்த கிருபாணஜித்தனைக் கண்டு அவன் ''அதோ அங்கே தொங்குபவன் தான் என் தம்பி இருக்கும் இடத்தை அறிந்தவன். அவனை எப்படியும் காப்பாற்றியே தீர வேண்டும்,'' எனக் கூறியவாறே மரத்தின் பக்கம் போக முயன்றான்.

ஜெயசீலன் அவனைப் பிடித்து நிறுத்தி அங்கிருந்த குள்ளர்களிடம் ''எங்கே உங்கள் படைத் தலைவன்? இவனது மூளை குழம்பிவிட்டது. இவனைப் பிடித்துக் கொண்டுபோய் நதியில் அரைமணி நேரம் முக்கி முக்கி எடுத்தால் சரியாகிவிடும்,'' என்றான்.

குள்ளர்களின் படைத் தலைவனும் தன் ஆட்களுடன் வந்து சர்ப்பநகனைப் பிடித்துக் கொண்டனர். சர்ப்பநகனோ, ''என் மூளை ஒன்றும் குழம்பிப் போய்விடவில்லை. எல்லாம் சரியாகத் தான் இருக்கிறது. நீங்கள் குள்ளர்கள். இவன் ஜெயசீலன். அவன் சித்தசாதகன். அது முதலைகளின் ஆறு. இப்போதாவது நான் தெளிவாக இருக்கிறேன் என்பது தெரிகிறதா?'' என்று கேட்டான்.

குள்ளர் படைத் தலைவனோ ''அடே! வாயை மூடு. உன்னை ஆற்றில் முதலைகளுக்கு இரையாகப் போடவே போகிறோம்,'' எனக் கூறி அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான்.

அப்போது குள்ளர்களின் ராணி தேரில் அமர்ந்து அங்கு வந்தாள். அவளுக்குப் பின் அவளது ஆட்களும் வந்தனர். ஜெயசீலன் ராணியைக் கண்டதும் ''உங்களுக்கு துரோகம் செய்ய முயன்ற கிருபாணஜித்தனை மரண மரம் கொன்றுவிட்டது. இனி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நாங்கள் எங்கள் வழியில் செல்கிறோம். ஆனால் போகுமுன் இந்த மரத்தை எரிக்கப் போகிறோம்,'' என்றான்.

ராணியும் ''ஆகா! அப்படியே செய்யுங்கள். இது ஒரு நல்ல செயலாகும். இந்தக் கிருபாணஜித்தன் ஒழிந்து போனாலும் அந்த மனிதக் குரங்கு தப்பிவிட்டதே!'' என்றாள் கவலைப்பட்டவாறே.

அப்போது ஜெயசீலன் ''சர்ப்பநகன் என்று ஒருவன் எங்களிடம் அகப்பட்டிருக்கிறான். அவனது தம்பியை அந்த மனிதக் குரங்கு தூக்கிக் கொண்டுபோய்விட்டது. எங்களுக்கு இந்த சர்ப்பநகனின் உதவி தேவைப்படுவதால் நாங்களும் அவனோடு சேர்ந்து அவனது தம்பியைத் தேடப் போகிறோம். அப்போது அந்த மனிதக் குரங்கு கிடைத்தால் அதைக் கொன்றுவிடுகிறோம்,'' என்றான்.



சித்தசாதகனும் ''அது பிறகு நடக்க வேண்டிய வேலை. இப்போது உடனடியாக நாம் செய்ய வேண்டிய வேலை இந்த மரண மரத்தை எரிப்பதுதான். உடனே தீவட்டிகளைக் கொண்டு வாருங்கள்,'' என்றான்.

குள்ளர்களில் நால்வர் தீவட்டிகளைக் கொண்டு வந்தார்கள். சித்தசாதகன் ஒரு தீவட்டியை வாங்கிக் கொண்டு ''இது மனிதர்களைப் பிடித்துக் கொல்வதால் இதன் அமைப்பும்



மனிதனைப் போல எலும்பும் சதைகளும் கொண்டதாக இருக்கும்,'' எனக் கூறி அதை அந்த மரத்தின் மீது எறிந்தான்.

அப்போது மரத்தின் பின்னால் இருந்து ஒருவன் ஓடிவந்து, ''வேண் டாம். உன்னால் இதை எரிக்க முடி யாது. இது நீண்டகாலமாக உள்ள மரம்,'' என்று கூறினான்.

ஜெயசீலனும் சித்தசாதகனும் அவனை ஏறஇறங்கப் பார்த்தார்கள். அவன் அங்கிருந்த குள்ளர்களை விட இரண்டு அங்குலம் உயரமாக இருந்தான். அவனது கழுத்தில் பாசி மணி மாலையும் தோளில் ஒரு கோடாலியும் இருந்தன.

சித்தசாதகன் தன் ஈட்டியால் அவனை ஒரு தட்டு தட்டி ''யாரடா நீ? சர்வ சக்தி வாய்ந்த என்னையா நீ தடுக்கிறாய்?'' என்று கேட்டான். வந்த பேர்வழியோ ''நான் இந்த தெய்வீக மரத்தின் அர்ச்சகன். இதற்கு முன் இதை நீங்கள் வாளால் தாக் கியபோது மெதுவாக முனகியவன் நானே!'' என்றான்.

அதுகேட்டு ஜெயசீலன் ஏளன மாகச் சிரித்து ''ஓஹோ! நீதான் மரத்தின் பின்னால் மறைந்திருந்து முனகியவனா?'' என்று கேட்டான். அவனும் சற்றும் பயப்படாமல் ''ஆமாம். நான்தான். ஆனால் அவ் வாறு என்னை முனக வைத்தது நான் வழிபடும் மரண தேவதையே!'' என்றான்.

அப்போது சித்தசாதகன் அவனது தோளின் மீதிருந்த கோடாலியை எடுத்துக் கொண்டு ''அடே குள்ளப் பூசாரி! உன் மரம் எரிந்து சாம்பலாகப் போகிறது. இனிமேல் உனக்கு இந்த வேலை இல்லை. இந்தக் கோடாலி கொண்டு விறகு வெட்டித்தான் பிழைக்க வேண்டும்,'' எனக் கூறினான்.

பூசாரியோ ''இப்போது அந்தத் தீயை அணைக்கப் போகிறாயா அல்லது உன்னையே நான் தீர்த்துக் கட்டவா?'' என்று உறுமியவாறே அவன் மீது பாய்ந்தான். சித்தசாதகன் அவனைப் பிடித்துத் தள்ளவே அவன் குப்புற விழுந்தான். அவன் மெதுவாக எழுந்து ''ஐயா! கெஞ்சிக் கேட் கிறேன். இதை எரிக்காமல் விட்டு விடுங்கள். இது நல்லவர்களை எது வும் செய்யாது,'' என்றான்.

ஜெயசீலன் சிரித்துக் கொண்டே ''அப்படியா? நீ நல்லவன் தானே. உன்னை மரத்திடம் தள்ளிவிடு

கிறேன். அது என்ன செய்கிறது என்று பார்க்கலாம்,'' என்று கூறி அவனை மரத்தின் பக்கம் தள்ளப் போனான். அர்ச்சகனோ பயந்து நடுநடுங்கி ''வேண்டாம். அது என்னைப் பிடித்து நசுக்கிக் கொன்றுவிடும்,'' என்று அலறினான்.

சித்தசாதகன் இன்னொரு தீவட்டியை வாங்கி அந்த மரத்தின் மீது வீசவே நெருப்பு மரத்தைச் சுற்றிப் பரவி அதனை எரித்தது. அதோடு சேர்ந்து கிருபாணஜித்தனும் எரிந்து போனான்.

அப்போது ஜெயசீலன் ''இந்த கிருபாணஜித்தனுக்கும் எனக்கும் இடையே தகராறு ஏற்பட்டது. இவனால்தான் அமராவதி நகரத்தைவிட்டு வந்து இப்படி அலைந்து திரிய வேண்டியதாயிற்று. என் ஆருயிர் நண்பன் தேவசர்மனையும் விட்டுப் பிரிய வேண்டி வந்தது. அவன் எங்கே எப்படி இருக்கிறானோ யார் கண்டார்கள்?'' என்று கூறினான்.

சித்தசாதகனும் ''நாம் மர்மக் குளத்தை அடைந்து இரண்யபுர மன்னனின் மகனையும் மகளையும் கண்டுபிடித்துக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்குள் உன் நண்பனையும் கண்டுபிடித்துவிடலாம்,'' என்று கூறினான்.

ஜெயசீலனும் ''சாதகா! நீ கூறியது போல நடக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. சர்ப்பநகன் எங்கே?'' என்று கேட்டான். சித்தசாதகனும் ''அதோ அவன் தன் குதிரை மீதேறி அமர்ந்து அந்த மலைப் பகுதியைப் பார்த்து



ஏதோ யோசித்துக் கொண்டிருக்கிறான்,'' என்றான். அப்போது ஜெயசீலன் ''சர்ப்பநகனின் தம்பியின் குதிரை அதோ இருக்கிறது. நாம் அதைப் பயன்படுத்திக் கொள்வோம்,'' என்றான்.

சித்தசாதகனும் ''அதை நீயே பயன்படுத்து. நான் மந்திரசக்தியால் உன் பின்னாலேயே வர முடியும். வழியில் மனிதக் குரங்கைக் கண்டால் அதைப் பிடித்து அடக்கி என் வாகனமாக ஆக்கிக் கொள்கிறேன்,'' என்றான். ஜெயசீலனும் ''உன்னால் அப்படிச் செய்ய முடியும். முதலில் நாம் இங்கிருந்து புறப்படுவோம்,'' என்றான்.

பிறகு குள்ளர்களின் ராணியையும் சேனாதிபதியையும் படைத் தலைவனையும் மற்றவர்களையும் பார்த்து ''உங்கள் எதிரி கிருபாணஜித்தன் ஒழிந்தான். அதனால் உங்களுக்கு

இனி பயம் வேண்டாம். மரண மரமும் எரிந்து போய்விட்டது. இனிமேல் சுகமாக வாழுங்கள். நாங்கள் உங்களிடம் விடைபெற்றுக் கொண்டு எங்கள் வழியில் செல் கிறோம்,'' என்றான். அவர்களும் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அவர்கள் இருவரையும் வழி அனுப்பி வைத் தார்கள். ஜெயசீலன் சர்ப்பஸ்வரனின் குதிரை மீது அமர்ந்து முன் செல்ல, சித்தசாதகன் பின்னால் சென்றான்.

அப்போது சர்ப்பநகன் உரத்த குரலில் ''ஜெயசீலா! சாதகா! சற்று நில்லுங்கள். நானும் உங்களோடு சேர்ந்து கொள்கிறேன். என் தம்பி யைத் தேடிக் கண்டுபிடிக்க வேண் டுமே!'' என்று கூவினான்.

ஜெயசீலனோ ''நீ உன் வழியே போ! நாங்கள் எங்கள் வழியில் செல் கிறோம். மர்மக் குளத்தை நாங்களே கண்டுபிடித்து என்ன செய்ய வேண் டுமோ அதைச் செய்வோம்,'' என்றான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன் எதுவும் பேசாமல் மௌனமாக நின்றான். பிறகு அவர்களோடு சேர்ந்தே அவ னும் சென்றான்.

மூவரும் முன்பு ஜெயசீலன் கண்ட நீர்வீழ்ச்சியை அடைந்தார்கள். அப்போது சர்ப்பநகன் அவர்களுக்கு சற்றுத் தொலைவிலுள்ள ஒரு மலைக் குகையைச் சுட்டிக்காட்டி ''அந்த குகையிலிருந்து ஒரு பிராணி எட்டி எட்டிப் பார்க்கிறதே! பார்க்க அது பயங்கரமாக உள்ளதே, அது எப்படி இங்கே வந்தது? ஒரு வேளை அது கிருபாணஜித்தனின் மனிதக் குரங்காக இருக்குமோ?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் அதைப் பார்த்து விட்டு ''ஆமாம். அந்த மனிதக் குரங்குதான். சந்தேகமே இல்லை,'' என்றான்.

மனிதக் குரங்கு குகை வாயிலில் குதித்து ஓடுகையில் மகரகேதுவின் வாகனமான விசித்திர யானை தன் துதிக்கையால் அதைப் பற்றி இழுத் தது. மனிதக் குரங்கால் ஓர் அடி கூட எடுத்து வைக்க முடியவில்லை.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

## 12

(தன் எதிரி கிருபாணஜித்தன் மரண மரத்திடம் சிக்கி இறந்ததைக் கண்ட ஜெயசீலன் சித்தசாதகனுடன் மர்மக் குளத்தைத் தேடிக் கொண்டு சென்றான். சர்ப்பநகன் அவர்களின் பின்னால் சென்றான். மூவரும் சென்று கொண்டிருக்கையில் ஒரு குகையின் வாசலில் மனிதக் குரங்கை மகரகேதுவின் விசித்திர யானை தாக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது - )

அந்த விசித்திர யானையைக் கண்டு ஜெயசீலன் ஆச்சரியப்பட்டான். அப்போது சர்ப்பநகன் ''ஜெயசீலா! இது மகரகேதுவின் வாகனம். மிகவும் சக்தி வாய்ந்தது. மகரகேதுவோ சர்வ சக்திமான்,'' என்றான்.

அதுகேட்டு சித்தசாதகன் ''உன் மகரகேதுவின் பலம் எவ்வளவு என்பது எங்களுக்குத் தெரியும். முதலில் அந்த விசித்திர யானையைக் கொன்றுவிட்டு அந்த மனிதக் குரங்கை என் வாகனமாக ஆக்கிக் கொள்ளப் போகிறேன்,'' என்று கூறியவாறே தன் திரிசூலத் தைத் தூக்கினான்.

அப்போது ஜெயசீலன் சித்தசாதகனிடம் ''சாதகா! பொறு, அவசரப்படாதே! நாம் மர்மக் குளத்தைக் காண ஓர் அரிய வாய்ப்பு கிடைத்துள்ளது. நாம் மகரகேதுவிடம் நயமாகப் பேசி மர்மக்குள மகேஸ்வரனைக் காண வேண்டும்,'' என்றான்.

சித்தசாதகனும் ''அந்த மகரகேது இன்னமும் உயிருடன் இருப்பதாக



காட்டினான். சாதகனும் அவர்களைப் பார்த்தவாறே ''ஆ! மகரகேது அங்கே நிற்கிறானே!'' என்று கூவி ஆச்சரியப் பட்டான். அந்த நால்வரும் ஜெய சீலனையும் சித்தசாதகனையும் உற்றுப் பார்த்தார்கள்.

மகரகேது தன்னுடன் நின்ற குறுந்தாடிக்காரனுக்கு ஜெயசீலனையும் சித்தசாதகனையும் சுட்டிக்காட்டி ''மருத்துவ மணியே! அவன் தான் ஜெயசீலன். அவனருகே ஈட்டியுடன் இருப்பவன் சித்தசாதகன். இன்னொருவன்தான் நம் சர்ப்பஸ்வரனின் சகோதரன் சர்ப்பநகன்,'' என்றான்.

அப்போது சர்ப்பஸ்வரன் ''என் அண்ணன் சர்ப்பநகனா! அவன் உயிரோடா இருக்கிறான்!'' எனக் கூறி வியப்படைந்தான். மகரகேதுவும் ''அவர்கள் ஒருவிதத்தில் நம் எதிரிகளே. ஆனால் மர்மக்குள மகேஸ்வரனின் கட்டளைப்படி நாம் அவர்களது நண்பர்களைப் போல நடிக்கவே வேண்டும், தெரிந்ததா?'' எனக் கூறி மருத்துவ மணியைப் பார்த்தான்.

மருத்துவமணியும் ''மகரகேது! நீ அந்தப் பரந்த வெளியில் என்ன நடக்கிறது என்று பார். மனிதக் குரங்குகளைத் துப் போய்க் கொண்டிருக்கிறது. ஆனால் உன் வாகனமான விசித்திர யானையை ஜெயசீலன் தன் வாளால் தாக்கிக் கொண்டிருக்கிறான். உன் வாகனம் இறந்துவிடும் போலிருக்கிறதே!'' என்றான்.

அதைக் கேட்டு மகரகேது ''ஆ! மர்மக்குள மகேஸ்வரா! நான் போய் அதைக் காப்பாற்றுகிறேன்,'' எனக்

நினைக்கிறாயா? வாளாலும் கத்தியாலும் படுகாயப்பட்ட அவன் எனறோ இறந்து போயிருப்பானே. அவன் இறந்துவிட்டதால் தான் இந்த விசித்திர யானை கண்டபடி அலைந்து திரிகிறது,'' என்றான். அப்போது விசித்திர யானை தன் துதிக்கையால் மனிதக் குரங்கைப் பற்ற முயல, அக்குரங்கு பயங்கரமாகக் கத்தியது. அவை கடுமையானச் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. விசித்திர யானை மனிதக் குரங்கைப் படாதபாடு படுத்திக் கொண்டிருந்தது.

ஜெயசீலனின் பார்வை அச் சண்டையைப் பார்த்ததோடு சற்று உயரமான இடத்தில் நான்கு பேர்கள் நின்று அதை கவனிப்பதையும் கண்டது. உடனே அவன் ''சாதகா! அங்கே பார்!'' என்று கூறி அவர்களைச் சுட்டிக்

கூறியவாறே அந்த உயரமான இடத்திலிருந்து கீழே குதித்து ஓடினான். மற்றவர்களும் அவன் பின்னால் ஓடிச் சென்றார்கள். அவர்களில் ஒருவனின் வலது கால் மரத்தாலானது.

தான் வாகனமாக்கிக் கொள்ளப் போகும் மனிதக் குரங்கு படும் பாட்டைக் கண்டு சித்தசாதகன் அதை விசித்திர யானையின் பிடியிலிருந்து மீட்க ஓடினான். அப்போது சர்ப்ப நகன் ''ஐயா! அந்த விசித்திர யானையைத் தாக்கினால் நீங்கள் ஒழிந்தீர்கள். மகர கேது உங்களைப் பந்தாடி விடுவார். ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தான்.



அதைக் கேட்ட ஜெயசீலன் சிரித்தவாறே, ''சாதகா! இவன் சொல்வதைப் பொருட்படுத்தாதே! மகரகேதுவைப் பற்றி நமக்குத் தெரியாததையா இவன் சொல்கிறான். நீ பேசாமல் உன் வேலையைச் செய்!'' என்றான்.

சித்தசாதகனோ, ''உன் மகரகேதுவால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. என் திரிசூலத்தின் ஒரே குத்தால் அவனை எமலோகத்திற்கு அனுப்பி விடுவேன். அதைத் தெரிந்து கொள்!'' எனக் கூறியவாறே சென்றான்.

இதற்குள் ஜெயசீலனே இரு மிருகங்களும் சண்டை போடும் இடத்தை அடைந்துவிட்டான். மனிதக் குரங்கைப் பிடிக்க முயன்ற விசித்திர யானையின் துதிக்கையைத் தன் வாளால் அவன் தாக்கினான். அந்தத் தாக்குதலைப் பொறுக்க முடியாமல் அந்த யானை அலறியது. அது தன்னைத் தாக்கிய ஜெயசீலனின் பக்கம் திரும்பியது. அப்போது அவன் சட்டென்று தாவி அதன் முதுகின் மீது உட்கார்ந்துவிட்டான். தன்னைத் தாக்கியவன் தன் முதுகின் மீது ஏறி உட்கார்ந்ததை உணர்ந்த அந்த விசித்திர யானை அவனைப் பிடிக்கத் தனது துதிக்கையை உயர்த்தியது. ஜெயசீலன் அதனைத் தன் இடது கையால் பலமாகப் பிடித்துக் கொண்டு அதன் மத்தகத்தில் வலது கையால் ஓங்கி ஒரு குத்து விட்டான்.

அதைப் பார்த்துக் கொண்டே மகரகேது வேகவேகமாக அங்கு ஓடி வந்தான். அவனைக் கண்ட ஜெயசீலன் ''ஓ! மகரகேதுவா! வா, வா!! உன் வாகனத்தை முதலில் ஒழித்துவிட்டுப் பிறகு உன் கதையை முடிக்கிறேன். இனிமேல் எனக்கு உன்னால் எந்தத் தொல்லையும் கொடுக்க முடியாது,'' என்றான் பலமாகச் சிரித்தவாறே.

மகரகேது இரு கைகளையும் கூப்பி ''ஜெயசீலா! அதை மட்டும் கொல் லாதே! நம் விரோதத்தை மறந்து நாம் நண்பர்களாகிவிடுவோம். நீ மர்மக் குளத்தைக் காணத் தானே வேண்டும். அதற்கான வழியை நான் காட்டு கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் ''ஓ! நீ உண்மையிலேயே எங்களுக்கு மர்மக் குளத்தை அடைய வழி கூறப் போகி றாயா அல்லது வாய்ப்பந்தல் போட்டு ஏமாற்ற முயல்கிறாயா?'' என்று கேட்டான். மகரகேதுவும் ''என்னை நம்பு. நான் வழிபடும் மர்மக்குள மகேஸ்வரனின் மீது ஆணை வைத் துக் கூறுகிறேன். உங்களுக்கு அந்த வழியைக் காட்டுகிறேன். ஆனால் என் வாகனத்தை மட்டும் ஒன்றும் செய்யாதே. விட்டுவிடு!'' என்று கெஞ்சினான்.

ஜெயசீலனும் யானையின் துதிக் கையை விட்டுவிட்டுக் கீழே குதித் தான். அவன் மகரகேதுவிடம், ''நீ எனக்கு அதற்குப் போகும் வழியை மட்டும் சொன்னால் போதாது. மன்னர் கனகாட்சரரின் மகனும் மகளும் விடுதலையாக வேண்டும். அதற்காக உன்னைப் பணயக் கைதி யாக இந்த குகைக்குள் அடைத்து வைக்கப் போகிறேன். இந்த செய் தியை உன் மர்மக்குள மகேஸ்வர னுக்குத் தெரிவி!'' என்றான்.

அப்போது சித்தசாதகன் ''பேஷ். சரியான திட்டம். இவனது கைகால் களைக் கட்டி குகைக்குள் போடலாம். இந்த மனிதக் குரங்கு அடிபட்டு மூர்ச்சையாகிக் கிடக்கிறது. ஏய் சர்ப்பநகா! போய்க் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா!'' என்று கட்டளை இட்டான். அவனோ மகர



கேதுவைப் பார்த்துத் தயங்கி நிற்கவே சித்தசாதகன் ''அவனை ஏன் பார்க்கிறாய்? அவன் இனி உன் எஜமானன் அல்ல. இப்போது நான் சொல்கிறபடி தான் நடக்க வேண்டும். உம். போ!'' என்று கூறி விரட்டினான். சர்ப்ப நகனும் தண்ணீர் கொண்டுவரச் சென்றான்.



அப்போது சித்தசாதகன் மகரகேதுவையும் அவனுடன் இருந்த மூன்று பேர்களையும் பார்த்தான். ஒருவனை அவன் சுட்டிக்காட்டி, ''அடடே! இவன் மரக்கால் மனிதனா?'' என்று கேட்டான். மகரகேதுவும், ''இவன் எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவன் அல்ல. உங்களைப் போல உயர் குடி மகன் இவன். உங்களைப் போலவே மன்னர் கனகாட்சரரின் மகனையும் மகளையும் தேடிக் கொண்டு காட்டுப் பகுதிக்கு வந்தவன். அங்கு ஒரு சிறுத்தைப் புலியிடம் சிக்கித் தன் ஒருகாலை இழந்துவிட்டான். இவன் பெயர் மங்களவர்மன்,'' என்றான்.

ஜெயசீலனும் ''ஓஹோ! இரணிய புரத்து சேனாதிபதியின் மகன் மங்கள வர்மனா? இவனைப் பார்த்ததுமே இன்னானென தெரிந்து கொண்டு விட்டேன். என்ன தான் மருத்துவ மணி என்று பெயர் மாறிவிட்டாலும் உண்மை மறைந்துவிடுமா? இவன் எனக்குப் போட்டியாக மன்னனின் மகளையும் மகனையும் தேடிக் கண்டு பிடித்து அரண்மனைக்குக் கொண்டு வந்துவிடுவதாகச் சவால் விட்டவன் தானே! ஆனால் இப்போது இவன் தன் ஒரு காலை இழந்ததோடு தன் சொந்தப் பெயரைக் கூட இழந்து விட்டானா?'' என்று ஏளனமாகக் கேட்டான்.

இதற்குள் சர்ப்பநகன் ஒரு துணியைத் தண்ணீரில் நனைத்து எடுத்து வந்தான். அதனை அவன் சித்த சாதகனிடம் கொடுக்கவே சாதகன் அதனைக் கையில் வாங்கிக் கொண்டு மனிதக் குரங்கின் தலை மீது அந்தத் துணியிலிருந்த தண்ணீரைப் பிழிந்தான். பிறகு ஒரு தட்டு தட்டி ''ஏய் குரங்கே! எழுந்திரு. இனி உன் உயிருக்கு எந்த விதமான ஆபத்தும் இல்லை,'' என்றான்.

மனிதக் குரங்கும் கண்களைத் திறந்து சுற்றிலும் பார்த்தது. சற்று தூரத்தில் விசித்திர யானை இருப்பதைக் கண்டு பயங்கரமாகக் கத்திக் கொண்டு எழுந்து நின்று அதன் மீது பாயப் போனது. சித்தசாதகன் அத

னைப் பிடித்து நிறுத்தி ''ஏய் குரங்கே! ஆத்திரப்படாதே. நான்தான் உன்னை உயிர்ப்பித்தவன். இதை நன்றாக நினைவில் வைத்துக் கொள். இந்த நிமிடம் முதல் நீ என் அடிமை. உன்னை எனது வாகனமாகப் பயன் படுத்தப் போகிறேன். தெரிந்ததா?'' என்று கூறித் தன் திரிசூலத்தை எடுத்து உயரத் தூக்கி ஆட்டினான். ஆனால் மனிதக் குரங்கோ சித்தசாதகன் மீது பாய முயன்றது.

சித்தசாதகன் தன் திரிசூலத்தால் அதன் தலையில் ஓங்கி ஓர் அடி கொடுத்தான். மனிதக் குரங்கு அந்த அடியால் நிலைகுலைந்து நின்றது. சித்தசாதகனின் வலிமையைக் கண்டு பயந்து போயிற்று. உடனே அது கால்களில் விழுந்து கைகூப்பியது. அதைக் கண்ட சித்தசாதகன் மகிழ்ந்து போய் தன் திரிசூலத்தைத் தாழ்த்திய வாறே ''பயப்படாதே. எழுந்திரு. நான் உன்னை ஒன்றும் செய்ய மாட் டேன். இனிமேல் நீ நான் சொல்கிற படி தான் நடக்க வேண்டும். தெரிந் ததா?'' என அதிகாரக் குரலில் கூறி னான். அதுவும் 'சரி' என்பது போலத் தலையை ஆட்டியது.

அப்போது ஜெயசீலன், ''சாதகா! நீ விரும்பியபடி மனிதக் குரங்கை உன் வாகனமாக ஆக்கிக் கொண்டு விட்டாய். இனி என் விருப்பப்படி நடக்குமா? மர்மக் குளத்தை அடைய வேண்டும். மன்னனின் மகனையும் மகளையும் கண்டுபிடித்து அவர்களை மன்னனிடம் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். மகரகேது என் னவோ மர்மக் குளத்தை அடைய வழி காட்டுவதாகக் கூறி இருக்கிறான். அங்கே நாம் போனபின் என்ன நடக்கும் என்பது இப்போது நமக்கே தெரியாது. ஆனால் எதையும் சந்திக்க நான் தயார்,'' என்றான்.

சித்தசாதகனும், ''ஜெயசீலா, கவ லைப்படாதே! என் விருப்பம் நிறை வேறியது போல உன் விருப்பமும் நிறைவேறத்தான் போகிறது. அரச குமாரனையும் அரசகுமாரியையும் மீட்கத்தான் போகிறோம். இப் போதைக்கு மகரகேதுவை நம்பு வோமே!'' என்றான். *(தொடரும்)*





# மர்மக் குளம்

## 13

*(ஜெயசீலனும் சித்தசாதகனும் அப்பகுதியில் மகரகேதுவைப் பார்த்தார்கள். அவனுடன் தன் இளம்பிராய நண்பனான தேவசர்மாவையும், சேனாதிபதியின் மகனான மங்களவர்மனையும் கண்டு ஜெயசீலன் ஆச்சரியப்பட்டான். சித்தசாதகன் நீர் யானையிடமிருந்து மனிதக் குரங்கைக் காப்பாற்றித் தன் வாகனமாக ஆக்கிக் கொண்டான். அதன் பிறகு)*

மனிதக் குரங்கைத் தான் சொன்ன படி எல்லாம் செய்யச் சொல்லி சித்தசாதகன் ஆட்டி வைக்கவே அது கண்டு எல்லோரும் ஆச்சரியப் பட்டார்கள். ஜெயசீலனும் ''அடே யப்பா! இந்த பயங்கரக் குரங்கை சித்தசாதகன் அடக்கித் தன் வாகனமாக ஆக்கிக் கொண்டுவிட்டது மாபெரும் அதிசயமே. கிருபாணஜித்தனைக் கொன்றது. சர்ப்பஸ்வரனைக் கவர்ந்து சென்றது. ஆனால் அவன் எப்படி இதனிடமிருந்து தப்பி ஓடினான் என்பது தான் புரியவில்லை,'' என்றான்.

மகரகேது அப்போது ''நான் தான் அவனை இதனிடமிருந்து காப்பாற்றினேன்,'' என்றான். ஜெயசீலன் அவனை ஒருமுறை உற்றுப் பார்த்துவிட்டு ''நீ படுகாயம் அடைந்திருந்தாயே. அது ஆறிவிட்டதா?'' என்று கேட்டான். மகரகேதுவும் தேவசர்மாவைச் சுட்டிக்காட்டி ''இவர் தாம் அந்த காயங்களைக்



குணப்படுத்தி எனக்கு உயிர்ப்பிச்சை அளித்தார். இவரை நான் மர்மக் குளத்திற்கு அழைத்துச் சென்றேன். இப்போது அங்கிருந்து தான் திரும்பி வந்திருக்கிறோம்,'' என்றான்.

ஜெயசீலன் தேவசர்மாவைப் பார்த்து, ''ஆகா! நான் உன்னைப் பார்த்து எவ்வளவு வருடங்களாகி விட்டது! இந்த மங்களவர்மன் உன் சீடனா?'' என்று கேட்டான். தேவ சர்மாவும், ''ஆமாம், ஜெயசீலா! இவனுக்கும் மர்மக் குளத்திற்குப் போக வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. ஆனால் பாவம் என்ன செய்வான்! தன் மரக்காலைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டே இருக்கிறான்,'' என்றான்.

அப்போது ஆகாயத்தில் பல பறவைகள் சிறகுகளைப் 'படபட' வென்று அடித்துக் கொண்டு பறந்து செல்வதைக் கண்ட மகரகேதுவும், சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும், ''மர்மக்குள மகேஸ்வரா! போற்றி, போற்றி!!'' என ஒரே சமயத்தில் கூவி பயபக்தியுடன் அவற்றை வணங்கினார்கள். அப்பறவைகள் அந்த கோஷத்தைக் கேட்டு தாம் சுமந்து கொண்டு சென்று கொண்டிருந்த ரதத்தை உடனே கீழே இறக்கின. ரதம் நதிக்கரையில் இறங்கியது.

மகரகேதுவும் மற்ற இருவரும் அந்தத் தேர் இறங்கிய இடத்திற்கு ஓடி அதனுள் பார்த்தார்கள். அவர்கள் எண்ணியபடி மர்மக்குள மகேஸ்வரன் அதில் இல்லை. அவனது தேரோட்டி மட்டும் அதில் இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

ஜெயசீலன், சித்தசாதகன், தேவ சர்மா, மங்களவர்மன் ஆகிய நால்வர் மட்டும் இப்போது மகரகேதுவிடமிருந்தும் அவனது ஆட்களிடமிருந்தும் பிரிக்கப்பட்டுவிட்டனர். அப்போது ஜெயசீலன் மங்கள வர்மனிடம், ''மங்களா! நீயும் நானும் பகைவர்களல்லவே. உன்னைப் பார்த்தால் நீ மர்மக் குளத்திற்குப் போய்விட்டு வந்தவனைப் போலத் தெரிகிறது. அங்கு அரசகுமாரன் காஞ்சனவர்மனையும் அரசகுமாரி காஞ்சனமாலையையும் கண்டாயா?'' என்று கேட்டான். மங்கள வர்மனோ பெருமூச்சுவிட்டவாறே தேவசர்மாவைப் பார்த்து, ''நீங்களே இதற்கு பதில் கூறுங்கள்!'' என்றான்.

ஜெயசீலனும் ''நண்பா! நீயே சொல். அரசகுமாரனும் அரசகுமாரி

யும் நலமாக இருக்கிறார்களா? நீ அவர்களைப் பார்த்தாயா?'' என்று கேட்டான்.

அப்போது சித்தசாதகன் ''இவர் உன் நண்பரா? இதுவரை நீ என்னிடம் சொல்லவே இல்லையே?'' என ஆச்சரியப்பட்டவாறே கேட்டான். ஜெயசீலனும் புன்னகை புரிந்தவாறே ''ஆம்!'' என்று கூறித் தலையை ஆட்டினான். சித்த சாதகனோ ''நாம் இங்கே ஏதோ பேசிக் கொண்டிருக்கிறோம். அங்கே மகரகேதுவும் அவனது ஆட்களும் தப்பி ஓட முயன்று கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தினால் தானே அவர்களது உதவியால் மர்மக் குளத்தை அடைய முடியும்?'' என்று கூறித் தன் கவலையை வெளிப்படுத்தினான்.

ஜெயசீலனும், ''தப்பி ஓட முயல்பவர்களை இப்போது நாம் தடுத்து நிறுத்தினாலும் மறுபடியும் தப்பிச் செல்லவே முயல்வார்கள். மேலும் மகரகேது தப்பிச் செல்வது போல நடித்து நம்மை திசை திருப்ப முயற்சி செய்கிறான் என்றே தெரிகிறது. அதனால் இப்போது நாம் அவனையும் அவனது ஆட்களையும் பின்தொடராமல் இருப்போம். மர்மக் குளத்திற்குப் போக வழி தானே! அது நமக்கு எப்படியும் தெரிந்துவிடும், கவலைப் படாதே!'' எனக் கூறி தேவசர்மாவைப் பார்த்தான்.

தேவசர்மாவும், ''ஜெயசீலா! உன் நண்பன் அவசரக்குடுக்கை என்று தெரிகிறது. எதையும் நிதானமாக



யோசித்துப் பார்க்க இவனுக்குப் பொறுமை இல்லையே. மகரகேது தப்ப முயல்வது போல நடித்து உங்களைத் தன் பின்னால் வரச் செய்து உங்களை ஆற்றிலுள்ள பயங்கர முதலைகளுக்கு இரையாக்குவதே அவன் திட்டமாக இருக்கும்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன், ''ஆற்று முதலைகளுக்கா இரையாக்கி விடுவான்? என் சக்தி வாய்ந்த சூலம் ஆற்று முதலைகளை மட்டுமே அல்ல, மகரகேதுவையும் அவனது வாகனமாகிய நீர்யானையையும் குத்திக் கொன்றுவிடும்,'' என்று ஆவேசமாகப் பொரிந்து தள்ளினான்.

ஜெயசீலன் சித்தசாதகனின் ஆவேசத்தைத் தணிக்க எண்ணி தேவசர்மாவிடம், ''நாம் மங்களவர்மனை மகரகேதுவைக் கண்டு வருவதற்காக



கொள்ள வேண்டும். நானும் நீயும் நெடுங்கால நண்பர்கள் என்பதை மகரகேது தெரிந்து கொள்ளக் கூடாது. அது அவனுக்குத் தெரிந்தால் அரச குமாரியையும் அரசகுமாரனையும் மீட்க முடியாமல் போய்விடும்,'' என்றான்.

சித்தசாதகனும் ''நான் எச்சரிக்கை யாகவே இருக்கிறேன். தப்பி தவறிக் கூட இதை நான் அவனுக்குத் தெரி விக்க மாட்டேன்,'' என்றான். தேவ சர்மனும், ''மர்மக் குளத்திலுள்ள ஜல விருட்ச ராட்சஸனை முதலில் கொல்ல வேண்டும். இவன் யார் தெரியுமா சாதகா? நீ வழிபட்டு வரு கிறாயே மகாகாலன். அவனுடைய ஜென்ம விரோதி,'' என்றான்.

அனுப்பலாமா?'' என்று கேட்டான். தேவசர்மாவும், ''ஆகா, அனுப்ப லாமே! மங்களா! நீ போய் அந்த ரதத்தில் ஏன் தேரோட்டி மாத்திரம் வந்தான் என்பதை அறிந்து வா!'' என்று கூறவே, மங்களவர்மனும் அவனை வணங்கிவிட்டுச் சென்றான். அவன் போனதுமே ஜெயசீலன், ''தேவசர்மா! இப்போது அரச குமாரனையும் அரசகுமாரியையும் பற்றிய விவரங்களைக் கூறு!'' என்று சொன்னான்.

தேவசர்மாவும், ''அவர்கள் பத்திர மாக இருக்கிறார்கள். ஆனால் வேடிக் கையைப் பார். அந்த மர்மக்குள மகேஸ்வரன் தான் ஏன் அவர்களைக் கவர்ந்து வந்தான் என்று மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருக் கிறான். ஒரு விஷயத்தை இந்த சித்தசாதகன் நினைவில் வைத்துக்

சித்தசாதகனும் ''அப்படியா? என் திரிசூலம் அவனை ஒழித்துவிடும்,'' என்றான். அப்போது தேவசர்மா தன் கையிலிருந்த நவரத்தினங்கள் பதிக் கப்பட்ட மந்திரத் தடியை எடுத்து சுழற்றி ஆற்றைச் சுட்டிக்காட்டி, ''மர்மக்குள மகேஸ்வரனின் ரதம் அவனது மெய்க்காப்பாளனான தேரோட்டியுடன் மட்டும் வந்திருக் கிறது என்றால் மர்மக் குளத்தில் ஏதோ விபரீதம் நடந்திருக்க வேண் டும் என்றே நினைக்கிறேன். அதோ மங்களவர்மன் வருகிறான். அவன் பின்னால் மகரகேது தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வருகிறான். என்ன விஷயம் என்று விசாரித்துத் தெரிந்து கொள்வோம்,'' என்றான்.

மகரகேது தேவசர்மாவிடம்,

''என்ன சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை. மர்மக்குள மகேஸ்வரனை ஜல விருட்ச ராட்சஸர்கள் திடீரென்று தாக்கினார்கள். அவர்களிடமிருந்து தப்ப நம் மகேஸ்வரன் அரசகுமாரன் காஞ்சனவர்மனையும் அரசகுமாரி காஞ்சனமாலையையும் அந்த ரதத்தில் ஏற்றித் தன் மெய்க்காப்பாளனை விரைவாக ரதத்தைச் செலுத்தும்படிக் கூறினான். பறவைகள் அந்த ரதத்தை ஆகாயத்தில் உயரக் கொண்டு போயின. ஆனால் ஒரு கழுகுக் கூட்டத்தைக் கண்ட பறவைகள் பயந்து ரதத்தைக் கவிழ்க்கவே, மகேஸ்வரனும் அரசகுமாரனும் அரசகுமாரியும் ரதத்திலிருந்து ஏதோ ஒரு காட்டிற்குள் விழுந்துவிட்டார்கள். தேரோட்டி ரதத்தை மட்டுமே காப்பாற்றி இங்கே கொண்டு வந்து இறக்கி இருக்கிறான்,'' என்றான்.

இதைக் கேட்ட தேவசர்மாவும், ஜெயசீலனும், சித்தசாதகனும் திகைத்து நின்றார்கள். ஜெயசீலனும், ''இனிமேல் எனக்கு இந்த வாள் எதற்கு? இவ் வளவு நாட்களாக நான் பட்ட கஷ்டங்களும் சிரமங்களும் வீணாகிவிட்டனவே! மிகவும் உயரத்தில் இருந்து தரை மீது விழுந்த அரசகுமாரியும் அரசகுமாரனும் உருத் தெரியாமல் போயிருப்பார்களே!'' எனக் கூறித் தன் இடைவாளை உறையிலிருந்து உருவி தூர எறிந்தான். தேவசர்மாவும் தன் கைத்தடியால் தரை மீது ஓங்கி ஓர் அடி கொடுத்தான்.

அப்போது சித்தசாதகன், ''ஏன் இப்படி மனம் தளர்ந்து போய்விட்டீர்கள்? இப்போது என்ன நடந்து விட்டது? ரதத்திலிருந்து விழுந்தவர்கள் எந்தப் புதர் மீதோ அல்லது மரக் கிளைகளிடையோ சிக்கி அதிக காயப்



படாமல் உயிர் தப்பி இருக்கலாம் அல்லவா? அவர்கள் இறந்து போய் விட்டார்கள் என்ற முடிவுக்கு ஏன் வரவேண்டும்? நாம் அவர்களைத் தேடிக் கண்டு பிடிப்போம். ஜல விருட்ச ராட்சஸர்களை ஒழிப்போம். அந்த மர்மக் குளம் இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும், ''சித்தசாதகா! நீ அப்படியா நினைக்கிறாய்? ஆகாயத்திலிருந்து தரை மீது யார் விழுந்தாலும் மரண காயம்பட்டு இறந்து தானே போவார்கள். இதற்கு அரசகுமாரனும் அரசகுமாரியும் விதி விலக்கா? இல்லை. அவர்கள் இறந்து தான் போயிருப்பார்கள்,'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினான்.

சித்தசாதகனோ, ''இல்லை. இம்மாதிரி ஆபத்துகளிலிருந்து எவ்வளவோ பேர்கள் தப்பி உயிருடன் இருந்திருக்கிறார்கள். நாம் ஏன் நம்பிக்கையை இழக்க வேண்டும்? அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள் என்றே எண்ணுவோம். அவர்களைத் தேடியும் பார்ப்போம். அவர்கள் இறந்து போயிருப்பார்கள் என்று எண்ணி கைகட்டிக் கொண்டு எதுவும் செய்யாதிருப்பதில் எவ்விதப் பயனும் இல்லை,'' என்றான்.

ஜெயசீலன் சற்று நேரம் எதுவும் பேசாமல் இருந்தான். பிறகு அவன் தேவசர்மாவைப் பார்த்து, ''நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

தேவசர்மாவும், ''ஜெயசீலா! இப்போது நாம் தாம் அவசரப்பட்டு ஏதேதோ எண்ணிவிட்டோம். சித்தசாதகன் கூறியது போல அவர்கள் பிழைத்திருக்கலாம். நாம் தேடிப் பார்ப்போம்,'' என்றான். அப்போது நதிக்கரையிலிருந்து ''ஐயோ! ஜல ராட்சஸர்கள்! ஜல ராட்சஸர்கள்!!'' என்ற குரல்கள் ஒலித்தன. உடனே அவர்கள் குரல் வந்த திக்கில் நதியைப் பார்த்தார்கள். ஆற்றின் நடுவிலிருந்து ஓநாய்த் தலை கொண்ட ஜல ராட்சஸர்கள் நீந்திக் கொண்டு கரையோரமாக இருந்த ரதத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். *(தொடரும்)*





# மர்மக் குளம்

## 14

*(ஜெயசீலனும் சித்தசாதகனும் நதிக்கரையில் மகரகேதுவையும் தேவசர்மாவையும் கண்டார்கள். அப்போது ஆகாய வழியாய் அன்னப் பறவைகள் கொண்டு வந்த ரதம் நதியில் இறங்கியது. அதிலிருந்து எங்கோ விழுந்த மர்மக்குள மகேஸ்வரனையும் அரசகுமாரியையும் அரசகுமாரனையும் எப்படிக் காப்பாற்றுவது என்று அவர்கள் யோசிக்கலானார்கள். அப்போது சில ஜலராட்சஸர்கள் அந்த ரதத்தைத் தாக்கலானார்கள். பிறகு—)*

ஜல ராட்சஸர்கள் ரதத்தைத் தாக்க முயல்வதைக் கண்ட ஜெயசீலன் தூர எறியப்போன வாளை எறியாமல் கையில் வைத்துக் கொண்டு, ''இவர்களா ஜல ராட்சஸர்கள்! ஓநாய் முகம் மனித உடல். பார்க்க வேடிக்கையாக இருக்கிறதே!'' என்றான். மகரகேதுவும், ''அவர்கள் அந்த ரதத்தை கைப்பற்ற முயல்கிறார்கள். அதை தடுக்க வேண்டும்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் சட்டெனத் தன் வாளை உறைக்குள் போட்டுவிட்டு, ''மகரகேது! உன் மகேஸ்வரன் எங்கள் மன்னரின் மகனையும், மகளையும் தூக்கிக் கொண்டு சென்றான். அதனால்' உன் மன்னனை அடக்கி ஒடுக்கி எம் அரசகுமாரனையும் அரச குமாரியையும் மீட்டுச் செல்லும் பொறுப்பை நான் ஏற்றிருக்கிறேன். உன் மகேஸ்வரன் மட்டும் இப்போது அந்த ரதத்தில் இருந்திருந்தால் என்ன செய்திருப்பேன்



தெரியுமா?'' என்று கடுமையாகக் கூறினான்.

அதைக் கேட்ட மகரகேது பயந்து போய் தேவசர்மாவிடம், ''ஐயா! ஜெயசீலர் ஏனோ எங்களைப் பகைவர்களாகக் கருதுகிறார். எம் அரசர் அரசகுமாரியையும் அரசகுமாரனையும் துன்புறுத்தவே இல்லை. மாறாக அவர்களை நன்கு கவனித்துக் கொண்டு தான் இருந்தார்,'' என்று கூறி ஜெயசீலனுக்கு அதைத் தெரிவிக்கவும் வேண்டினான்.

தேவசர்மாவும், ''ஜெயசீலா! இப்போது நீ பகைமை கொள்ளக்கூடாது. உன் வாளைப் பயன்படுத்தியே ஆக வேண்டும். எனவே வாளை உறையிலிருந்து எடு!'' என்றான். ஜெயசீலனும் வாளைக் கையில் எடுத்துக் கொள்ளவே, சித்த சாதகனும் ''சரி. நானும் என் வாகனத்தில் ஏறிக் கொள்கிறேன். எல்லோரும் சேர்ந்து ஜல ராட்சஸர்களை விரட்டி அடிக்கலாம்,'' என்று உற்சாகத்துடன் கூறினான். சில நொடிகளிலேயே அவர்கள் யாவரும் நதியை அடைந்தார்கள்.

ஜல ராட்சஸர்கள் மகேஸ்வரனின் ரதத்தைத் தாக்க முயன்று கொண்டிருந்தார்கள். அதிலிருந்த மெய்க்காவலாளி அந்த ரதத்தை நதியில் அங்கும் இங்கும் செலுத்தி அவர்களுக்குப் போக்குக் காட்டினான். இதற்குள் மகரகேது நீர்யானை மீது ஏறி அவர்களை நோக்கிச் சென்றான். சித்தசாதகனும் மனிதக் குரங்கின் மீது அமர்ந்து செல்லவே அவர்களைக் கண்ட ஜல ராட்சஸர்கள் பயந்து விட்டார்கள். அவர்கள் தப்ப முயன்ற போது மகரகேதுவும் சித்தசாதகனும் பயங்கரமாகத் தாக்கவே ஜலராட்சஸர்கள் பயந்து ஓடலானார்கள். அந்தத் தாக்குதலில் பலர் இறந்து போனார்கள். நீர்யானை தன் துதிக்கையால் ஜலராட்சஸர்களைப் பிடித்துத் தூக்கி எறிந்தது. மனிதக் குரங்கும் பலரைக் குத்தி ஆற்றில் போட்டது. ஜெயசீலனும் தன் வாளுக்குப் பலரை இரையாக்கினான்.

இப்படியாகப் பல ஜலராட்சஸர்கள் ஆற்று நீரில் அடித்துச் செல்லப் பட்டார்கள். இந்த பயங்கரத் தாக்குதலை முடித்துவிட்டு யாவரும் கரைக்கு வந்தார்கள். ஜெயசீலன் மட்டும் ரதத்தில் அமர்ந்து அதிலிருந்து மெய்காவலாளியிடம் ரதத்தைக் கரையோரம் கொண்டுபோய் நிறுத்தும்படி கூறினான். ஆனால் அந்த மெய்க்காவலாளியோ, ''நான் யார்

தெரியுமா? சர்வ சக்தியுள்ள மர்மக் குள மகேஸ்வரனின் மெய்க் காவலாளி. என்னை யாராலும் எதுவும் செய்ய முடியாது,'' என்று கூறி அலட்சியமாக ஜெயசீலனைப் பார்த்தான்.

ஜெயசீலனோ, ''ஓஹோ! நீ அவ்வளவு சக்தி வாய்ந்தவனா? அதைப் பரீட்சித்துப் பார்க்கிறேன்,'' எனக் கூறி அவன் மீது பாய்ந்து அவனது கழுத்தைப் பிடித்து அமுக்கினான். மெய்க் காவலாளி பலமாகக் கத்தி, ''ஐயோ! உனக்கு இவ்வளவு பலமா? என்னை ஒன்றும் செய்யாதே. விட்டு விடு'' என்று அலறினான். ஜெயசீலனும் தன் பிடியைத் தளர்த்தி, ''முதலில் இந்த ரதத்தைக் கரைக்குக் கொண்டு போய் நிறுத்து. உன்னிடம் சில விஷயங்கள் பற்றிப் பேச வேண்டும்,'' என்றான். மெய்க்காவலாளியும் ஜெயசீலன் கூறியபடியே ரதத்தைக் கரைஓரத்தில் கொண்டுபோய் நிறுத்தினான்.

இதே சமயம் சித்தசாதகனின் மனிதக்குரங்கு ஒரு ஜல ராட்சஸனைப் பிடித்து அடித்து உதைத்து இழுத்துக் கொண்டு ஜெயசீலன் இருக்கும் இடத்திற்கு வந்தது. மனிதக் குரங்கோடு வந்த சித்தசாதகன் தேரில் இருந்த மெய்க்காவலாளியைப் பார்த்தான்.

அவனோ ரதத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு, ''ஐயா! இது சாதாரணமான ரதம் அல்ல. இந்த அன்னப்பறவைகள் இதற்கு அழகு செய்யக் கட்டப்பட்டவை. எங்கள் மகேஸ்வரன் எண்ணினால் இது



ஈரேழு உலகங்களிலும் சுற்றிவிட்டு வரும் சக்தி பெற்றது. சக்திவாய்ந்த இதனைச் சாதாரண ரதம் என்று எண்ணிவிடாதீர்கள்,'' என்றான்.

சித்தசாதகனும், ''இது சக்தி வாய்ந்தது என்றால் ஆகாயத்தில் இதனைக் கழுகுகள் தாக்கியபோது ஏன் கவிழ்ந்தது? உங்கள் மகேஸ்வரனை ஏன் கீழே விழவைத்தது? ஏன் வீண் கதை கூறுகிறாய்?'' என்று கேட்டான். ஜெயசீலன் சித்தசாதகனை மேலும் பேச விடக் கூடாது என்று எண்ணி ''சாதகா! இந்த ரதத்திலிருந்து மர்மக் குள மகேஸ்வரன் மட்டுமா காட்டில் எங்கோ விழுந்தான்? அவனோடு அரசனின் மகனும் மகளும் சேர்ந்து விழுந்திருக்கிறார்களே! இதை நினைவில் கொண்டு நாம் செயல்பட வேண்டும்,'' என்றான்.

அப்போது மகரகேது ஜெயசீலனிடம், ''நாங்கள் எங்கள் மன்னரைத்



தேடிக்கண்டு பிடிக்க வேண்டும். அதனால் இந்த ரதத்தில் அமர்ந்து சென்றாலே அம்முயற்சியில் நான் வெற்றிபெற முடியும்,'' என்றான்.

ஜெயசீலனோ, ''உன்னைப் போக விடமாட்டேன். முதலில் எனக்கு அரசகுமாரியையும் அரசகுமாரனை யும் பற்றித் தெரிந்தாக வேண்டும். உன் மகேஸ்வரன்தான் அவர்களைக் கவர்ந்து வந்தான். அதனால் அவன் தான் அவர்களுடைய க்ஷேமத்திற்குப் பொறுப்பு அவர்களுக்கு ஏதாவது கெடுதல் நேர்ந்திருந்தால் உங்களை எல்லாம் சும்மா விடமாட்டேன்,'' என்று ஆவேசத்துடன் கூறினான்.

அப்போது தேவசர்மா ஜெய சீலனிடம், ''நண்பா! ஆவேசத்தில் அறிவை இழந்து விடாதே! வீணாகப் பகை கொள்வதால் பயன் ஏதும் இல்லை. முதலில் அவர்களைத் தேடிக் கண்டுபிடிப்பதே நம் வேலை. அதைச் செய்வோம்'' என்றான். ஜெய சீலனும், ''தேவா! நீ சொல்கிறபடி செய்வோம். ஆனால் பயங்கரமான காட்டில் அவர்களை எப்படித் தேடிக் கண்டுபிடிப்பது? அதற்கான வழி பற்றி யோசித்துக் கொண்டே செல் வோம்,'' என்றான்.

அப்போது ரதத்தில் இருந்த மெய்க்காவலாளி ஜெயசீலனிடம், ''ஐயா! எங்கள் மன்னரும் உங்கள் அரசகுமாரனும் அரசகுமாரியும் காட் டில் எந்த இடத்தில் விழுந்தார்கள் என்பதை என்னால் காட்டமுடியும். அங்கு போய்த்தேடலாம்,'' என்றான். அதைக் கேட்ட ஜெயசீலன், ''அப்படி யானால் நாம் இப்போதே அங்கே போகலாம். எல்லோரும் இந்த ரதத் தில் அமர்ந்து செல்ல முடியுமா?'' என்று கேட்டான்.

அப்போது மெய்க்காவலாளி, ''இவ்வளவு பேரும் இதில் செல்ல முடியாதே! மகரகேது தன் வாகனத் தோடு இதில் ஏறினால் வேறு யாருக் கும் இடமே இராது. சித்தசாதகனை மனிதக் குரங்கோடு இதில் ஏற்றினால் அது இந்த ரதத்தையே நாசப்படுத்தி விடும்,'' என்றான்.

அப்போது தேவசர்மா, ''அப்படி யானால் இப்படிச் செய்வோம். வாகனங்கள் உள்ள அந்த இருவரும் அவற்றில் அமர்ந்து வர வேண்டும். மற்றவர்கள் இந்த ரதத்தில் ஏறிச் செல்லலாம்,'' என்றான்.

ஜெயசீலனும், ''நல்ல யோசனை தான் அப்படியே செய்யலாம்,'' என்று கூறியபோது சித்தசாதகன்

குறுக்கிட்டு, ''நானும் மகரகேதுவும் சேர்ந்து வருவதா? நான் இவனை நம்ப மாட்டேன். வழியில் இவன் ஏதாவது செய்து என்னை ஒழிக்கப் பார்ப்பான்,'' என்றான்.

அப்போது மகரகேது, ''சாதகா! நான் உனக்கு எவ்விதக் கெடுதலையும் செய்யமாட்டேன். நாம் எல்லோரும் சேர்ந்து ஒரு வேலையைச் செய்யப் போகிறோம். இதைக் கெடுக்க மாட்டேன். நீயும் வழியில் என்னைத் தாக்கக் கூடாது. தெரிந்ததா?'' என்றான்.

தேவசர்மாவும், ''நான் ஆரம்ப முதலே எல்லோரும் பகைமை கொள்ளக் கூடாது என்று சொல்லி வருகிறேன். அதையேதான் இப்போதும் திரும்பச் சொல்கிறேன். நமக்குள் சண்டை சச்சரவு வேண்டாம். முழுமனதுடன் நம் வேலையில் இறங்குவோம்,'' என்றான். இதன் பிறகு மகரகேதுவையும் சித்த சாதகனையும் தவிர மற்றவர்கள் எல்லோரும் ரதத்தில் ஏறினார்கள்.

மெய்க்காவலாளி ரதத்தை ஓட்டிய வாறே, ''அதோ தெரிகிறதே உயரமான மலை. அதன் அடிவாரத்தில் உள்ள காட்டில்தான் எம்மன்னரும் அரசகுமாரனும் அரசகுமாரியும் ரதத்திலிருந்து கீழே விழுந்தார்கள். அதோ ஓரிடத்திலிருந்து புகை கிளம்பி வந்து கொண்டிருக்கிறதே, அதுதான் அந்த இடம்,'' என்றான். ஜெயசீலனும் ''சரி. அங்கேபோய்த் தரை இறங்கலாம்,'' என்றான்.

ரதம் சிளம்பிச் சென்ற பின் சித்த சாதகன் மகரகேதுவிடம், ''இனி நாமும் கிளம்பலாமே!'' என்றான். அப்போது சித்த சாதகனிடம் அகப்பட்ட ஜல ராட்சஸன், ''என்னைத்



தனியாகவா விட்டு விட்டுப் போகி றீர்கள்? என்னையும் உங்களோடு அழைத்துச் செல்லுங்கள். நீங்கள் என்ன வேலை செய்யச் சொன் னாலும் செய்கிறேன்,'' என்றான்.

சித்தசாதகனும், ''உன்னையும் அழைத்துப் போகலாம். ஆனால் எங்கள் வாகனங்கள் செல்லும் வேகத்திற்குச் சமமாக உன்னால் வர முடியுமா?'' என்று கேட்டான். அந்த ஜலராட்சஸனும், ''ஓ! என்னால் அவ் வாறு வர முடியும்,'' என்றான்.

சித்தசாதகன், ''பேஷ். எங்களு டன் வா!'' என்று கூறிக் கொண்டிருந்த போது அங்கு குள்ளர்களின் படைத் தலைவன் வீரர்கள் சிலருடன் வந் தான். அவனைக் கண்ட சித்தசாதகன், ''ஜல ராட்சஸர்களுடன் நீங்கள் சண்டை போட்டதை எல்லாம் நாங் கள் பார்த்தோம். பலர் காயப்பட்டுக் கிடக்கிறார்கள். அவர்களுக்கு மருத் துவ உதவி செய்வது மனிதாபிமானம் தானே!'' என்றான்.

சித்தசாதகனோ, ''மருத்துவ உத வியா? அவர்களை எமலோகத்திற்கு அனுப்பும் வழியைப் பார்!'' என்றான் சற்று கோபத்தோடு.

அப்போது அந்தப் படைத் தலை வன், ''அங்கே பாருங்கள்! காட்டி லிருந்து அடர்ந்த புகை எழும்பி வருகிறதே. காடே தீப்பற்றி எரி கிறதா?'' என்று கவலைப்பட்ட வாறே கூறினான்.

அப்போது சித்த சாதகன், ''இது எப்படி ஏற்பட்டது என்று தெரிய வில்லையே! மகரகேது, உன் மர்மக் குள மகேஸ்வரரும் அரசகுமாரனும் அரசகுமாரியும் அங்கே தான் விழுந் தார்கள். உன் மர்மக்குள மகேஸ்வரர் அந்தத் தீயில் அகப்பட்டு வெந்து சாம்பலாகிவிடக் கூடாது என்று கடவுளை வேண்டிக் கொள். புறப் படு, இப்போதே நாம் அந்த இடத் திற்குப் போய்ச் சேர வேண்டும்,'' என்று கூறி அவசரப்படுத்தினான்.

மறுவிநாடியே மகரகேதுவும் சித்தசாதகனும் தம் வாகனங்களின் மீது அமர்ந்து செல்ல, ஜல ராட் சஸனும் அவர்களின் பின்னாலேயே சென்றான். *(தொடரும்)*





# மர்மக் குளம்

## 15

*(அன்ன ரதத்தைத் தாக்க வந்த ஜலராட்சஸர்களை ஜெயசீலனும் அவனது கூட்டாளிகளும் தாக்கி விரட்டினார்கள். மர்மக்குள மகேஸ்வரனும் அரசகுமாரி காஞ்சனமாலையும் ரதத்திலிருந்து விழுந்த இடத்திலிருந்து புகை கிளம்பி வந்து கொண்டு இருந்தது. சித்தசாதகனும் மகரகேதுவும் அந்த இடத்திற்கு முன் செல்ல, மற்றவர்கள் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அப்போது-)*

அன்ன ரதத்திலிருந்து மர்மக்குள மகேஸ்வரனும் அரசகுமாரி காஞ்சன மாலையும் மற்றொருவனும் வெவ்வேறு இடங்களில் விழுந்தார்கள். மகேஸ்வரன் 'பொத்'தென்று விழுந்தாலும் பெரிய காயம் எதுவும் ஏற்படவில்லை. ஆனால் புதிய சிக்கலில் மாட்டிக் கொண்டான்.

மகேஸ்வரன் காட்டில் விழுந்த இடத்தில் மனித மாமிசத்தை விரும்பும் காடர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு உண்ண ஒரு வார காலமாக எவ்வித மாமிசமும் கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் எங்கிருந்தோ அப்பகுதிக்கு வந்த புலிகளின் கூட்டம் தான். அவை பல மிருகங்களைக் கொன்றன. எஞ்சிய மிருகங்கள் பயந்து வேறு பகுதிகளுக்கு ஓடிவிட்டன.

மனித மாமிசம் உண்ணும்



காடர்களின் தலைவன் காட்டான். அவனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான நான்கு காடர்கள் அவனிடம் தாம் தெரிந்து கொண்ட ஒரு விஷயத்தைக் கூறினார்கள்.

காடர்களில் சிலர் அப்பகுதியில் இருந்து வெளியேறப் போகிறார்கள் என்பது தான் அது. அவர்கள் அவ்வாறு செய்வது பாவச் செயலாகும் என்று காட்டான் எண்ணினான். அது காடர்கள் ஆலமரத்து ஆண்டவனைப் புறக்கணிப்பது போலாகிவிடும். பரம்பரை பரம்பரையாக ஆண்டுக்கு ஒருமுறை அந்த ஆண்டவனுக்கு மனித மாமிசம் படைத்து விழா கொண்டாடுவது நின்று போனால் என்ன விபரீதம் விளையுமோ என்று அவன் பயப்பட்டான்.

காடர்கள் யாரும் அப்பகுதியிலிருந்து வெளியேறாமல் ஆலமரத்து ஆண்டவன் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொள்ள காட்டான் அந்த ஆலமரத்து ஆண்டவன் கோயிலுக்குச் சென்றான். அது பழமையான பாழடைந்த கோயில். அன்று காட்டான் அந்த ஆலயத்துள் சென்றபோது ஓர் அதிசயத்தைக் கண்டான்.

அங்கிருந்த விக்கிரகத்தின் முன் ஒரு மலைப்பாம்பு ஓர் ஓநாயின் உடலைச் சுற்றி அழுத்திக் கொண்டிருந்தது. ஓநாயோ அந்தப் பாம்பின் தலையைக் கடித்துக் கொண்டிருந்தது. இவ்வாறு ஒன்று மற்றதைக் கொல்ல பயங்கரமாக முயன்று கொண்டிருந்தது.

இதைக் கண்ட காட்டான் பயந்து சற்றுப் பின்வாங்கி தூரத்தில் நின்று கொண்டு ஆலமரத்து ஆண்டவனை வணங்கி, ''தேவா! உன் மக்கள் உண்ண எதுவும் கிடைக்காமல் ஒரு வார காலமாக வாடிக் கொண்டிருக்கிறார்களே! இது உனக்குத் தெரியாதா? இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என்று கட்டளை இடு!'' என்று கை கூப்பி வணங்கிக் கேட்டான்.

அப்போது ஒரு பூனை 'மியாவ்' என்று கத்தியது. அதைக் கேட்ட காட்டான், ''இதுவா உன் கட்டளை? ஆனால் இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே!'' என்று பரிதாபமாகக் கதறினான். பிறகு ஏதோ யோசித்தவாறே அங்கிருந்து வேகவேகமாகத் திரும்பிச் சென்றான்.

ஒரு பரந்த மைதானத்தில் காடர்கள் ஆண்கள், பெண்கள்,

குழந்தைகள் என்று எல்லோரும் கூடி உணவிற்கு என்ன வழி செய்வது என்று விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது காட்டான் வேக வேகமாக அங்கு வந்து ''ஆலமரத்து ஆண்டவன் அருள்புரிந்துவிட்டான். எங்கே நம் பூசாரி?'' என்று உரக்கக் கூவினான். உடனே காடர்கள், ''ஆகா! ஆண்டவர் உணவு கொடுத்து விட்டாரா? எங்கே இருக்கிறது? அவை ஆடுகளா? மாடுகளா? மான்களா?'' என்று ஆவலுடன் கேட்டார்கள்.

காட்டானோ கோபத்தோடு ''நான் கேட்ட கேள்விக்குப் பதிலே இல்லையே! எங்கே தொலைந்தான் அந்தக் கிழ பூசாரி?'' என்று உறுமினான். அப்போது அந்தப் பூசாரி பசியால் தலை சுற்ற ஒரு மரத்தடியே கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் மரத்தின் கீழ் உட்கார்ந்திருப்பதை ஒரு சிலர் காட்டானிடம் கூறவே, அவன் பூசாரி இருந்த இடத்திற்கே போய் தான் கோயிலில் கண்ட காட்சியைக் கூறி ''பூசாரி! இதன் பொருள் என்ன?'' என்று கேட்டான்.

பூசாரியோ பாதிக் கண்ணைத் திறந்தவாறே ''மாமிசம் கிடைத்தால் சாப்பிடு. கிடைக்காவிட்டால் காய், கனி, கிழங்கு, இலை, புல் என்று எதை வேண்டுமானாலும் சாப்பிடு என்று ஆண்டவன் கட்டளை இடுகிறான்,'' என்றான்.

அதைக் கேட்ட காட்டான் கோபம் கொண்டு அவன் முதுகில் ஓங்கி ஓர்



அடி கொடுத்து ''ஏய் பூசாரி! பசி மயக்கத்தில் என்ன உளறுகிறாய்? நம் இனத்தவர் மாமிசத்தைத் தவிர வேறு எதையும் உண்பது இல்லை என்று சபதம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை மறந்துவிட்டாயா?'' என்று அதட்டிக் கேட்டான். அவன் கொடுத்த அடி பூசாரிக்குத் தன் நினைவுவரச் செய்தது.

அவன் காட்டானிடம், ''இப்போது சரியாகச் சொல். முன்பு என்னிடம் என்ன சொன்னாய்? அதையே திரும்பச் சொல,'' என்றான். அவன் எழுந்திருக்க முயன்ற போது நிலை தடுமாறியதால் இரு காடர் இளைஞர்கள் அவனைப் பிடித்து நிற்க வைத்தார்கள். காட்டான் ஆலமரத்து ஆலயத்தில் தான் கண்டதை மறுபடியும் ஒரு தடவை சொன்னான்.

பூசாரியும் அதை முழுவதையும்



கவனமாகக் கேட்டுவிட்டு ஏதோ யோசனை செய்தான். சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் ஒரு பிடி மண்ணை எடுத்துக் கொண்டு ஏதோ மந்திரங்களை உச்சரித்தான்.

பிறகு அவன் அந்த மண்ணை அங்கிருந்த எல்லோர் மீதும் தூவி ''இங்கே மரம் செடி கொடி என எதுவுமே இல்லாத இடத்தில் அடுப்பை மூட்டி அதன் மீது ஒரு பாத்திரத்தில் தண்ணீர் ஊற்றிக் கொதிக்கவிடுங்கள். சிலர் ஆலமரத்து ஆண்டவன் கோயிலுக்குப் போய் அங்கே உள்ள மலைப் பாம்பையும் ஓநாயையும் பூனையையும் இங்கே கொண்டு வாருங்கள்!'' என்றான்.

காட்டானோ, ''அந்தப் பூனை இன்னமுமா அங்கே இருக்கும்? மலைப்பாம்பும் ஓநாயும் ஒன்றை மற்றது கொன்றிருக்கும். ஆமாம், நம் ஆலமரத்து ஆண்டவன் ஏன் இதைச் செய்து காட்டினான்?'' என்று பூசாரியிடம் கேட்டான். அவ்வளவு தான். மறுநிமிடமே பூசாரி பேயாட்டம் ஆடி ''அடே! என்னைத் தெரியவில்லையா? நான்தான் ஆலமரத்து ஆண்டவன். என் அருளால் உங்களுக்கு மிருகங்களின் மாமிசம் மட்டும் அல்ல, மனித மாமிசமும் கிடைக்கப் போகிறது. எல்லோரும் போங்கள்,'' என்று பலத்த குரலில் கத்தினான்.

அதன் பிறகு பூசாரி முன்பு கூறியபடி காலி இடத்தில் அடுப்பு மூட்டப்பட்டது. அதன் மீது பெரிய வாணலியை வைத்து அதில் நீரை விட்டுக் கொதிக்க வைத்தார்கள். அடுப்பில் எரிந்த கட்டைகளிலிருந்து வெள்ளைநிறப் புகை உயரக் கிளம்பியது. இந்த சமயத்தில் தான் ஆகாயத்தில் அன்ன ரதத்தில் மர்மக்குள மகேஸ்வரன் அப்பகுதிக்கு வந்தான். அப்போது அந்த ரதத்தைப் பருந்துகள் தாக்கிக் கவிழச் செய்தன. அதிலிருந்து மகேஸ்வரன், அரசகுமாரி காஞ்சன மாலை, தேரோட்டி ஆகிய மூவரும் கீழே விழுந்தார்கள். மெய்க் காவலாளி மட்டும் ரதத்திலுள்ள மரத் தூணை உறுதியாகப் பற்றிக் கொண்டதால் கீழே விழவில்லை.

அன்ன ரதத்திலிருந்து மூவரும் ஒரே இடத்தில் விழவில்லை. வெவ்வேறு இடங்களில் தான் விழுந்தார்கள். பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்த பூசாரி மகேஸ்வரன் ஆகாயத்திலிருந்து விழுவதைப் பார்த்துவிட்டான். உடனே அவன், ''அதோ

பாருங்கள். ஆலமரத்து ஆண்டவன் நமக்கு ஆகாயத்திலிருந்து ஒரு மனி தனைக் கீழே போட்டிருக்கிறார். இப்போது மனிதன், மலைப் பாம்பு, ஓநாய், பூனை என்று நான்கு வகையான மாமிசங்கள் கிடைக்கப் போகின்றன. முதலில் அவற்றை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்துவிட்டு பிறகு எடுத்து எல்லோரும் உண் போம்,'' என்றான்.



காடர்கள் அண்ணாந்து ஆகாயத் தைப் பார்த்தார்கள். ஒரு மனிதன் விழுந்து கொண்டிருப்பதைக் கண்டு உற்சாகத்துடன் கைதட்டி ஆர்ப்பரித் தார்கள். மர்மக்குள மகேஸ்வரன் நேராகக் காடர்கள் வெந்நீர் காய்ச்சிக் கொண்டிருந்த வாணலியில் விழுந் தான். பூசாரி சிரித்தவாறே அவ னருகே வந்து பார்த்து, ''ஆகா! 'கொழுக் மொழுக்'கென்று இருக்கும் ஒரு மனிதனை ஆண்டவன் நமக்கு அனுப்பி இருக்கிறான். அதுவும் நேராக வெந்நீரில் விழ வைத்து விரைவில் வேகச் செய்திருக்கிறான்,'' என்றான்.

அப்போது மகேஸ்வரன் தான் பெரிய ஆபத்தில் அகப்பட்டுவிட்ட தைக் கண்டான். வாணலி நீர் சூடாகிக் கொண்டே இருந்தது. அவன் வாணலியிலிருந்து வெளியே வர முயன்றான். பூசாரி கையில் கட்டையை எடுத்துக் கொண்டு மிரட் டவே, மகேஸ்வரன் பூசாரியிடம் நயமாகப் பேசி தப்பிவிட எண்ணி னான். அதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்தான். அவனுக்கு மன தில் ஒரு வழி தோன்றியது. காடர்கள் மனித மாமிசத்தை விரும்புபவர்கள். எனவே அந்த ஆசையைக் காட்டித் தப்பித்துவிட வேண்டும் என்று நினைத்தான்.

அதனால் அவன் பூசாரியிடம், ''பூசாரி! உங்கள் ஆண்டவன் என் னோடு மூன்று பேர்களை உங்களுக் காக அனுப்பினாரே! அவர்களைப் பிடிக்கவில்லையா? என்னை அழைத் துக் கொண்டு நீ போனால் அவர்கள் இருக்கும் இடத்தைக் காட்டுகிறேன். அவர்களையும் பிடித்து எங்கள் நால்வரையும் வேகவைத்து உங்கள் ஆண்டவனுக்குச் சமர்ப்பித்துவிட்டு சந்தோஷமாகச் சாப்பிடுங்கள்,'' என்றான்.

அதைக் கேட்டு மகிழ்ந்து போன பூசாரி மகேஸ்வரனை வாணலியில் இருந்து வெளியே எடுத்துவிட்டான். ஆலயத்திற்குச் சென்ற காட்டானுக்கு

அந்த சமாச்சாரத்தைச் சொல்ல ஒரு வனை பூசாரி அனுப்பினான். அவன் வேறு சிலருடன் மகேஸ்வரனைக் கூட்டிக் கொண்டு மற்ற மூவரை அழைத்துவரக் கிளம்பினான்.

மாலையாகும்வரை அவர்கள் நடந்து கொண்டே இருந்தார்கள். அப்போது மகேஸ்வரன் தன் தேரோட்டியின் பூண் பிடித்த தடி ஓரிடத்தில் விழுந்து கிடப்பதைக் கண்டான். அப்போது அவன் தன்னோடு வந்தவர்கள் அங்கே எங்கேயோ தான் விழுந்திருக்க வேண்டும் என்று ஊகித்துவிட்டான். இப்போது அவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

பூசாரி மகேஸ்வரனிடம், ''எங்கே அவர்கள் காணவில்லையே!'' என்று கேட்டான். மகேஸ்வரனும், ''இங்கே தான் விழுந்து கிடப்பார்கள். நாம் சற்றுப் பொறுமையுடன் தேடுவோம். கண்டிப்பாகக் கிடைத்துவிடுவார்கள்,'' என்றான்.

பூசாரியும், ''ஆமாம். அந்த ஆலமரத்து ஆண்டவன் எங்களுக்கு உங்களை எல்லாம் அனுப்பி இருக்கிறான். எனவே உங்கள் எல்லோரையும் கொண்டுபோய் அந்த ஆண்டவனுக்கு முதலில் படைத்தாக வேண்டும்,'' என்றான்.

மகேஸ்வரனும், ''நீ சொல்வது சரிதான். ஆண்டவன் நமக்கு அளித்ததை முதலில் அவனுக்கு அர்ப்பணித்துவிட்டு பிறகு அதை அவன் அளிக்கும் பிரசாதமாக ஏற்க வேண்டும். இப்போது முதலில் அவன் என்னோடு அனுப்பியவர்களைத் தேடு. பிறகு எங்களை உன் ஆண்டவனுக்கு அர்ப்பணி!'' என்றான்.

மகேஸ்வரன் நிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தான். சற்று தூரத்தில் அன்ன ரதம் போய்க் கொண்டிப்பதை அவன் கண்டான். இதே சமயம் புகை கிளம்பிய இடத்தை நோக்கி சித்த சாதகனும் மகரகேதுவும் வந்து கொண்டிருந்தார்கள். சித்தசாதகன் 'ஜெய் மகாகாளி' எனக் கத்திக் கொண்டே வந்தான். அதைக் கேட்டு பூசாரியும் அவனோடு வந்தவர்களும் நடுங்கலானார்கள். *(தொடரும்)*





# மர்மக் குளம்

## 16

*(வானத்தில் அன்ன ரதத்தில் பயணம் செய்து கொண்டிருந்த மர்மக்குள மகேஸ்வரன் அதிலிருந்து நிலை தடுமாறிக் கீழே விழுந்தான். அவன் விழுந்ததும் மனித மாமிசத்தை உண்ணும் காடர்களின் மத்தியில் தான். அவர்களிடமிருந்து தப்ப அவன் அவர்களிடம் தன்னோடு வந்தவர்களைக் காட்டுவதாகக் கூறி ஆசை காட்டினான். எல்லோருமாக அவர்களைப் பிடிக்கக் கிளம்பினார்கள். அப்போது சித்தசாதகன் கத்தியது அவர்களுக்குக் கேட்டது. அதன் பிறகு - )*

சித்தசாதகன் 'ஜெய் மகாகாளி' எனக் கத்தியது கேட்டு மகேஸ்வரன் மலைத்து நின்றான். அதைக் கண்ட பூசாரி ஆச்சரியப்பட்டான். அவர்களோடு வந்த காடர்களில் நால்வர் தம் ஈட்டிகளை உயர்த்திக் கொண்டு அந்தக் குரல் வந்த இடத்திற்கு ஓடினார்கள்.

அப்போது மகேஸ்வரன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு பூசாரியிடம், ''இப்போது போன நால்வரை நீ திரும்பி வரச் சொல். அந்தக் குரல் கொடுத்தவன் மகாகாளி பக்தன். அவனது மந்திர சக்திக்கு முன் உங்கள் ஈட்டிகள் பயனற்றுப் போய்விடும்,'' என்றான்.

அதைக் கேட்டு பூசாரி கேலியாகச் சிரித்தான். பிறகு ''நாங்கள் இந்த மந்திர சக்திக்கு எல்லாம் பயந்துவிட மாட்டோம். எங்கள் ஆண்டவன் எங்கள் மீது கருணை கூர்ந்து இன்னொரு மனிதனையும் அனுப்பி



இருக்கிறார்,'' என்று கொக்கரித்தான். பூசாரி இவ்வாறு சொல்லி முடிக் கையில் ஈட்டிகளை உயர்த்திக் கொண்டு போன நான்கு காடர்களும் 'ஐயோ! அப்பா!!' என அலறிக் கொண்டு வந்து பூசாரியின் காலடியில் விழுந்தார்கள்.

பூசாரியும் அவர்களை எழுப்பி ''என்ன விஷயம்?'' என்று கேட் டான். அப்போது ஒரு காடன், ''யாரோ ஒருவன் எமனைப் போல முரடான ஒரு மனிதக் குரங்கின் மீது உட்கார்ந்து கொண்டு நம்மைத் தாக்க வந்து கொண்டிருக்கிறான்,'' என் றான். அதைக் கேட்டு பூசாரியின் கை, கால்கள் நடுங்கின. தொலைவில் சித்தசாதகன் ஈட்டியை உயர்த்திய வாறே மனிதக் குரங்கின் மீது உட்கார்ந்து வந்து கொண்டிருப்பதை அவன் பார்த்தான்.

பூசாரியும், ''ஆமாம். எமன் போல வருகிறானே. நாம் இங்கிருந்து ஓடி விடுவது தான் நல்லது. ஒருவன் ஓடிப்போய் தலைவன் காட்டானிடம் விஷயத்தைச் சொல்லி அவனை அழைத்து வரட்டும். இவன் கையில் அகப்பட்டால் நாம் எமலோகத் திற்குத் தான் போக வேண்டிவரும்,'' என்றான்.

இதே சமயத்தில் சித்தசாதகன் மீண்டும் ''ஜெய் மகாகாளி!'' என்று உரக்கக் கூவினான். பிறகு அவன் மனிதக் குரங்கோடு காடர்களின் முன் நின்று ''யாராவது நகர்ந்தால் நேராக எமலோகத்திற்குத் தான் போவீர்கள். நீங்களெல்லாம் யார்? ஓர் அரசகுமாரி ஆகாயத்திலிருந்து இங்கு எங்கேயோ விழுந்திருக்கிறாள். அவளைப் பார்த் தீர்களா?'' என்று கேட்டான்.

சித்தசாதகன் கூறியது பூசாரிக்கும் காடர்களுக்கும் புரியவில்லை. பூசாரி மகேஸ்வரன் எங்கே என்று பார்த் தான். அவன் ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்டு சித்தசாதகனுக்கு அவனைச் சுட்டிக் காட்டி ''அவனை எம் ஆலமரத்து ஆண்டவன் எங்களுக்கு உணவாக அனுப்பி இருக்கிறான். அவனிடம் நீ குறிப்பிடும் அரசகுமாரியைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்,'' என்றான்.

அதுவரை காடர்களையே பார்த் துக் கொண்டிருந்த சித்தசாதகன் பூசாரி காட்டிய மரத்தைப் பார்த்தான். உடனே அவன் ''அடடே! தொப்பிக் காரப் பயலா நீ? நீதான் மர்மக்குள மகேஸ்வரனா! திருடன் மாதிரி ஓடவா பார்க்கிறாய்? நீ ஓரடி எடுத்து

வைத்தால்கூட என் ஈட்டி உன்னைப் பதம் பார்த்துவிடும், தெரிந்ததா?'' என்று உறுமினான். அதைக் கேட்ட மகேஸ்வரன் கோபமாய், ''அடே! உனக்குச் சரிசமமாகப் பேச நான் தயாராக இல்லை. பேசாமல் உன் வழியைப் பார்த்துக் கொண்டு போ!'' என்று கர்வமாகக் கூறினான்.

சித்தசாதகனோ, ''அடே! நான் யார் தெரியுமா? தேவி மகாகாளியின் பக்தன். உன் போன்றவன் எனக்கு அடிமையாக இருப்பவன். அவனை அரசகுமாரி காஞ்சனமாலையைத் தேடிக் கண்டுபிடித்துக் கூட்டிக் கொண்டுவர நான் அனுப்பி இருக் கிறேன். ஏய் ஜலவிருகா! எங்கே இருக்கிறாய்? வந்து உன் விரோதி மர்மக்குள மகேஸ்வரனை ஒரு கை பார்!'' என்று உரக்கக் கூறினான்.

ஜல விருகன் என சித்தசாதகன் குறிப்பிட்டது ஓநாய்த் தலையனைத் தான். இதே சமயம் மகரகேது தன் நீர்யானை மீது அமர்ந்து வந்து ஜல விருகனைத் தடுக்க முயன்றான். ஜல விருகனோ தன் கதையால் நீர் யானையின் தலை மீது ஓங்கி அடிக்கவே அது விழுந்தது. அதன் மீதிருந்த மகரகேது கீழே குதித்து வாளை உருவி ஜலவிருகனைத் தாக் கினான். ஆனால் வாள் ஜல விருக னின் தோளில் லேசான காயத்தைத் தான் ஏற்படுத்தியது.

அதைக் கண்ட சித்தசாதகன் மகர கேதுவை அடித்து வீழ்த்துமாறு மனி தக் குரங்கை ஏவினான். அப்போது பலமாக யாரோ சீட்டி அடிக்கவே



நாலாபுறத்திலிருந்தும் காடர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்களது தலைவனான காட் டான் ஈட்டியை உயர்த்தியவாறே பூசாரியின் பக்கம் வந்தான். அவ னிடம் ''பூசாரி! ஆலமரத்து ஆண்ட வன் இவ்வளவு மனிதர்களையுமா நமக்கு ஆகாரமாக அனுப்பி இருக் கிறார்?'' என்று மகிழ்ச்சி ததும்பக் கேட்டான். பூசாரி தலையை ஆட் டவே காடர்கள் சித்தசாதகனை நோக்கி ஓடி வந்தார்கள்.

மகரகேது காயப்பட்ட நீர் யானையை எழுப்பிப் பார்த்தான். அது எழாதிருக்கவே, அவன் மர்மக் குள மகேஸ்வரனைப் பார்த்து, ''மகேஸ்வரா! இந்த யானையை எழுந்து நிற்கச் செய்யுங்கள். சித்த சாதகன் ஆவேசத்தில் ஏதோ பேசி விட்டாலும் அவன் மிகவும் நல் லவனே. இவனது நண்பன் ஜெய




சீலனும் நமக்கு உதவுபவரே. வைத்தியரும் அவரும் அன்ன ரதத்தில் இங்கு வந்து கொண்டிருக்கிறார்கள்.

நதிக்கரையில் நடந்தது எதுவும் தெரியாததால் மகேஸ்வரனுக்கு மகரகேது சொன்னது எதுவும் புரியவில்லை. மகரகேதுவின் யானையின் பக்கம் போய்விட்டால்தான் எந்த ஆபத்தையும் எதிர்கொள்ள முடியும் என்று எண்ணி அடிமேல் அடி எடுத்து வைத்து அவன் மகரகேது இருக்கும் இடத்திற்குச் சென்றான்.

இச்சமயத்தில் மகரகேதுவால் தாக்கப்பட்ட ஜலவிருகன் படுகாயம் அடைந்து முனகியவாறே சித்தசாதகனைப் பார்த்தான். சித்தசாதகனும், ''உன் காயம் ஒன்றும் பெரிதாக இல்லை. எழுந்து உன் கதையைக் கையில் எடுத்துக் கொள்!'' என்று கூறினான். பிறகு அவன் மகரகேதுவைப் பார்த்து, ''கேது! இனி யாருக்கு ஆபத்து என்பதைப் புரிந்து கொள்!'' என்றான்.

மகரகேதுவும், ''மனித மாமிசத்தை உண்ணும் இந்தக் காடர்கள் தம் ஆண்டவன் தமக்கு இரையாக மனிதர்களை அனுப்பி இருப்பதாக எண்ணி உற்சாகத்துடன் இருக்கிறார்கள். முதலில் நாம் இவர்களிடமிருந்து தப்ப வேண்டும்,'' எனக் கூறித் தன் வாளை உறுதியாகப் பற்றினான்.

அப்போது சித்தசாதகன், ''கேது! நீ சரியாகவே புரிந்து கொண்டிருக்கிறாய். நானும் ஜெயசீலனும் மன்னரின் புதல்வரையும் புதல்வியையும் கண்டுபிடித்து அவரிடம் ஒப்படைக்கும்வரை எங்கள் உயிர் போகாது. இந்தக் காடர்களிடம் முதலில் நல்ல விதமாகப் பேசிப் பார்க்கிறேன். நான் சொல்கிறபடி அவர்கள் நடந்தால் சரி. இல்லாவிட்டால் அவர்களை எல்லாம் அழித்துவிடுவேன்,'' என்றான்.

அப்போது பூசாரி சாமி வந்தவன் போலத் திடீரென்று ''ஆலமரத்து ஆண்டவா! பசி, ஒரே பசி!! ஆண்டவன் அனுப்பிய மனிதர்களே! வாருங்கள், ஆண்டவனின் ஆலயத்திற்குப் போவோம். அங்கு உங்களை ஆண்டவனுக்கு நிவேதனம் செய்துவிட்டு பிறகு நாங்கள் உண்போம்,'' என்று உரக்கக் கூவினான்.

சித்தசாதகனோ தன் ஈட்டியை உயர்த்தி ''அடே, காட்டுமிராண்டிகளே! எங்களை யாரும் உங்களிடம் அனுப்பவில்லை. எங்களில் சிலர் இங்கு எங்கோ இருக்கிறார்கள்.

அவர்களைத் தான் தேடிக் கொண்டிருக்கிறோம். எனவே நீங்கள் பேசாமல் திரும்பப் போய்விடுங்கள்,'' என்று நயமாகக் கூறினான்.

அப்போது காட்டான், ''அதெல்லாம் தெரியாது. எங்களுக்கு ஒரே பசி. உங்கள் மகேஸ்வரனை எங்கள் ஆண்டவன் ஆகாயத்திலிருந்து எங்களிடையே போட்டானே அதுபோல ஆண்டவன் உங்களையும் எங்களிடம் அனுப்பி இருக்கிறான்,'' என்றான் காட்டமாக.

சித்தசாதகனும், ''ஓகோ! உங்கள் ஆண்டவனா எங்களை அனுப்பினார்? இரு என்ன செய்கிறேன், பார்!'' என்று கூறித் தன் மனிதக் குரங்கை அவன் மீது ஏவினான். அது ஒரே பாய்ச்சலில் காட்டான் மீது விழுந்து அவனைத் தன் இரு கைகளால் உயரத் தூக்கியது.

பூசாரி 'ஆ, ஊ' என்று ஆர்ப்பாட்டம் செய்யவே, மகரகேதுவின் யானை அவனைத் துதிக்கையால் உயரத் தூக்கியது.

சித்தசாதகன் உடனே ''இன்னமும் ஏன் தாமதம்? ஜலவிருகா! உன் கதையின் சக்தியைக் காட்டு. இந்தக் காடர்களை அடித்துத் தூள்தூளாக்கு!'' என்று உரக்கக் கட்டளை இட்டான். ஜலவிருகனும், ''சாதகர் வாழ்க!'' எனக் கோஷம் போட்டவாறே தன் கல் கதையால் காடர்களை பலமாக அடிக்கலானான். பசியால் துடித்த காடர்கள் முதலில் ஜலவிருகனை எதிர்த்தபோதிலும் பின்னர் சோர்ந்து போனார்கள்.

சித்தசாதகனும் ஜலவிருகனைப் பார்த்து, ''பேஷ். அடி, விடாதே! செம்மையாய் கொடு. இதோ நானும் தாக்குகிறேன்,'' எனக் கூறி



ஈட்டியுடன் ஓடினான். காடர்கள் அடி வாங்கி அலறினார்கள். பலர் அங் கிருந்து ஓட்டம் பிடிக்க, எங்கும் குழப்பமும் சத்தமுமாக இருந்தது.

காட்டான் திகைத்துப் போனான். இதற்குமுன் அவன் வார்த்தைக்கு யாரும் எதிராகச் சொல்லியதும் இல்லை, தாக்கியதும் இல்லை. மேலும் ஆலமரத்து ஆண்டவன் தன்னைக் காப்பாற்றுவான் என நம்பினான். கிழப் பூசாரி மந்திரங் களை உச்சரித்து எதிரிகளை விரட்டி விடுவான் என்று எதிர்பார்த்தான். ஆனால் அவன் எண்ணியபடி எதுவும் நடக்கவில்லை.

அது மட்டுமா? மிகவும் பலம் பொருந்திய காடர்களின் தலைவ னான தானே தோற்று திக்குமுக்கா டும் நிலைக்கு வந்தாகி விட்டதே என்று எண்ணி 'அவன் இனி என்ன நடக்குமோ?' என்று பயப்படலா னான். தன் ஆட்கள் அலறிக் கொண்டு உயிர் தப்ப ஓடுவது கண்டு எதுவும் செய்ய முடியாமல் பற்களை 'நறநற' வென்று கடித்துக் கொண்டிருந்தான். இனி தப்ப வழியே இல்லை என்பது நன்கு தெரிந்துவிட்டது.

அப்போது சில குதிரை வீரர்கள் வேகமாக வந்து ''நிறுத்துங்கள் சண் டையை. இது ஹிரண்யபுர மன்னரின் கட்டளை,'' என்றார்கள். அதைக் கேட்ட சித்தசாதகனும் காடர்களும் ஒருவரோடு ஒருவர் சண்டை போடு வதை நிறுத்திவிட்டு அவர்களை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

மர்மக்குள மகேஸ்வரன் நடு நடுங்கியவாறே ''மகரகேது! இனி மேலும் நாம் இங்கே இருக்கக் கூடாது. நம் மர்மக் குளத்திற்குப் போய்விட வேண்டும்,'' என்று குரல் கொடுத்தான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் தன் குரலை உயர்த்தி ''அடே, மதி கெட்ட மகேஸ்வரா! நீ எங்கும் ஓடிப்போய் விட முடியாது. நீ மிகவும் பத்திரமாக நினைக்கும் இடமும் நீர் நிலையும் உனக்குத் தீங்கு விளைவிக்கப் போகிறது,'' என்று கூறித் தன் ஈட்டியை அவனது மார்பிற்கு நேராக நீட்டினான். *(தொடரும்)*





# மர்மக் குளம்

## 17

*(மர்மக்குள மகேஸ்வரன் மனித மாமிசம் உண்ணும் காடர்களிடம் அகப்பட்டு விட்டான். அப்போது சித்தசாதகன் வரவே மகரகேது தன் எஜமானனைக் காப்பாற்றும் முயற்சியில் ஜலவிருகனை காயப்படுத்தினான். காடர்கள் அங்கு வந்தவர்களை எல்லாம் பிடிக்க முயலவே, அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து காடர்களைத் தாக்கினார்கள். அச்சமயத்தில் சில குதிரைவீரர்கள் அங்கு வந்தார்கள். அப்போது -)*

சித்தசாதகன் தன் கூரான ஈட்டியை மர்மக்குள மகேஸ்வரனின் மார்பின் மீது வைத்து மிரட்டவே அவன் பயந்து ''இது அநியாயம். ஒரு சுத்த வீரன் தன் எதிரியைச் சிறை பிடித்த பின் அவனைக் கொல்ல மாட்டான்,'' என்றான்.

அதைக் கேட்டதும் சித்தசாதகன், ''ஆம். நான் சுத்த வீரன்தான் உன் னைக் கொல்லமாட்டேன்,'' எனக் கூறி நீட்டிய ஈட்டியைப் பின்னுக்கு இழுத்து நிறுத்தினான். அதைக் கண்ட மகேஸ்வரன் பலமாகச் சிரித்தான். அவன் மகரகேதுவைப் பார்த்து, ஏதோ சொல்லப் போகை யில் குதிரைப் படைத்தலைவன் அங்கு வந்து ' குதிரையிலிருந்து இறங்கினான்.

அவனைக் கண்ட சித்தசாதகன் கோபத்தோடு ''யார் நீ? இங்கு ஏன் வந்தாய்?'' என்று கேட்டான். படைத் தலைவன் சுற்றிலும் பார்த்தான்



மனிதக் குரங்கையும் நீர் யானை யையும் கண்டதும் அவனது கை கால்கள் நடுங்கின. மெதுவாக சமாளித்தவாறே அவன் ''நான் யார் என்பதை முன்பே கூறிவிட்டேனே தெரிந்து கொள்ளவில்லையா?'' என்று கேட்டான்.

சித்தசாதகனோ, ''நான் சரியாகக் கேட்கவில்லை. இந்த மகேஸ்வரன் தப்பி ஓடிவிடாமல் பார்த்துக் கொண்டே இருந்துவிட்டேன். இப் போது இன்னொரு முறை சொல். நீ யார்? நீ ஏறி வந்தது குதிரையா அல்லது கோவேறு கழுதையா?'' என்று பரிகாசமாகக் கேட்டான்.

குதிரைப் படைத் தலைவன் அந் தக் கேள்விக்கு விடை அளிக்காமல் சாதகனை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு ஏதோ நினைவிற்கு வந்தது போல ''ஓ! நீயா? சித்த சாதகனா? கொலைக் குற்றத்திற்காக ஹிரண்ய புர மன்னன் முன் உன்னை இழுத்துப் போய் நிறுத்தினார்களே. அது இப்போது என் நினைவிற்கு வந்து விட்டது. ஆமாம், உன்னோடு வந்த ஜெயசீலன் எங்கே?'' என்று கேட்டான்.

சாதகனும், ''ஜெயசீலன் அன்னப் பறவை ரதத்தில் அமர்ந்து ஆகாயத் தில் பறந்து கொண்டிருக்கிறான். நீ சற்று நகர்ந்து நில். இந்த மகேஸ் வரனை ஒரு கை பார்க்க வேண்டும்,'' என்றான். அவனோ, ''இங்கே யாரும் யாரையும் தாக்கக் கூடாது. வீரர்களே! இவர்களைச் சூழ்ந்து நில்லுங்கள்,'' என்று கூவினான். வீரர்களும் அவர் களைச் சுற்றி நின்றார்கள்.

அப்போது சித்தசாதகன், ''பேஷ், பேஷ்! மனித மாமிசத்தை உண்ண இங்கு காடர்கள் துடித்துக் கொண்டு இருக்கிறார்கள். இப்போது நீ உன் வீரர்களை அவர்களுக்கு இரை யாக்கப் போகிறாய்,'' என்றான்.

படைத்தலைவனோ, ''இப்படி யெல்லாம் சொல்லி என்னை பய முறுத்த முடியாது. எங்கள் மன்னர் இங்கே முகாமிட்டிருக்கிறார். உங் களை எல்லாம் இழுத்துக் கொண்டு அவர் முன் நிறுத்தப் போகிறேன். உம், கிளம்புங்கள். இது என் கட் டளை,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன், ''நான் என் மகாகாலரின் கட்டளை யைத் தவிர வேறு யார் கட்டளைக் கும் கட்டுப்பட மாட்டேன். தெரிந் ததா?'' என்று கோபமாகக் கூறினான்.

குதிரைப் படைத் தலைவனிடம்



தன் எஜமானன் கோபமாகப் பேசுவதைக் கேட்ட ஜல விருகன் சட்டெனத் தன் கல்கதையைத் தூக்கிக் கொண்டு காலைத் தூக்கி பலமாய்த் தரையை மிதித்து கர்ஜித்தான். மனிதக் குரங்கும் அதனோடு சேர்ந்து பலமாக உறுமியது. திடீரென ஏற்பட்ட இந்த சத்தத்தால் ஒரு குதிரை வீரனின் குதிரை மிரண்டு தன் முன்னங்கால்களை உயர்த்தவே அதன் மீதிருந்த வீரன் தரை மீது உருண்டு விழுந்தான். குதிரை அங்கிருந்து ஓடியே போய்விட்டது.

இதைக் கண்ட குதிரைப் படைத் தலைவன் பணிவாக, ''ஐயா! நீங்கள் வந்து எங்கள் மன்னரைக் கண்டு பேசுங்கள். இது கட்டளை அல்ல. என் வேண்டுகோள்,'' என்றான்.

சித்தசாதகனும், ''அப்படி வா வழிக்கு, சரி, மன்னரைக் காண வருகிறேன். இந்தக் காடர்களையும், மர்மக்குள மகேஸ்வரனையும் நாம் இழுத்துப்போய் மன்னன் முன் நிறுத்த வேண்டும்,'' என்று கூறியவாறே சுற்றிலும் பார்த்தான்.

அப்போது மகேஸ்வரனும் மகரகேதுவும் அங்கே இல்லாததைக் கண்டு அவன் ''ஆஹா! அந்தப் பயல்கள் தப்பி ஓடிவிட்டார்களா?'' என்று கூவினான்.

அப்போது காடர்கள் பலமாகச் சிரித்தார்கள். அவர்களது தலைவனான காட்டானும் கிழப் பூசாரியும் வந்து சித்தசாதகன் முன் நின்று ''நீ இந்தக் குதிரைப் படைத் தலைவனிடம் வாக்குவாதம் செய்து கொண்டிருக்கையில் அவர்கள் இருவரும் ஓடிவிட்டார்கள். ஆனால் ஆலமர ஆண்டவன் அவர்களை எங்களுக்கு இரையாகும்படி அனுப்பியதால் அவர்களைப்பிடித்து வரும்படி என் ஆட்களை அனுப்பி இருக்கிறேன்,'' என்றான்.

சாதகனோ, ''அவர்கள் தப்பி ஓடுவதை என்னிடம் ஏன் கூறவில்லை? அவர்கள் அகப்படும் வரை நான் உங்களை விடமாட்டேன். ஜல விருகா! இவர்களைப் பிடித்துக் கட்டி ஒரு குதிரை மீது போடு,'' என்றான்.

ஜலவிருகன் சட்டெனத் தாவி காட்டானையும் கிழப்பூசாரியையும் பிடித்துக் கட்டி ஒரு குதிரைமீது ஏற்றினான். அப்போது சித்தசாதகன் குதிரைப் படைத்தலைவனிடம், ''சரி, நீ முன்னால் போ. நான் உன் பின்னாலேயே இதோ வருகிறேன்,'' என்றான்.



பிறகு அவன் காடர்களைப் பார்த்து, ''அடே, மூட ஜடங்களே! உங்கள் ஆட்கள் மகேஸ்வரனுக்கும் மகரகேதுவுக்கும் ஏதாவது கெடுதல் செய்தால் உங்கள் தலைவன் காட்டானையும் கிழப் பூசாரியையும் உயிரோடு பார்க்கமாட்டீர்கள்!'' என்று எச்சரித்தான்.

காடர்கள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்து தம் தலைவன் காட்டானையும் கிழப் பூசாரியையும் பார்த்தனர். அவர்களோ, ''ஆலமரத்து ஆண்டவனே! இந்த அக்கிரமக்காரர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்,'' என்றுக் கதறினார்கள்.

சித்தசாதகன் அவர்களை லட்சியம் செய்யாமல் தன் வாகனமாகிய மனிதக்குரங்கின் மீது ஏறிக் கொண்டான். குதிரைப் படைத்தலைவன் வழிகாட்ட அவன் மன்னனைப் பார்க்கச் சென்றான்.

இதே சமயம் காட்டின் வேறொரு பகுதியில் ஜெயசீலன் தன் நண்பர்களுடன் ஆகாயத்தில் அன்னப் பறவை ரதத்தில் போய்க் கொண்டிருந்தான். அப்போது அவர்கள் ஓரிடத்தில் ஒரு புலி ஒரு இளம் பெண்ணைத் துரத்திக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அவள் புதர்களிடையே புலிக்கு அகப்படாமல் ஓடி ஒரு மரத்தை அடைந்து அதன் கிளைகளைப் பற்றிக்கொண்டு உயரத்தில் போய்விட முயன்று கொண்டிருந்தாள். ஜெயசீலனுடன் ரதத்தில் சென்று கொண்டிருந்த தேவசர்மன் தான் முதலில் அதைப் பார்த்தான்.

அவன் ஜெயசீலனிடம், ''ஜெயசீலா! புலியிடமிருந்து தப்பி ஓடும் அந்த இளம்பெண்ணை உற்றுப்பார். மர்மக்குள மகேஸ்வரன் கவர்ந்து சென்ற கனகாட்ச மன்னனின் மகள் காஞ்சனமாலைதான் அவள். தெரிந்ததா?'' என்றான்.

ஜெயசீலனும், ''ஆமாம். இப்போது இந்த ரதத்தைத் தரையில் இறக்க வேண்டும். தேரோட்டி! உடனே ரதத்தைக் கீழே இறக்கு!'' என்றான்.

தேரோட்டியும் கீழே பார்த்துவிட்டு ''ஐயா இங்கே இறக்க முடியாது. சற்றுத் தள்ளி திறந்த வெளி உள்ளது அங்கு கொண்டுபோய் இறக்குகிறேன்,'' என்றான்.

ஜெயசீலன் கோபத்தோடு, ''நீ ரதத்தை அங்கே கொண்டுபோய் இறக்குவதற்குள் புலி அந்தப்

பெண்ணைக் கொன்றுவிடும். நீ இங்கே ரதத்தைக் கொஞ்சம் தாழ்த்திப் பறக்கவிடு. நான் இதிலிருந்து ஏதாவது ஒருமரத்தின் மீது குதித்து அந்தப் பெண்ணைக் காப்பாற்றுகிறேன்'' என்று இரைந்தான்.

தேரோட்டியும் ஜெயசீலன் கூறியபடியே ரதத்தைத் தாழ்வாகப் பறக்கவிட்டான். ஜெயசீலனும் அந்த ரதத்திலிருந்து குதித்து ஒரு மரத்தின் கிளையைப் பற்றினான். ஆனால் அது வலுவான கிளையாக இல்லாததால் ஒடிந்துபோயிற்று. அதனால் ஜெயசீலன் நாற்பதடி கீழே போய் விழுந்தான். நல்லவேளையாக அவன் விழுந்த இடத்தில் புல் அடர்ந்து முளைத்திருந்ததால் அவனுக்கு காயம் எதுவும் ஏற்படவில்லை.

கிளை ஒடிந்து ஏதோ சத்தம் ஏற்பட்டதைக் கேட்டு அரசகுமாரியைத் துரத்திக் கொண்டிருந்த புலி கீழே விழுந்த ஜெயசீலனைப் பார்த்தது. அந்த சொற்ப நேரத்தில் காஞ்சனமாலை தான் ஏற முயன்ற மரத்தின் ஒரு கிளையைப் பற்றி உயரே போகலானாள்.

அப்போது புலி திரும்பி அவள் மீது பாயவே, ஜெயசீலன் சட்டென அதன் மீது விழுந்து அதன் பின்னங்கால்களைப் பிடித்து இழுத்து தூரத்தில் தள்ளினான்.

காஞ்சனமாலை ஒருவழியாக மரத்தின் உயரமான இடத்திற்குப் போய்விட்டாள். அவள் ஜெயசீலனைப் பார்த்து, ''ஐயா! தக்க சமயத்தில் வந்து என்னைக் காப்



பாற்றினீர்கள். மிக்க நன்றி!'' என்றாள். ஜெயசீலன் அப்போதுதான் காஞ்சனமாலையை நன்கு பார்த்தான். அரசகுமாரியின் அழகு அவனை பிரமிக்க வைத்தது. ஆமாம். இவள் மட்டும் இருக்கிறாள். இவளது அண்ணன் காஞ்சன வர்மன் என்ன ஆனான்?

ஜெயசீலன் அவளைப் பார்த்து, ''நீ காஞ்சனமாலை என்றும் இந்த நாட்டு அரசகுமாரி என்றும் நான் அறிவேன். உன் அண்ணன் காஞ்சன வர்மன் எங்கே இருக்கிறான்? அன்னப் பறவை ரதத்திலிருந்து கீழே விழுந்த நீ எப்படி உயிர் தப்பி வந்தாய்?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட காஞ்சனமாலை ஆச்சரியம் அடைந்தாள். இந்த இளைஞனுக்குத் தன் பெயரும் தன்னைப் பற்றிய விவரமும் எப்படித் தெரிந்தது என்று யோசித்து

வியப்புடன் அவனைப் பார்த்தாள்.

ஜெயசீலனும், ''சரி, நடந்தது என்ன?'' என்று கேட்க, அவளும் ''அன்னப்பறவை ரதத்திலிருந்து என்னோடு மர்மக்குள மகேஸ்வரனும் அவனது தேரோட்டியும் கீழே விழுந்தார்கள்.. அவர்களும் இப்பகுதியில் எங்கோதான் இருக்க வேண்டும். என் அண்ணன் மர்மக்குள மாளிகைக்குள்தான் இருக்கிறான்,'' என்றாள்.

அப்போது ஜெயசீலன், ''அந்த மர்மக்குள மகேஸ்வரனைப் பற்றி ஓரளவு எனக்குத் தெரியும். அவனது ஆட்களில் சிலரையும் நான் பார்த்திருக்கிறேன். உன் அண்ணனை மர்மக்குள மாளிகையிலிருந்து விடுவிக்க வேண்டும். அங்கு போவதற்கான வழியை நீ அறிந்துதான் இருப்பாய். முதலில் இப்பகுதியிலுள்ள என் நண்பன் சித்தசாதகனைக் கண்டு பேச வேண்டும்,'' என்றான்.

இதற்குள் தூரமாய் விழுந்த புலி உறுமிக்கொண்டு பாய்ந்து வரவே ஜெயசீலன், ''இதை இப்படியே விட்டுவிட்டால் ஆபத்து. இதைக் கொல்ல வேண்டும்,'' எனக் கூறி அதனை எதிர்த்தான்.

இதனை மறைந்திருந்து மர்மக்குள மகேஸ்வரனும் மகரகேதுவும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மகேஸ்வரன் மகரகேதுவிடம், ''இந்த ஜெயசீலனைப் பிடிக்க இதுவே சரியான சமயம். நீ தாமரைத் தண்டுகளாலான கயிறை அவன் கழுத்திற்குக் குறி வைத்து வீசி அவனை இழு!'' என்றான்.

மகரகேதுவோ, ''இந்த ஜெயசீலன் சாமானியப்பட்டவன் அல்ல. அதனால் இவனைப் பகைத்துக் கொள்ள வேண்டாம்,'' என்று கெஞ்சும் குரலில் கூறினான்.

மகேஸ்வரனோ, ''நீ பயப்படுகிறாயா? கயிறை இங்கே கொடு! நான் அதை வீசி இழுக்கிறேன்,'' எனக் கூறினான்.

அவனிடமிருந்து கயிறை வாங்கிக் கொண்டு ஜெயசீலனின் கழுத்தில் போய் விழ அதை எறிந்தான்.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

## 18

*(சித்தசாதகன் காட்டானையும் பூசாரியையும் பிடித்து இழுத்துக் கொண்டு ஹிரண்யபுர மன்னன் கனகாட்சனைக் காணச் சென்றான். அன்ன ரதத்தில் சென்று கொண்டிருந்த ஜெயசீலன் ஓரிடத்தில் ஒரு புலி அரசகுமாரி காஞ்சனமாலையைத் துரத்திக் கொண்டிருப்பதைக் கண்டான். ரதத்தை இறக்கி அவன் அவளைக் காப்பாற்றினான். அப்போது மறைந்திருந்த மர்மக்குள மகேஸ்வரன் ஜெயசீலன் கழுத்தில் விழும்படி சுருக்குக் கயிறைப் போட்டான். அப்போது—)*

தன் கழுத்தில் ஒரு கயிறு விழுந்தது கண்டு ஜெயசீலன் ஆச்சரியப் பட்டான். யார் அதை வீசியது என்று அவன் திரும்பிப் பார்த்தான். அப்போது அவன் நீர் யானை மீதிருந்த மகேஸ்வரனையும் குதிரை மீதிருந்த மகரகேதுவையும் கண்டான்.

ஜெயசீலன் தன் கழுத்தை இறுக்கும் கயிறைப் பிடித்துக் கொண்டு அதைத் தன் வாளால் நறுக்கப் போனான். ஆனால் சட்டென நிறுத்தி மகேஸ்வரனை உற்றுப் பார்த்தான். மகேஸ்வரனோ தான் பிடித்திருந்த கயிறை ஆட்டியவாறே ''நீதான் வீரப்பிரதாப ஜெயசீலனா? உம். ஏன் கயிறை அறுக்கவில்லை?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் ''ஓஹோ! நீதான் மர்மக்குள மகேஸ்வரனா? ஆமாம். என் கழுத்தைச் சுற்றி வீசிய கயிறை நீ ஏன் இழுக்கவில்லை?'' என்று கேட்டான்.



மகேஸ்வரனோ ''நான் ஒரு மன்னன். ஒரு சாதாரண மனிதன் கேட்கும் கேள்விக்கு நான் பதில் கூற மாட்டேன்,'' என்றான் கர்வத்தோடு. இப்படி இருவரும் கோபமாகப் பேசியதைக் கண்டு காஞ்சனமாலா ''மாமா! நீங்கள் அன்ன ரதத்திலிருந்து கீழே விழுந்தும் உயிர் தப்பியது மகிழ்ச்சியை அளிக்கிறது. ஆனால் இந்த ஜெயசீலனுக்கு எந்தக் கெடு தலும் செய்ய வேண்டாம். ஏனென் றால் இவர்தாம் என்னை ஒரு கொடிய புலியிடமிருந்து காப்பாற்றினார்,'' என்றாள்.

மகேஸ்வரனும், ''காஞ்சனா! அதை நானே நேரில் பார்த்தேன். இவனைக் கொல்லமாட்டேன். ஆனால் பிடித்து மர்மக் குளத்திற்குக் கொண்டு போகப் போகிறேன்,'' என்றான். அப்போது காஞ்சனமாலா ஜெயசீலனிடம், ''மாமா சொன்ன தைக் கேட்டீர்களா? இனி பயப் படாமல் அவருடன் செல்லுங்கள்!'' என்றாள்.

ஜெயசீலனோ, ''இதோ பார் காஞ் சனா! இவன் என்னைப் பிடித்து கொண்டு போக போகிறானாம்! எப்படி என்னைப் பிடிப்பான் என்று பார்க்கிறேன்,'' என்று கோபமாகக் கூறினான்.

அதைக் கேட்ட மகேஸ்வரன் ''எப்படி என்றா கேட்கிறாய்? இதோ பார்!'' என்று கூறித்தான் பிடித்திருந்த கயிறை பலமாக இழுக்கலானான். ஆனால் காஞ்சனமாலா ஜெயசீலன் அருகே ஓடிப்போய் அவன் கழுத்தில் விழுந்த கயிறை இழுத்து ''நீங்கள் மட்டும் இவரைக் கொன்றால் நானும் இதே கயிற்றால் தூக்குப் போட்டுக் கொண்டுவிடுவேன்,'' என்று கூறினாள்.

காஞ்சனமாலா ஜெயசீலனுக்குப் பரிந்து பேசுவது கண்டு மகேஸ்வரன் ஆச்சரியப்பட்டான். பிறகு அவன் ''ஜெயசீலா! நீ நான் மாட்டிய கயிறை அறுத்துத் தப்ப முயலலாம். ஆனால் இந்த நீர் யானையிடமிருந்து தப்ப முடியாது. இது உன்னை ஒரே மிதியில் மிதித்துக் கொன்றுவிடும்,'' என்று உறுமினான்.

ஜெயசீலனும் ஏளனமாகச் சிரித்த வாறே ''அப்படியா? அதையும்தான் பார்க்கலாமே!'' என்றான். அப்போது மகரகேது குறுக்கிட்டு ''ஜெயசீலா! இவர் சொல்கிறபடி நட. அதில் ஒரு ரகசியம் உள்ளது. மேலும் நீ மர்மக் குளத்திற்குப் போக வேண்டும் என்று

துடித்துக் கொண்டிருந்தாயே. அவ சரப்படாதே!'' என்றான்.

ஜெயசீலனும் யோசிக்கலானான். தான் இளவரசன் காஞ்சனவர்மனையும் இளவரசி காஞ்சனமாலையையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வருவதாக மன்னன் கனகாட்சனிடம் கூறிவிட்டு வந்தது அவன் நினைவிற்கு வந்தது.

ஆனால் இப்போது காஞ்சனமாலை மட்டுமே கிடைத்திருக்கிறாள். காஞ்சனவர்மனைப் பற்றித் தெரியவில்லையே. இந்தக் காஞ்சனமாலா மகேஸ்வரனை மாமா என்று கூறுகிறாளே! இதென்ன உறவு! இவ்வாறு அவன் யோசிக்கலானான். பிறகு அவன் மகேஸ்வரனிடம், ''சரி. நீ பலமிக்கவன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

அதற்கு மகேஸ்வரனும் சிரித்துக் கொண்டே ''இதென்ன திடீர் மன மாற்றம்? மனதிற்குள் ஏதாவது திட்டம் தீட்டுகிறாயா?'' என்று கேட்டான். ஜெயசீலனோ, ''பயப் படாதே. என்னிடம் ஒளிவுமறைவு என்பதே கிடையாது. எதையும் வெளிப்படையாகவே செய்பவன் நான். இதை மகரகேதுவே அறிவான். வேண்டுமானால் அவனையே கேள்!'' என்றான்.

அப்போது மகரகேது மகேஸ்வரனிடம் ''நான் முன்பே இவர் சாமானியப்பட்டவர் அல்ல என்று கூறி இருக்கிறேனே!'' எனக் கூறினான்.



மகேஸ்வரனும் ''சரி. இவனோடு மர்மக் குளத்திற்குப் போவோம். அங்கே போனதும் உண்மை தெரிந்து விடும். இதற்கு முன் ஜலராட்சஸன் ஒருவனைப் பார்த்தோமே. மற்ற ஜல ராட்சஸர்கள் எங்காவது மறைந்து கொண்டிருக்கிறார்களா? அவர்கள் எப்போது என்ன செய்வார்கள் என்று தெரியவில்லையே!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

அப்போது காஞ்சனமாலா ஜெயசீலனின் கழுத்தில் விழுந்திருந்த கயிறை எடுத்து எறிந்தவாறே ''இது என் மாமா தங்கள் கழுத்தில் போட்ட சுருக்குக் கயிறு அல்ல என்றும் மலர் மாலை என்றும் எண்ணிக் கொள்ளுங்கள்,'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.

இப்படிக் காஞ்சனமாலாவுக்கும் ஜெயசீலனுக்கும் நெருக்கம் ஏற்படுவதைக் கண்ட மகேஸ்வரன்



ஆச்சரியப்பட்டு ''இது என்ன கூத்து இப்படி ஒரு திருப்பமா! சரி இருக்கட்டும். இந்த ஜெயசீலனின் உதவியோடு என் எதிரிகளான ஜலராட்சஸர்களை ஒழித்து விடுகிறேன்,'' என எண்ணிக் கொண்டான்.

அப்போது மகரகேது, ''பிரபுவே! இனி தங்கள் கட்டளை என்ன?'' என்று கேட்கவே, மகேஸ்வரனும் ''எல்லோருமே மர்மக் குளத்திற்குச் செல்வோம். நீ முன்னாலே போ. நாங்கள் உன்னைப் பின்தொடர்கிறோம்,'' என்றான்.

மகரகேதுவும், ''ஜெயசீலனை நடத்தியா கொண்டு செல்வது?'' என்று கேட்டான். மகேஸ்வரனும் ''காஞ்சனமாலா நீர்யானை மீது அமர்ந்து கொண்டு என்னுடன் வருவாள். நீ ஜெயசீலனை உன் குதிரையின் மீது ஏற்றிக்கொண்டு செல்!'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் மகரகேதுவிடம் ''கேது! காஞ்சனமாலா மர்மக்குளத்திற்கு மீண்டும் செல்வதற்கு நான் சம்மதிக்கமாட்டேன். இவளையும் இவளது சகோதரனையும் கண்டுபிடித்துக் கொண்டு வருவதாகக் கனகாட்ச மன்னரிடம் கூறிவிட்டு வந்திருக்கிறேன். இப்போது இவள் கிடைத்திருக்கிறாள். முதலில் இவளைக் கனகாட்சரிடம் ஒப்படைத்துவிட்டு வரவேண்டும். பிறகு காஞ்சனவர்மனைத் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு செல்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட மகேஸ்வரனும் காஞ்சனமாலாவும் ஜெயசீலனை முறைத்துப் பார்த்தார்கள். காஞ்சனமாலா ஜெயசீலனிடம், ''நானும் என் அண்ணனும் கடத்திச் செல்லப்பட்டது என்னவோ உண்மைதான். ஆனால் நாங்கள் யாரிடமும் சிறைப்பட்டு இருக்கவில்லை. முடிந்தால் நீயே என் அண்ணனைத் தேடிக் கண்டுபிடி!'' எனப் 'படபட'வென்று கூறிவிட்டு நீர்யானையின் மீது ஏறி உட்கார்ந்துவிட்டாள்.

அப்போது ஜெயசீலன் மகரகேதுவிடம் ''இந்த மர்மக்குளம், அரசகுமாரன், அரசகுமாரி ஆகியோர் கடத்தப்பட்டது என்பதெல்லாம் பொய்யா?'' என்று வியப்படைந்து கேட்டான். மகரகேதுவும் ''முதலில் இங்கே வா. என் குதிரையில் ஏறிக்கொள். பிறகு எல்லாவற்றையும் விவரமாகக் கூறுகிறேன்,'' என்றான்.

ஜெயசீலனும் அவன் கூறியபடி



நடக்கவே, மகரகேது தன் குதிரையை ஓட்டினான். அவன் பின்னால் மகேஸ்வரனும் காஞ்சனமாலாவும் அமர்ந்திருந்த நீர் யானை சென்றது. அப்போது ஜெயசீலனுக்கு சித்த சாதகனைப் பற்றிய நினைவு வந்தது. அவன் இப்போது எங்கே இருக் கிறானோ, என்ன செய்கிறானோ என்று யோசிக்கத் தொடங்கினான்.

இச்சமயத்தில் குதிரை வீரர்கள் படைத்தலைவன் வீரசிம்மன் சித்த சாதகனை கனகாட்ச மன்னனின் முன் கொண்டுபோய் நிறுத்தினான். மன்னன் அவனிடம் பரிவுடன் பேசி ''ஜெயசீலன் என் மகனையும் மக ளையும் தேடிக் கண்டுபிடிப்பதாகக் கூறி உன்னைக் கூட்டிக் கொண்டு தானே சென்றான்? இதுநாள் வரை நீயும் அவ்விருவரும் வராததால் நானே என் மகளையும் மகனையும் தேடிக் கண்டுபிடிப்பது எனத் தீர் மானித்தேன். அதனால் ஆட்சியை அமைச்சர்களிடம் ஒப்படைத்து விட்டு இந்த முயற்சியில் இறங்கி விட்டேன்,'' என்றான்.

சித்தசாதகனும் ''அரசே! அரச குமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்றவர்கள் மர்மக் குளத் தில் வாழும் விசித்திர மனிதர்கள். அவர்களால் நீரிலும் நிலத்திலும் நம்மைப் போல வசிக்க முடியும். அவர்களில் சிலரைக் கூடப் பிடித் தோம். அவர்களது மன்னனே முத லில் மனித மாமிசம் உண்ணும் காடர் களிடம் சிக்கினான். பிறகு என்னிடம் அகப்பட்டுக் கொண்டான். ஆனால் எப்படியோ தப்பி ஓடிவிட்டான். அதே மர்மக் குளத்தின் வேறொரு பகுதியில் ஜலராட்சஸர்கள் இருக் கிறார்கள். அவர்களில் ஒருவன் இப் போது என் அடிமையாக இருக்கிறான் அவனைக் கொண்டு நாம் மர்மக் குளத்தை அடைந்துவிடலாம்,'' என்றான்.

அப்போதுதான் கல்கதையைத் தன் தோளின் மீது வைத்துக் கொண்டு சித்தசாதகனின் பின்னால் நின்ற ஜல ராட்சஸனை கனகாட்சன் கவனித் தான். அப்போது மன்னன் ''சரி, ஜெய சீலன் எங்கே?'' என்று கேட்கவே, சித்தசாதகனும் ''அவன் அன்னப் பட்சி ரதத்தில் அமர்ந்து அரசகுமார னையும் அரசகுமாரியையும் தேடிக் கொண்டிருக்கிறான்,'' என்றான்.

அதைக் கேட்ட மன்னனும் மற்ற வர்களும் அன்னப்பறவை ரதமா என்று கூவி ஆச்சரியப்பட்டார்கள்.

''அன்னப் பறவை ரதம், ஜல ராட்சஸன், மனிதக் குரங்கு, மனித மாமிசம் உண்ணும் காடர்கள், மரண மரம் என்றெல்லாம் இக்காட்டில் இருப்பதைக் கண்டால் நீங்கள் இன்னமும் ஆச்சரியப்படுவீர்கள்,'' என்றான் சித்தசாதகன்.

அப்போது ஒரு மரக்கிளை ஆடி 'சரசர'வென்ற ஒலியை உண்டாக்கவே சித்தசாதகன் அங்கு பார்த்தான். இரு காடர்கள் ஓடி வந்து ''ஐயா! எம் தலைவர் காட்டானையும் பூசாரியையும் நீங்கள் விடுதலை செய்தால் உங்களிடம் ஒரு ரகசியத்தை சொல்வோம்,'' என்றார்கள்.

அதைக் கேட்ட சித்தசாதகன் பலமாகச் சிரித்தவாறே ''நீங்கள் எனக்கு ஒரு ரகசியத்தைச் சொல்லப் போகிறீர்கள். கேட்க வேடிக்கையாக இருக்கிறது. சரி, நான் அவர்களை அழைத்துவரச் சொல்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகனும் ''என்னைப் போல மனிதர்களா? ஓர் ஆணும் ஒரு பெண்ணுமா? அவர்கள் போகும் வழியைக் காட்டவோ அல்லது சொல்லவோ முடியுமா?'' என்று படபடவென்று கேட்டான்.

சித்தசாதகன் ஜலராட்சஸனை அனுப்பி அவர்களைக் கொண்டுவரச் சொன்னான். ஜலராட்சஸனும் அவர்கள் இருவரையும் தூக்கி வந்து சித்தசாதகனின் முன் நிறுத்தினான். சித்தசாதகன் காடர்களிடம் ''முதலில் ரகசியத்தைச் சொல்லுங்கள்,'' என்றான்.

அவர்களும், ''சற்றுமுன் உங்களைப் போல் ஒரு மனிதனையும், பெண் ஒருத்தியையும் கண்டோம். அந்த மனிதன் முதலைத் தலையனுடன் ஒரு குதிரையில் போய்க் கொண்டிருந்தான். அப்பெண்ணோ நீர்யானை மீது ஒரு விசித்திர மனிதனுடன் அமர்ந்து போய்க் கொண்டிருந்தாள். இதற்குள் அன்னப் பறவை ரதத்திலிருந்து சிலர் குதித்து கத்திக்கொண்டு வரவே, நாங்கள் அவர்களிடம் அகப்படக் கூடாது என்று இங்கே ஓடி வந்துவிட்டோம்,'' என்றார்கள். *(தொடரும்)*






# மர்மக் குளம்

## 19

*(மர்மக்குள மகேஸ்வரன் சுருக்குக் கயிறை வீசி ஜெயசீலன் கழுத்தில் மாட்டினான். அதை அறுத்து விடுவித்துக் கொள்ள முயன்ற அவனிடம் மகேஸ்வரன் நயமாகப் பேசி காஞ்சனமாலையையும் ஜெயசீலனையும் மர்மக்குளத்திற்கு அழைத்துச் சென்றான். இந்த விஷயம் காடர்கள் வாயிலாக சித்தசாதகனுக்கு கனகாட்ச மன்னனிடம் பேசிக் கொண்டிருக்கும்போது தெரிந்தது. அதன் பிறகு)*

காடர்கள் தாம் கண்ட நீர்யானை, அதன் மீதிருந்தவன், முதலை முகத்தவன், ஓர் இளைஞன், இளம்பெண் ஒருத்தி ஆகியோரைப் பற்றி விவரமாகக் கூறினார்கள். அதைக் கொண்டு அந்த இளைஞன் ஜெயசீலனே என்று உறுதியாக நம்பினான். ஆனால் இளம்பெண் யாரென்று அவனால் ஊகிக்க முடியவில்லை.

சித்தசாதகன் கனகாட்சனிடம் ''அரசே! நான் இப்போதே போய் என் நண்பன் ஜெயசீலனை விடுவித்துக் கொண்டு வரவேண்டும். அவனை யாரோ பிடித்து இழுத்துக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறார்கள். ஆனால் மாவீரனான ஜெயசீலன் எப்படி அவர்களிடம் அகப்பட்டான்? இது ஆச்சரியமாக இருக்கிறதே'' என்றான்.

அப்போது மன்னன் ''சாதகா! ஜெயசீலனைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை. நானும் நீயும் சில



வீரர்களுடன் செல்லலாம். சட்டென அவர்களைப் பிடித்து மர்மக் குளம் எங்கே இருக்கிறது என்று தெரிந்து கொள்ளவேண்டும். உன்னோடு உள்ள இந்த ஜலராட்ஸனிடமிருந்து ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா?'' என்று கேட்டான்.

சித்தசாதகன் ஜலராட்சஸனிடம், ''அடே, நீ முன்பு மர்மக்குளவாசியாக இருந்தாயே. இப்போது அதைப் பற்றி விவரமாகச் சொல்!'' என்று அதட்டினான். அப்போது ஜல ராட்சஸன் கல்லாலான தன் கதையை சித்தசாதகனின் காலடியில் வைத்து ''பிரபுவே! நான் முன்பே சொல்லி இருக்கிறேனே மர்மக் குளம் இருக்கும் இடத்தை நான் சொன்னால் என் தலைவெடிக்கும். நான் இறந்துவிடுவேன். இது எங்களுக்கு இடப்பட்ட சாபம்'' என்றான்.

இதைக் கேட்ட சித்தசாதகன் பலமாகச் சிரித்து ''சாபமா? சும்மா ஏதோ கதை விடுகிறாயா? இதை நான் நம்பிவிடுவேன் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்டான்.

ஜல ராட்சஸனோ ''இது பொய்யல்ல. உண்மையே. நான் மட்டும் அதைச் சொன்னால் இறந்தே போய்விடுவேன். ஒரு வேளை வாய்திறந்து வார்த்தைகளால் கூறாமல் கைகளால் ஜாடை காட்டித் தெரியப்படுத்தினால் ஒருவேளை நான் சாபத்திலிருந்து தப்பலாம்'' என்றான்.

சித்தசாதகனோ ''பயப்படாதே. நான் மகாகாலனின் பக்தன். என்னால் உன்னை எப்படிப்பட்ட சாபத்திலிருந்தும் காப்பாற்றிவிட முடியும். தைரியமாகச் சொல்!'' என்றான்.

ஜலராட்சஸனோ, ''நான் தரையில் வரைபடமாக வரைந்து தெரிவிக்கிறேன். வாய் வார்த்தைகளால் சொல்ல விரும்பவில்லை,'' என்று கூறி அங்கு கீழே கிடந்த ஒரு உலர்ந்த குச்சியை எடுத்துக் கொண்டான். அதைக் கொண்டு அவன் சில கோடுகளைக் கிழிக்கலானான்.

அப்போது அவன், ''பிரபுவே! என் தலை சுற்றுகிறது. தலைக்குள் ஏதோ அசைவுகள் ஏற்படுகின்றன. வலி தாங்க முடியவில்லை. என்ன செய்வேன்?'' என்று அலறினான்.

அதைக் கண்ட கனகாட்சகன் ''சாதகா! பாவம், இவன் உண்மையிலேயே இறந்துவிடுவான் போல் இருக்கிறதே!'' என்றான். சித்தசாதகனோ, ''அதெல்லாம் இல்லை. இவன் பயத்தால் உளறுகிறான். என்

மகாகாலனின் சக்தி இருக்கும்போது இவனை எந்த சாபமும் எதுவும் செய்துவிட முடியாது'' என்று மார் தட்டிக் கூறினான்.

அப்போது ஜலராட்சன் தான் கிழித்த கோடுகளைப் பற்றி விவர மாகக் கூறி முடிக்கவே, அவன் அலறியவாறே விழுந்துவிட்டான்.

சித்தசாதகன் உடனே அவன் மூக்கினருகே கை வைத்துப் பார்த்து விட்டு கனகாட்சனிடம் ''அரசே! பயத்தால் இவன் நினைவை இழந்து விழுந்துவிட்டான். இவன் உயிரோடு தான் இருக்கிறான்,'' எனக் கூறிவிட்டு அருகில் நின்ற காடனிடம் ''நீ போய் தண்ணீர் கொண்டு வா!'' என்றான்.

அந்தக் காடன் அசையாமல் நின் றான். அவனது தலைவன் காட்டான் பூசாரியைப் பார்க்கவே, அவனும் கனகாட்சனின் முன் வந்து வணங்கி ''அரசே! நாங்கள் காட்டில் வாழ் பவர்கள். எங்கள் நடத்தை பண்பாடு அற்றதாக இருக்கலாம். அதற்காக எங்களை மன்னித்துவிடுங்கள். இந்த ஜல ராட்சஸனைத் தூக்கி எங்கே யாவது எறிந்துவிட்டு இந்த சித்த சாதகனை எங்களிடம் விட்டுவிடுங் கள். இவனை எங்கள் ஆலமரத்து ஆண்டவன் எங்களுக்கு ஆகாரமாக அனுப்பியுள்ளார். எனவே இவனை பலியிட்டு அந்த நாங்கள் மாமிசத்தை உண்கிறோம்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் ஆத் திரம் கொண்டு ஓடி அந்தப் பூசாரியின் குடுமியைப் பிடித்து உலுக்கி, ''அடே! மனித மாமிசமா உங்களுக்கு




வேண்டும்? முதலில் உன்னைக் கொன்று இந்தக் காடர்களின் முன் னால் வீசி எறிகிறேன். அவர்கள் உன் மாமிசத்தைத் தின்று மகிழட்டும்,'' என்று கூறி அவனைக் கொல்லத் தன் சூலத்தை உயர்த்தினான்.

அப்போது நீர் யானையின் மீது அமர்ந்து சர்ப்பநகன் வேகமாக அங்கு வந்து சேர்ந்தான். அவன் உரத்த குர லில் ''சாதகா! அவசரப்படாதே! சூலத்தைத் தாழ்த்து. இப்போது நாம் மர்மக்குளத்தில் வாழும் ஜல ராட் சஸர்களுடன் போராடவேண்டிய நிலையில் இருக்கிறோம். எனவே அவர்கள் நம்முடன் சமாதானமாகப் போகப் போகிறார்களா அல்லது போர் புரியப் போகிறார்களா என்று தீர்மானிக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் சூலத்தைத் தாழ்த்தி சர்ப்பநகனை



உற்றுப் பார்த்தான். இந்த சொற்ப நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு காடர்களும் பூசாரியும் தப்பி ஓடி விட்டார்கள்.

சர்ப்பநகன் தன் குதிரை மீதிருந்து கீழே இறங்கி கீழே விழுந்து கிடக்கும் ஜல ராட்சஸனைப் பார்த்தான். பிறகு சித்தசாதகனிடம், ''இவன் உனக்கு அடங்கி பணிபுரிந்து கொண்டு இருந் தானே. இவன் இறந்தா போய்விட் டான்?'' என்று கேட்டான்.

சித்தசாதகனும், ''இவன் என் நம் பிக்கைக்குப் பாத்திரமான பணி யாளே. ஆனால் இவன் மர்மக்குள மகேஸ்வரனின் சக்திக்கு பயப்படு கிறான். அவன் ஏதோ சாபம் கொடுத் திருக்கிறானாம். அதை நினைத்து நடுங்குகிறான். அந்த மர்மக் குளம் எங்கே இருகிறது என்று கேட்டேன் அதை வாய் வார்த்தைகளால் சொல் லக் கூடாது எனக் கூறி இவன் தரையில் கோடுகளைக் கிழித்து விவரித்தான். அப்போது தான் திடீ ரென மயக்கம் போட்டு விழுந்து விட்டான்,'' என்றான்.

இதற்குள் கனகாட்சனின் வீரர்கள் தண்ணீர் கொண்டு வந்து ஜல ராட் சஸன் மீது கொட்டினார்கள். குளிர்ந்த நீர் உடலில் பட்டதும் ஜல ராட்சஸன் கண் விழித்து மிரளமிரளப் பார்த் தான். பிறகு அவன் ''நான் எங்கே இருக்கிறேன்? பூலோகத்திலா அல் லது சொர்க்கலோகத்திலா?'' என்று கேட்டான்.

சித்தசாதகனோ, ''ஜலராட்சஸா! எழுந்திரு. உன்னை சாபத்திலிருந்து விடுவித்துவிட்டேன். இனிமேல் நீ பயப்படவே வேண்டாம்,'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் ஜல ராட்சஸனும் எழுந்து உட்கார்ந்தான்.

அப்போது சர்ப்பநகன், ''எங்கள் வைத்திய தேவர் அடிக்கடி எங்கள் மன்னர் கனகாட்சர் என்று கூறுவார். அவர் தாங்கள்தாமா? வணக்கம்!'' என்று கூறி கைகூப்பி வணங்கினான்.

கனகாட்ச மன்னன் அவனது வாகனமான நீர் யானையும் அவனது விசித்திரத் தோற்றத்தையும் கொஞ்ச நேரம்வரை கண்கொட்டாமல் பார்த் தான். பிறகு சர்ப்பநகனிடம், ''யார் அந்த வைத்தியதேவர்? என் நாட்டுக் குடி மகனா?'' என்று கேட்டான்.

அதற்கு சர்ப்பநகன், ''அது எனக் குத் தெரியாது. அவரே இன்னும் சற்று நேரத்தில் வந்து விடுவார். ஏனெனில் அவர் என். பின்னாலேயே வந்து கொண்டிருந்தார்,'' என்றான்.

கனகாட்சனும், ''சாதகா! உனக்கு அந்த வைத்தியதேவரைப் பற்றி ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டான். சித்தசாதகனும் ''ஆம். தெரியும். ஆனால் இந்த ஜலராட்சஸன்களுக்கும் மர்மக்குள வாசிகளுக்கும் அவரும் ஜெயசீலனைப் போல அமராவதி நாட்டுக் குடிமகன்தான் என்பது தெரியாது'' என்றான்.

அதுகேட்டு கனகாட்சன் ''ஜெயசீலன் அமராவதிவாசியா? அதன் மன்னன் ருத்திரசேனன் பகைவன் ஆயிற்றே. நான் இப்போது பல பிரச்சினைகளில் சிக்கித் தவிக்கிறேன் என்பதை அறிந்து அவன் என் நாட்டின் மீது படை எடுத்துவர ஏற்பாடுகளைச் செய்து வருகிறான் என்று ஒற்றர்கள் வாயிலாகத் தெரிய வந்துள்ளது,'' என்றான்.

அப்போது சித்தசாதகன், ''அரசே! ஜெயசீலன் அமராவதிவாசி என்பதால் அவன் பகைவனின் கையாள் என்று எண்ணிவிடாதீர்கள். அவன் நேர்மையானவன். சொன்ன சொல் தவறாதவன். அரசகுமாரனையும் அரசகுமாரியையும் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தங்களிடம் ஒப்படைப்பதாக அவன் வாக்களித்தான். அதை நிறைவேற்றவே முயன்று கொண்டிருக்கிறான். உங்கள் நாட்டுக்குடி மகனாகிய நான் அவனது நேர்மைக்கும் நல்ல எண்ணத்திற்கும் உத்தரவாதம் அளிக்கிறேன்,'' என்றான்.

இச்சமயத்தில் சற்று தூரத்தில் கூடி இருந்த காடர்களிடையே சலசலப்பு



ஏற்பட்டது. அதற்கு என்ன காரணம் என்று சித்தசாதகன் அந்தக் கூட்டத்தை நோக்கித் தன் பார்வையைச் செலுத்தினான்.

அப்போது காட்டானும் பூசாரியும் ஓடிவந்து ''ஐயா! உங்களைப் போன்ற பத்து பன்னிரெண்டு மனிதர்கள் ஜலராட்சஸர்களுடன் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் மனிதர்களுக்கு உதவப் போகலாமா?'' என்று கேட்டார்கள்.

அப்போது சர்ப்பநகன், ''சாதகா! அந்த மனிதர்கள் வைத்தியதேவரும், என் தம்பியும், அன்னரதத்தை ஓட்டுபவனும் ஆவர்'' எனக் கூறியவாறே கிளம்பினான்.

சித்தசாதகனும் தன் சூலத்தை உயர்த்திக் கொண்டு ''ஜெய் மகாகாலா!'' என்று கோஷமிட்டவாறே சர்ப்பநகனுடன் புறப்பட்டான். காடர்களும், ''ஆலமர ஆண்டவனே!

எங்களுக்கு நிறைய மாமிசம் கிடைக் கச் செய்!'' என்று வேண்டியவாறே அவர்களுடன் கிளம்பிவிட்டார்கள்.

அவர்கள் சற்றுதூரம் சென்ற சர்ப் பஸ்வரன் தன் வாளால் ஜல ராட் சஸர்களைத் தாக்கி சிலரை காயப் படுத்தி வீழ்த்திக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஆனால் மற்றவர்கள் வைத்தியதேவனையும், தேரோட்டி யையும் அங்கஹீனனான மங்கள வர்மனையும் சிறைப்பிடிக்க முயன்று கொண்டிருந்தார்கள்.

வைத்தியதேவர் எனப்படும் தேவ சர்மா ரத்தினங்கள் பதித்த தன் கைத் தடியால் அவர்களைத் தடுத்து ''அடே! இதிலுள்ள முள் உங்களை குத்தினால் உங்கள் உடலில் விஷம் ஏறும். நீங்கள் மடிந்துவிடுவீர்கள்!'' என்று எச்சரித்தான்.

அப்போது சர்ப்பநகனும் சித்த சாதகனும் அங்கு வந்து சேர்ந்தார்கள். காடர்களும் கனகாட்சனின் வீரர் களும் கூச்சல் போட்டுக் கொண்டு வரவே ஜலராட்சஸர்கள் பயந்து பின் வாங்கலானார்கள். அவர்களது தலை வனோ, ''நில்லுங்கள் ஓடாதீர்கள்!'' என்று கூறியவாறே தேவசர்மாவைத் தாக்கினான். அவனை தேவசர்மா தன் கைத்தடியால் தொடவே அதன் முள் அத்தலைவனின் உடலில் குத்தியது. மறுநிமிடம் அவன் அலறி விழுந்து இறந்து போனான்.

அதைக் கண்ட ஜல ராட்சஸர்கள் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். சர்ப்ப நகன் குதிரை மீதிருந்து இறங்கி தேவசர்மனின் அருகே போய் ''இந்த ஜல ராட்சஸர்கள் போய் மர்மக்குள மகேஸ்வரனையும் காஞ்சனமாலை யையும் ஜெயசீலனையும் தாக்குவார் களே, அவர்களை எச்சரிக்க வேண் டாமா? என்று கேட்டான். தேவசர்மா வும் ''அந்த வேலையை நீயும் உன் தம்பியும், அன்னரதத்தை ஓட்டுபவ னும் செய்யுங்கள்,'' என்றான்.

சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும் நீர் யானை மீது அமர்ந்து வேகவேக மாகச் சென்றார்கள். காடர்களோ பயந்து ஓடும் ஜலராட்சஸர்களைத் துரத்திக் கொண்டு சென்றார்கள்.

*(தொடரும்)*





# மர்மக் குளம்

## 20

*(ஜெயசீலனை மர்மக்குள மகேஸ்வரன் பிடித்துக் கொண்டு போய்க் கொண்டிருப்பது சித்தசாதகனுக்குத் தெரிந்தது. இதே சமயம் ஜல ராட்சஸர்களைப் பற்றிய தகவலும் வந்தது. கனகாட்ச மன்னனும் சித்தசாதகனும் ஜெயசீலனைக் காப்பாற்றுவதற்காகப் போய்க் கொண்டிருக்கையில், ஜல ராட்சஸர்கள் தேவ சர்மாவுடனும், மற்றும் சிலருடனும் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஜல ராட்சஸர்கள் காடர்கள் வேறு தம்மைத் தாக்குவது கண்டு பயந்து ஓடலானார்கள். அப்போது -)*

**கா**டர்கள் ஜல ராட்சஸர்களைப் பிடிப்பதில் தான் முனைந்திருந் தார்கள். அவர்கள் தாம் எங்கு சென்று கொண்டிருக்கிறோம் என்பதை கவனிக்கவில்லை. ஆனால் ஜல ராட்சஸர்களில் இருவர் உயரமான ஒரு மரத்தின் கிளைகளில் உட்கார்ந்து கொண்டு அங்கு நடப்பதை எல்லாம் கவனித்துக் கொண்டே இருந்தார்கள்.

அவ்விருவரில் ஒருவன் ''பார்த் தாயா? நம் அரசருக்கு எதிரியின் பலம் எவ்வளவு என்று தெரிய வில்லை. முன்பு நாம் மர்மக்குள மகேஸ்வரனைப் போரில் தோற் கடித்துவிட்டோம். ஆனால் இப் போது அவனுக்கு உதவ வேறு யார்யாரோ வந்திருக்கிறார்கள்,'' என்றான்.

ஆனால் மரத்தின் மீதிருந்த மற்றவனோ அவன் சொன்னதைக்



மர்மக் குளத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்களே! அவர்களது நடவடிக்கைகளைக் கவனித்து நம் அரசரிடம் தெரிவிக்க வேண்டாமா?'' என்று கேட்டான்.

அதற்குமற்றவன் ''ஆமாம். நீ சொல்வது சரியே. அதை நீ செய். அவர்கள் மர்மக் குளத்தை நோக்கித் தான் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. நான் அந்த மரக்கால் மனிதனைப் பிடித்துத் தூக்கிக் கொண்டுபோய் நம் அரசர் முன் போடுகிறேன்,'' என்று கூறி விட்டு மரத்திலிருந்து இறங்கி மங்கள வர்மனைப் பிடிக்க அங்கிருந்து சென்றான்.

மங்களவர்மனுக்கோ தன்னை ஒருவன் பிடிக்க வந்து கொண்டிருக் கிறான் என்பது தெரியவில்லை. தன் முன்னால் மர்மக் குளத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் மற்ற வர்களின் பின்னால் அவன் போய்க் கொண்டிருந்தான். அவன் தானும் ஜல ராட்சஸர்களுடன் போர் புரிந்து தன் திறமையைக் காட்ட வேண்டும் என்று துடியாய்த் துடித்தான்.

அவன் தான் போரிடப் போவது பற்றி யோசித்துக் கொண்டே நடக் கையில் தன் பின்னால் ஏதோ சத்தம் வருவதை உணர்ந்து திரும்பிப் பார்த்தான்.

அப்போது ஒரு ஜல ராட்சஸன் தன்னைப் பிடிக்கப் பாய்ந்து வருவது கண்டு.சட்டென ஒருபுறமாக விலகி னான். அவன் மீது பாய முயன்ற ஜல ராட்சஸன் நிலை தடுமாறி குப்புற

கேளாதவன் போல வேறு எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்த்தது ஜல ராட்சஸர்களைத் துரத்திப் பிடிக்கக் காடர்கள் முயன்று கொண்டிருந்ததைத் தான். எல்லோ ருக்கும் பின்னால் மரக்காலுடன் நொண்டிக் கொண்டு வந்து கொண் டிருந்த இரணியபுரி சேனாதிபதி யின் மகனான மங்களவர்மனைப் பார்த்தான்.

அவன் தன் தோழனிடம் ''அதோ பார்! எல்லோருக்கும் பின்னால் ஒரு வன் நொண்டிக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறான். அவனைப் பிடித்துக் கொண்டு போய் நம் அரசர்முன் நிறுத்தினால் என்ன? இவனிடமிருந்து வந்திருக்கும் எதிரி யின் பலம் எவ்வளவு என்பதைத் தெரிந்து கொள்ளலாமே!'' என்றான்.

அதற்கு அவனது தோழன் ''அது சரி. அவனுக்கு முன்னால் சிலர்

விழுந்தான். அவனது கையிலிருந்த கல் கதாயுதம் சற்று தூரத்தில் போய் விழுந்தது. அவன் தட்டுத் தடுமாறி எழுந்து நிற்க முயன்றான். ஆனால் அவனது கால் சுளுக்கிக் கொண்ட தால் ''அட, கடவுளே!'' என்று உரக்கக் கூவினான்.

மங்களவர்மன் தனக்கு வரவிருந்த ஆபத்து விலகிப் போனது குறித்து மகிழ்ந்து போனான். அவன் ஜல ராட்சஸனின் பக்கம் போய் ''அடே! நீ என்னைப் பிடிக்க முயன்று சரியான தண்டனை தான் பெற்றாய். இப் போது உனக்கு யாராவது சிகிச்சை அளித்தாலே உன் கால் சரியாகும். இதற்குமுன் உங்களுக்கும் மர்மக்குள மகேஸ்வரனுக்கும் போர் நடந்ததே, அதில் வெற்றி யாருக்கு? இதற்கு பதில் சொன்னால் பச்சிலைகளைப் பறித்து வந்து அவற்றின் சாற்றைத் தடவி உன் கால் சுளுக்கைப் போக்கு வேன்,'' என்றான்.

இதற்குள் அந்த ஜல ராட்சஸனின் தோழன் தன் கூட்டாளியின் நிலை மையைக் கண்டு தன் கல் கதா யுதத்தைச் சுழற்றியவாறே ஓடோடி வந்தான். அப்போது மங்களவர்மன் தன் கைத்தடியின் பிடியைத் திருகி அதனுள்ளிருந்த வாளை எடுத்தான்.

அதைக் கால் சுளுக்கி நிற்கும் ஜல ராட்சஸனின் கழுத்தின் மேல் வைத்து தன்னை நோக்கி ஓடிவரும் ஜல ராட்சஸனிடம் ''அடே, நான் மூன்று எண்ணுவதற்குள் நீ உன் கல் கதாயுதத்தைத் தூர எறியாவிட்டால் உன் தோழனின் தலை துண்டிக்கப்



பட்டுத் தரையில் உருளும். பிறகு உனக்கும் அதே கதி தான்,'' என்று கூறினான்.

அதைக் கேட்ட ஜல ராட்சஸன் மௌனமாக இருக்கவே, மங்கள வர்மன் ''சரி. ஒன்று, இரண்டு...'' என்று எண்ண ஆரம்பித்து மூன்று என்று சொல்வதற்குள் ஜல ராட்சஸன் தன் கல் கதையைத் தூக்கி எறிந்து விட்டான். அப்போது மங்களவர்மன் ''பேஷ். பேஷ். நீ உன் நண்பனைக் காப்பாற்றிவிட்டாய். என்னுடன் வா! பச்சிலைகளைப் பறித்து சிகிச்சை அளிக்கிறேன்,'' எனக் கூறி அவனை அழைத்துக் கொண்டு அங்கும்இங்கு மாக அலைந்து சில பச்சிலைகளைப் பறித்தான்.

அவற்றை இரு உள்ளங்கைகளி லும் வைத்துக் கசக்கி சாறு பிழிந்து அதை அவன் ஜல ராட்சஸனின் காலில் தடவினான். பிறகு அந்தப்



பச்சிலைச் சக்கையை அவனது காலில் கட்ட வைத்தான். அதன் பிறகு அவன் அந்த ஜல ராட்சஸனிடம் ''நீ இன்னமும் பன்னிரெண்டு மணி நேரத்திற்கு நடக்கவே கூடாது,'' என்றான்.

அதைக் கேட்டு ஜல ராட்சஸர்கள் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு சிணுங்கினார்கள். அவர்கள் வேவு பார்ப்பவர்கள் என்றும் அவர் களிடம் இருந்து எதையும் கேட்டு தெரிந்து கொள்ள முடியாது என்றும் அவன் தெரிந்து கொண்டான். அதனால் அவர்களை அப்படியே விட்டுவிட்டு அவன் அங்கிருந்து மர்மக் குளத்தை நோக்கிச் சென்றான்.

அவன் சிரமப்பட்டு நடந்து சென்று கொண்டிருந்தபோது ஒரு மேட்டிலிருந்து 'மங்களவர்மா!' என்று கூப்பிடும் குரல் கேட்டது. அவன் நிமிர்ந்து பார்த்தான்.

அங்கு ஒரு மரத்தில் காட்டுக் கொடிகளால் கட்டப்பட்ட மனிதன் ஒருவனைப் பார்த்தான். அவன் மர்மக்குள மகேஸ்வரனின் அன்னப் பறவை ரதத்தை ஓட்டுபவன். அவ னைக் கண்ட மங்களவர்மன் ''நீயா? இங்கே எப்படி வந்து அகப்பட்டுக் கொண்டாய்?'' என்று கேட்டான்.

அத்தேரோட்டியும் ''வர்மா! கொஞ்சம் மெதுவாகப் பேசு. எமன் போல ஒருவனும், பயங்கர வானர மும் சில வீரர்களும் வந்து கொண்டு இருக்கிறார்கள். வருபவர்கள் நம் எதிரிகளான ஜெயசீலனும், சித்த சாதகனும், அவர்களுடைய ஆட் களும் என்றே நினைக்கிறேன்,'' என்றான்.

அப்போது மங்களவர்மன் ''இப் போது அவர்கள் நம் எதிரிகள் அல்ல. இவர்களோடு நம் வைத்தியதேவன் வேறு இருப்பதால் இவர்களை நம் நண்பர்களாகக் கூடக் கருதலாம். வந்து கொண்டிருக்கும் அவர்களைக் கை தட்டிக் கூப்பிட்டு இங்கே வரச் சொல்!'' என்றான். வைத்திய தேவன் வருகிறான் என்று கேட்டதும் தேரோட்டியின் மனம் பூரித்தது.

தேரோட்டியும் உரத்த குரலில் ''ஐயா! என்னைக் காப்பாற்றுங்கள். கொடிகளில் சிக்கி விடுபட முடி யாமல் தத்தளிக்கிறேன்,'' என்று கூவினான். முதலில் அந்தக் கத்தலை மனிதக் குரங்குதான் கேட்டது. உடனே அது நின்று உயரப் பார்த்து விட்டுத் தன் மீது உட்கார்ந்திருந்த சித்தசாதகனுக்கு சைகை புரிந்தது.

அதைக் கேட்ட தேவசர்மாவும் ''இது மகேஸ்வரனின் தேரோட்டி யின் குரல் போல இருக்கிறதே!'' என்றான். அப்போது சித்தசாதகன் ''அப்படியா! ரொம்ப வசதியாகி விட்டது. அவனைப் பிடித்து இரண்டு 'தட்டு' தட்டினால் மர்மக் குளம் பற்றிய விவரங்களைக் கக்கிவிடு வான்,'' என்றான்.

மனிதக் குரங்கு வேகமாக ஓடி தேரோட்டி இருந்த மரத்தின் கீழ் போய் நின்றது. சித்தசாதகனைக் கண்ட மங்களவர்மன் ''சாதகா! நம் ஆள் ஒருவன் மரத்தின் மீது சிக்கிக் கொண்டிருக்கிறான். நீ அதில் ஏறி அவனை விடுவிக்க வேண்டும்,'' என்றான்.

சாதகனோ, ''எனக்கு ஒரே குழப்ப மாக இருக்கிறதே! அரசகுமாரனை யும் அரசகுமாரியையும் கடத்திச் சென்ற மகேஸ்வரன் இப்போது ஜெயசீலனையும் பிடித்துக் கொண்டு போகிறானே! இப்போது மர்மக் குளம் அவன் வசம் இருக்கிறதா அல்லது ஜல ராட்சஸர்கள் அதைக் கைப்பற்றிவிட்டார்களா என்று தெரியவில்லையே!'' என்றான். அப் போது கனகாட்ச மன்னன் தன் வீரர்களோடு அங்கு வந்தான்.

தேரோட்டியோ, ''ஐயோ! என் னைக் காப்பாற்றுங்கள். ஒரு மலைப் பாம்பு என்னை நோக்கி வந்து கொண்டிருக்கிறது,'' என அலறி னான். உடனே சித்தசாதகன் மனிதக் குரங்கை ஏவவே, அது மின்னல் வேகத்தில் போய் தேரோட்டியை ஒரு கையால் அலாக்காகத் தூக்கியது.

இதற்குள் மலைப் பாம்பு சீறிக் கொண்டு வரவே, அதை மற்ற கையால் பிடித்து அழுத்தியது. இச்



சமயத்தில் ஜல ராட்சஸ கும்பல் ஒன்று கோஷம் போட்டுக் கொண்டு அங்கு வந்தது.

இப்படியாக அங்கு நிலைமை பதட்டமாக இருந்தது. ஒருபுறம் மர்மக்குள மகேஸ்வரன் ஜெயசீல னையும் மற்றும் ஓரிருவரையும் பிடித்துக் கொண்டுபோய்க் கொண் டிருந்தான். ஜல ராட்சஸர்கள் வேறு ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தார்கள். சித்தசாதகனும் வானரமும் அன்ன ரதத் தேரோட்டியை விடுவிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள்.

மங்களவர்மன் ஜெயசீலன் காட்டில்தான் இருக்கும் பகுதிக்கு வந்து மர்மக்குள மகேஸ்வரனிடம் அகப்பட்டதைத் தெரிந்து கொண்டு விட்டான். அவனைப் பற்றி மகேஸ் வரனிடம் கூறவும் ஜல ராட்சஸ னிடம் கூறவும் ஜல ராட்சஸர்கள் மர்மக் குளத்தைத் தாக்கிப்போர் புரிந்தால் அதில் தன் போர்த் திற னைக் காட்டவும் துடித்தான்.

சித்தசாகனோ மனிதக் குரங்கின் உதவியால் அன்னரதத் தேரோட் டியை விடுவித்தப்பின் அவன் வழி காட்ட, மர்மக்குளத்தை அடைந்து ஜெயசீலனுக்கு உறுதுணையாக இருக்க வேண்டும் என்று எண்ணி னான். இப்படியாக எல்லோருமே மர்மக் குளத்திற்குச் சென்று கொண்டு இருந்தார்கள்.

ஜல ராட்சஸர்களுடன் நீர் யானை யின் மீது அமர்ந்து வந்தவன் தன் கல் கதையைச் சுழற்றியவாறே ''இங்கிருந்து எதிரிகளில் ஒருவன் கூடத் தப்பிவிடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று கட்டளை இட்டான்.

அந்தக் கட்டளையை யாராலும் நிறைவேற்ற முடியாதே. ஏனெனில் அவர்களுக்கு எதிர்பாராத விதத்தில் ஆபத்து வந்தே விட்டது.

ஆனால் மரத்தின் மீது ஏறி மலைப் பாம்பை எடுத்து வைத்திருந்த மனி தக் குரங்கு அதைத் தூக்கி எறிந்து விட்டு நீர் யானையின் மீது அமர்ந் திருந்தவனைப் பார்த்ததும் உடனே அவன் மீது குதித்தது.

*(அடுத்த இதழில் முடிவுறும்)*





# மர்மக் குளம்

## 21

*(மர்மக் குளத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த மங்களவர்மன். ஒரு மரத்தின் கிளைகளில் அகப்பட்டுக் கொண்ட அன்ன ரதத்தை ஓட்டுபவனைக் கண்டான். அவனது அலறலைக் கேட்டு சித்தசாதகனும் கனகாட்சனும் அங்கு வந்தார்கள். அப்போது ஜல ராட்சஸர்களை நீர் யானை மீதிருந்த ஒருவன் துரத்திக் கொண்டு வரவே மனிதக் குரங்கு அவன் மீது பாய்ந்தது. அப்போது - )*

ஜலராட்சஸர்கள் தம் தலை வனுக்கு ஆபத்து வந்தது கண்டு கும்பலாக ஓடி மனிதக் குரங்கைத் தம் கல்கதை களால் தாக்கலானார்கள்.

அதுகண்டு சித்தசாதகன் தன் ஈட்டி யைச் சுழற்றிக் கொண்டு அவர்களைத் தாக்கலானான். இவ்வாறு அங்கே ஒரு பயங்கரப் போர் நிகழ்ந்தது. பல கதை களின் அடிகளைத் தாங்க முடியாமல் மனிதக் குரங்கு சுருண்டு விழுந்து விட்டது.

அப்போது தன்னைச் சூழ்ந்து நின்ற வீரர்களைப் பார்த்து ஜல ராட்சஸர்க்களின் தலைவன் ''ஏய் மானிடப் பதர்களே! நான் யார் தெரியுமா? மர்மக்குளத்தை ஆளும் அதிபதி. நான் இப்போது அங்கே போய் பத்மமுகியை மட்டும் ஒன்றும் செய்யாமல் மற்றவர்களை எல்லாம் என் கல்கதையாலேயே அடித்துக் கொல்லப் போகிறேன்,'' என்றான்.



அப்போது கீழே விழுந்த மனிதக் குரங்கு தன் கைகளையும் கால்களையும் ஆட்டிக் கொண்டு எழுந்திருக்க முயன்றது.

அதைக் கண்ட சித்தசாதகன் அதற்கு உதவ நினைத்துத் தன் கட்டுப்பாட்டில் இருந்த ஜல ராட்சஸனிடம் ''நீ இப்போது என்ன செய்ய வேண்டும் தெரியுமா?'' என்று கேட்டான். சித்தசாதகனும் ''அதோ பார்! என் வாகனமான மனிதக் குரங்கு எழுந்து நிற்க முயல்கிறது. நீபோய் அதைத் தூக்கி நிறுத்து!'' என்றான்.

ஜலராட்சஸனும் மனிதக் குரங்கின் பக்கம் போய் அதைத் தூக்கத் தன் கைகளை நீட்டினான். மனிதக் குரங்கோ சட்டென எழுந்து அந்த ஜல ராட்சஸனை உயரத் தூக்கி எறிந்தது. அவன் கனகாட்ச மன்னனின் வீரர்களிடையே விழுந்தான்.

அப்போது மனிதக் குரங்கு பாய்ந்து அந்த ஜல ராட்சஸனைத் தாக்கப் போயிற்று. அப்போது சித்த சாதகன் தன் ஈட்டியை ஆட்டி ''குரங்கே! அவன் என் பணியாள் என்பதை மறந்துவிட்டாயா? என் பணியாட்கள் தமக்குள் சண்டை போட்டுக் கொள்ளக் கூடாது,'' என்று கூறி அதனைக் கட்டுப்படுத்தினான்.

அப்போது ஜல ராட்சஸர்களின் தலைவன் ''என்னிடம் அகப்பட்டுக் கொள்ள இருந்தவன் தப்பி ஓடி விட்டானே அவன் மர்மக் குளத்திற்கு விரைவில் போய்ச் சேர்ந்து விடுவானோ?'' என்று படபடப்புடன் கேட்டான்.

அப்போது வைத்தியதேவன் என்று போற்றப்படும் தேவசர்மா, ''சாதகா! கவலைப்படாதே. மர்மக் குளம் அருகில் தான் உள்ளது. எல்லோரும் என்னுடன் வாருங்கள். அங்கு போய்ச் சேர்வோம்!'' என்றான். சித்தசாதகனும் ''சரி, எல்லோரும் போகலாம்!'' எனவே, தேவசர்மா வழிகாட்ட மற்றவர்கள் அவன் பின்னாலேயே சென்றார்கள்.

தேவசர்மாவின் பக்கத்தில் நடந்து சென்று கொண்டிருந்த மன்னன் கனகராட்சஸன் அவனிடம் ''சர்மா! அந்த ஜல ராட்சஸன் பத்மமுகி என்ற பெண்ணை மட்டும் விட்டு விட்டு மற்றவர்களைத் தாக்கி ஒழிப்பதாகக் கூறினானே. அதற்கு ஏதாவது காரணம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

தேவசர்மாவும் ''அரசே! பத்மமுகி மர்மக்குள மகேஸ்வரனின் மகள்.

அந்த ஜலராட்சஸத் தலைவன் அவளைத் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்புகிறான். இதுதான் விஷயம்,'' என்றான்.

அதுகேட்டு கனகாட்சன், ''அப்படியா! இதைப் போல என் மகள் காஞ்சனமாலையை யாராவது ஒரு ஜல ராட்சஸனுக்கு மணம் செய்து வைத்துவிடுவானே!'' என்று கவலைப்பட்டான். அப்போது தேவ சர்மா,'' நீங்கள் கவலைப்படாதீர்கள். அப்படி எல்லாம் ஒன்றும் நடந்து விடாது. நமக்கு முன் ஜெயசீலனும் மகேஸ்வரனும் மர்மக் குளத்திற்குப் போயிருக்கிறார்கள்,'' என்றான்.

தேவசர்மா கனகாட்சனுக்கு இவ்வாறு ஆறுதல் கூறிக் கொண்டிருக்கும் அதே சமயத்தில் ஜெயசீலன் மற்றவர்களுடன் மர்மக் குளத்திற்குப் போய்ச சேர்ந்துவிட்டான். அது பரந்து கிடக்கும் பெரிய ஏரி. அதன் கரையில் காடுகளும் சுற்றிலும் மலைகளும் இருந்தன.

அப்போது ஜெயசீலன் மகேஸ்வரனிடம் ''இதுதான் நீ வசிக்கும் மர்மக் குளமா? காஞ்சனமாலை வேண்டிக் கொண்டதால் நீ என் கழுத்தில் மாட்டிய சுருக்குக் கயிறை அகற்றினாய். அதனால் நாம் இருவரும் நண்பர்கள் தானே?'' என்று கேட்டான்.

மகேஸ்வரனும் தயங்கி காஞ்சன மாலையைப் பார்த்தவாறே எதுவும் கூறாமல் இருந்தான். அப்போது காஞ்சன மாலையே ''ஜெயசீலா! இங்கு விரோதிகள் என்று யாரும் இல்லை. உன் வாள் மந்திர சக்தி



பெற்றுள்ளது என்று மகரகேது தெரிவித்திருக்கிறான். அதைக் கொண்டு நீ ஜலராட்சஸர்களைத் தாக்கி கதறக் கதற விரட்டி அவர் களிடம் சிறைப் பட்டிருக்கும் என் அண்ணன் காஞ்சன வர்மனையும் என் மாமாவான இந்த மகேஸ்வரனின் மகள் பத்மமுகியையும் அவர்களிட மிருந்து சிறை மீட்டு வா!'' என்றாள்.

ஜெயசீலனும் ''நான் ஒருவனே தனியாக நின்று ஜலராட்சஸர்களுடன் போரிட வேண்டுமா? ஆகா. அதையே செய்து காஞ்சனவர்மனை மீட்டு உன் தந்தையிடம் ஒப்படைக்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த மகேஸ்வரன் மகிழ்ந்து போய் ஜெயசீலனின் கைகளைப் பிடித்துக் கொண்டு ''ஜெயசீலா! நான் காஞ்சன வர்மனையும் காஞ்சனமாலையையும் கடத்திக் கொண்டு வந்ததை



ஒரு குற்றமாக எண்ணாதே! நான் அரசகுமாரனை மட்டும் தூக்கிக் கொண்டு வரும்படி மகரகேதுவிடம் சொல்லி இருந்தேன். ஆனால் அவன் தான் காஞ்சனமாலையயும் சேர்த்துத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டான்,'' என்றான்.

ஜெயசீலனும், ''அப்படியா? ஆனால் அரசகுமாரனை மட்டும் ஏன் கொண்டு வரச் சொன்னாய்?'' என்று கேட்டான்.

மகேஸ்வரனும், ''என் ஒரே மகளான பத்மமுகியை அவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டு நான் இமயத்திற்குப் போய் தவம் செய்வது என்று தீர்மானித்தேன். ஆனால் காஞ்சனவர்மன் பத்மமுகியை மணம் செய்து கொள்ள மறுத்துவிட்டான்,'' என்றான்.

ஜெயசீலன் காஞ்சனமாலையைப் பார்க்கவே, அவள் வேகமாகக் குளத்திற்குப் போய் ஒரு தாமரைத் தண்டைப் பறித்து எடுத்து வந்து அதிலிருந்து சொட்டும் சாறை ஜெயசீலனின் நெற்றியில் திகலமாக வைத்தாள்.

பிறகு அவள் ''மாமா சொன்னது முழுக்கமுழுக்க உண்மையே. மற்றொரு ரகசியத்தைச் சொல்கிறேன். இந்தக் குளத்தின் தாமரைத் தண்டின் சாறு ஒருவர் மீது பட்டால் அவரால் நீரிலும் நிலத்தில் உள்ளது போல இருக்க முடியும்,'' என்றாள்.

ஜெயசீலனும் ''அப்படியா! அதைப் பரீட்சித்துப் பார்க்கிறேன்,'' எனக் கூறிக் கொண்டே மர்மக் குளத்தில் குதித்துவிட்டான். அவன் சட்டெனக் கரைக்கு வருவான் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவன் சற்று நேரமான பிறகே ஒருவனை இழுத்துக் கொண்டு கரைக்கு வந்தான்.

அவனைப் பார்த்ததும் மகரகேது ஆச்சரியத்துடன் ''இவன் ஜல ராட்சஸர் தலைவனின் மகனல்லவா? இவன் சரியான சமயத்தில் தான் நம்மிடம் அகப்பட்டிருக்கிறான். இவனை வைத்துக் கொண்டு நம் எதிரிகளை மிரட்டிப் பணிய வைக்கலாம்,'' என்றான்.

மகேஸ்வரன் வாளை உருவி அவனது மார்பிற்கு நேராக நீட்டி ''எங்கே உன் தந்தை இருக்கிறான்? சொல், உடனே!'' என மிரட்டினான்.

அவனும் ''அவர் யாரோ ஒரு மன்னனையும் ஒரு காபாலிகனையும் கொன்றுவிட்டு வருவதாகக் கூறி

விட்டு காட்டிற்குள் சென்றார். அதைச் செய்துவிட்டு அவர் இங்கு வந்து உங்களை எல்லாம் கண்ட துண்டமாக வெட்டிப் போடப் போகிறார். ஜாக்கிரதை!'' என்று அரற்றினான். அதே சமயம் ஜல ராட்சஸர்தலைவன் தன் ஆட்களோடு வந்து ''மரியாதையாகச் சரணடை யுங்கள்'' என்று உரத்த குரலில் கூவினான்.

ஜெயசீலன் மகரகேதுவிற்கு ஜாடை காட்ட அவன் தன் நீர் யானையை ஏவினான். அது தனது துதிக்கையால் ஜலராட்சஸர் தலை வனின் மகனை உயரத் தூக்கியது. அதைக் கண்ட ஜலராட்சஸர் தலைவன் ''ஐயோ! என் மகனை ஒன்றும் செய்யாதீர்கள். நாங்கள் சரணடைந்துவிடுகிறோம்!'' என்று கதறினான்.

ஜெயசீலன் சித்தசாதகன் வந்த தைக் கண்டு மகிழ்ந்தான். காஞ்சன மாலை தன் தந்தையைக் கண்டு ''தந்தையே! நீங்கள் மாமா மகேஸ் வரனைப் பழிவாங்க வேண்டாம். அவர் தம் செய்கைக்காக வருந்து கிறார்,'' என்றாள்.

அப்போது ஜெயசீலன் ''அவரது மகள் மன்னர் கனகாட்சகரின் மரு மகளாக ஆக முடியாதது மகேஸ்வர ருக்கு வருத்தம் அளிக்கக் கூடியது தானே!'' என்றான்.

காஞ்சனமாலையோ, ''பத்மமுகி யின் மனம் என்ன நினைக்கிறது என்பது எனக்குத் தெரியும். அவள் தேவசர்மாவை விரும்புகிறாள்.



எனவே அவளை தேவசர்மாவிற்குத் தான் மணம் செய்து வைக்க வேண் டும். அடுத்து மன்னர் எது பற்றிக் கவலைப்படுவார் என்பதும் எனக்குத் தெரியும். அதற்கும் வழி ஏற்பட்டு விடும்,'' என்று எல்லாம் தீர்மான மாகிவிட்டதுபோலக் கூறினாள். இதற்குள் தேவசர்மா ஜல ராட்சஸர் தலைவனைப் பிடித்து இழுத்து வந்து ஜெயசீலன் முன் நிறுத்தினான்.

அவனும் ''தலைவர் காஞ்சன வர்மனையும் பத்மமுகியையும் அழைத்து வர உன் ஆட்களை அனுப்பாவிட்டால் உன் மகன் கதி என்னவாகும் தெரியுமா?'' என்று கடுமையாகக் கூறினான்.

அத்தலைவனும் தன் ஆட்களுக் குக் கட்டளை இடவே, சில நிமிடங்களில் காஞ்சனவர்மனும், பத்மமுகியும் கொண்டுவரப்பட் டார்கள். மன்னன் கனகாட்சன் தன்

மகனைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தான். தான் அறிவித்தபடி காஞ் சனமாலையையும் காஞ்சனவர் மனையும் கண்டுபிடித்துத் தன்னிடம் ஒப்படைத்ததற்காக மன்னன் தன் நாட்டில் பாதியை ஜெயசீலனுக்கு அளிப்பதாக அறிவித்தான்.

சித்தசாதகன் உடனே ''அரசே! காஞ்சனமாலையை ஜெயசீலனுக்கு மணம் செய்து வைத்துவிடுங்கள்!'' என்றான். காஞ்சனமாலை நாணித் தலை குனிந்து கொண்டாள்.

சாதகன் தொடர்ந்து ''பத்மமுகி தேவசர்மாவை மணக்கட்டும். இத் திருமணங்கள் விமரிசையாக நடக் கட்டும். நான் இந்த ஏரிக்கரையில் இருந்து தவம் செய்து காலம் கழிக் கிறேன்,'' என்றான்.

தேவசர்மாவும் ''ஆம். இப்போது எல்லாம் ஒரு நல்ல முடிவை அணுகி விட்டது. ஜெயசீலனுக்குப் பாதி ராஜ்ஜியம் கிடைத்துவிட்டது. அவன் அரசகுமாரி காஞ்சனமாலையை மணப்பது முற்றிலும் சரியே. மேலும் அவள் அவனை மணக்க விரும்பு கிறாள் என்பதையும் இப்போது தெரிந்து கொண்டுவிட்டோம். காஞ் சனமாலையும் சித்தசாதகனும் கூறி யதுபோல நான் பத்மமுகியை மணக்கிறேன். அவளும் என்னை விரும்புகிறாள். இதை அவளோடு பழகிய காஞ்சனமாலையும் அறிந்து கொண்டுவிட்டாள். இதில் யாருக் கும் ஆட்சேபணை இல்லையே!'' என்று கேட்டான்.

கனகாட்சனும் ''எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை. நான் ஜெயசீலனை மகிழ்ச்சியுடன் என் மாப்பிள்ளையாக ஏற்கிறேன்,'' என்றான். மர்மக்குள மகேஸ்வரனும் ''எனக்கும் எவ்வித ஆட்சேபணை யும் இல்லை. என் மகளே தேவ சர்மாவை மணக்க விரும்பும்போது நான் அதற்குத் தடை சொல்ல மாட்டேன்,'' என்றான்.

அதன்பின் கனகாட்சனும் மகேஸ் வரனும் தம் மக்களுடன் புறப்பட் டார்கள். அவர்களை கோலாகல மாக்க குதித்துக் கும்மி அடித்து காட்டுவாசிகளும் ஜல ராட்சஸர் களும் வழி அனுப்பி வைத்தார்கள்.

முடிவுற்றது



